நீக்கும்படியும், அவளது பாத பத்மங்களைத் தொழவும் நினைக்கவும் அருளுமாறும் தமிழ்ச் சுவை யுணராதாரிடம் சென்று யாசிக்க விட்டு விடாது காத்து வாயார வாழ்த்த அருளவும், வீரம் திருஞான மூன்றும் தொண்டருக் களிக்கும் சிறப்புணர்ந்து சரண் சார்ந்த தன்னைத் தேவர் புகழும் தேவிகாக்கவும், ஞானிகளும் கூட வணங்குமாறு செய்த மகிடனை அடக்கி யாண்ட நின் பெருமையை யார் சொல்ல இயலுமெனவும், எரிப்புனல் போலும் பொன்மய வடிவான அம்பிகையைச் சரணடைந்ததாகவும், அறிவின்றிச் செய்த செயல்களை மன்னித்துதவட், வலக்கண் லக்ஷ்மி, இடக்கண் சரஸ்வதி நெற்றிக்கண் ஞான மகள், எனக்கொண்ட மீனாட்சி தாளடைந்த தன்பிறவித் துன்பம் தோன்றுதவாறு அருளவும், அவளது பாதம் போற்றிப் புகழும் திறமில்லாத கரு (வைரம்) வளர்கின்ற மனம் நா இவற்றிடத்தே தங்கிடுமாறும், நவரசங் கூடிய பாலினைப் பாடுவதே பலனாக அருளுமாறும் வேண்டும் பாங்கும்,

மணித்தீவகத்தின் பெருமைகளை ஒவ்வொரு பாடலிலும் எடுத்துச் சிறப்பித்தும் கூறு மழகு அறிந்து இன்புறுவதுடன் மனப்பாடஞ் செய்து தினமும் பாராயணம் ஒரு முறையாவது செய்து வந்தால் எல்லா நலன்களும் பெற்று இன்புறலாம் என்று தோன்றும் படி அமைந்த பாடல்கள் மிகச் சிறப்புடன் காட்சியளிக்கின்றமை, அறிந்து பயன்படுத்துக் கொள்வாராக.

பதிப்பைப் பற்றியன

அரும்பெரும் நூல்களை உரையுடன் உதவல் 215 அருமை நூல்களருளல் 205. அழகிட்டு அரிய பல நூல்களைக் கொடுத்தல் 203 அழகு யாவுமுறத் தகத்தழங்கும் பல நூல்கள் 200. அன்புணர்வால் முதலில் மணிமேகலையை அழகுறவே பதிப்பித்தார் 218 ஆற்றலினால் பதிப்பித்த இலக்கியங்கள் அழகுறவே நமக்களித்த சான்றோர் 218. இலக்கியக் கற்கண்டை நமக்களித்தார் 217 இலக்கியத் தேன் இன்பமென நமக்களித்தார் 218 இன்பமுற முச்சங்க நூல்களென்றே எழிலாகப் பதிப்பித்தளித்த நாதர் 218. இனிதளித்த உ வே சா 218. ஐங்குறு நூறு 210 சங்கத்தின் இலக்கியங்கள் பதிப்பித்தார் 218 பதிப்புள்ள கொங்குவேள் மாக்கதை 220 பரவு சிந்தாமணியைச் சிந்தாமணியாச் செய்தான் 201 பரிபாடல் பேர் பெற்ற சங்க இலக்கியங்கள் பதிப்பித்தார் 218 யாரும் இன்னொருவர் துணையின்றிப் புரித்து கொள்ள இனிதளித்தார் 218. வருத்தம் பாராது அச்சிலே பதிப்பித்தார் 203.

இப்புலவர்கள், கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் வேலை பார்க்க (தமிழ்த் தொண்டாற்ற) அமைந்து அங்கு வந்து குடியேறிய போது குடந்தை ஆதி கும்பேசுவரப் பெருமான்மீது எட்டுப்பாடல்களோ 10 பாடல்களோ இயற்றியுள்ளவற்றில் 7 பாடல்கள் "திருக்குடந்தைச், சம்புவே யெம்பெருமானே" என ஒவ்வொரு பாடலும் முடியுமாறு பாடியுள்ளார்கள்.

பிரம விஷ்ணுக்களாலு மறிய முடியாத பெருமைகொள் மடமை மிக்க யான் புகழ்வதெவ்வாறு? எனவும், மகளிர் பார்வையில் சிக்கி அறிவு மயங்கிக் கெட்ட யான் நின் பாத மடைந்த எனைக் காக்க எனவும், உன்னையறியாமல் வருத்தம் மிக்க யான் உய்வேனு என்றும், பாசரோக முதலியவற்றால் வாடும் யான் அறவழியினைப் பற்றுது தாழ்ந்தவனைத் தொண்டருடன் சேர அருளெனவும், மரண மில்லையென்றவரிடம் சென்று தஞ்சம் என்று சரண் புகுந்த அறிவிலி யான நான் நின் சரண்டைந்தனன் எனவும் எமன் துன்புறுத்து முன் காத்தருள்க உமாபதியே! மாணிக்கம் போல்பவனே! அடியார் மனத்திடத்தனே! புகழ்வோர்க்கெளியவனே எனவும், அடியார் களைக் காப்பவனல்லவா நீ? கைலாஸபதியே. ரிஷபக்கொடியோனே! ஸர்ப்பாபரணனே குற்றமற்றோய் காத்தருள்க எனவும் வேண்டு கிறார்.

தொல்காப்பியம் வெளியிட்ட திரு சி.வை. தாமோதரம் பிள்ளை யவர்கள் காலம் சென்றமை குறித்துப் பாடிய இரங்கற்பாவில் அவ ரது பிரிவு குறித்து வருந்துவது எண்ணத் தக்கதொன்று.

திருவாவடுதுறை ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரிடம் குருவாரத் தில் நேரில் வந்து விண்ணப்பித்துக் கொள்வதாகத் தாம் மேற் கொண்டுள்ள புத்தக யாத்திரை பற்றிய செய்திகளை விவரிக்கும் தனக்கும் ஆதீன கர்த்தரிடம் தமக்குள்ள அந்தரங்க அன்பை வெளிப்படுத்துவதாக அமைந்து காட்சியளிக்கும் எளிமையும் குரு பத்தியும் கொண்ட தன்மையை விளக்குவன ஒருசில பாடல்கள்.

ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் முடி சூட்டு விழாவைப் பாராட்டிப் பாடிய அனந்த கிருஷ்ணையரைப் புகழ்வதும்.

சிவானந்த சாகரயோகியவர்கள் யெழுதி வைத்திருந்த திரு மந்திர உரை வெளிவர. திருக்காளத்தி கோயில் திருப்பணி நடத்திய வர் மரபினர்களான இராமநாதன் அருணசலம் இருவரது முயற்சி யால் சுப்பிரமணிய ஐயர் அவர்களுக்கு உரிமையாக்கி இலங்கை வைத்தியலிங்கவேள் (நைட்டிக பிமசாரி) முதலியோரைப் புகழ்ந்த உரை சிறப்புப்பாயிரம் பொருள் நிறைந்த தொன்றாகும்.

**சில அருஞ்செய்திகள் :**

ஐயரவர்கள் வாக்கால் பண்டிதமணியென்றழைக்கப்படுவதைச் சிறப்பாகப் பண்டிதமணி கருதுவது, ஐயரவர்கள் தமிழிற்கோர்ப் பீடம் என்று மதிக்கப்படுவதைக் காட்டிலும் உலகில் வேறு சிறப் பில்லையென்று பாராட்டப்படுவது, தமிழ் கொண்டிருந்த பல மதிப்புள்ள கலைகள் சிறந்து விளங்கச் செய்வித்த பெருமை, உலகில் மாணவர்கள் கற்கத் தமிழைத்தந்தார் என்பது, ஐயரவர்களைத் தன் வீட்டில்வந்து தங்கியிருப்பதனைப் பெருமையாக நினைத்து வந்து தங்கும்படிச் செய்யுள்மூலம் எழுதிக் கேட்டுக்கொள்வது, வறுமை யளித்த பிரமனை இழிந்தவனாகக் கருதி, தமிழ் கற்கப் பொருளனுப்பி நூல்களைப் பெற முடியாத தனது நிலையைப் புலப்படுத்துவது, பதிற்றுப்பத்து முதலாகிய நூல்களைக் கழிவுநீக்கி அனுப்பிவைக்கு மாறு கேட்டுக்கொள்வது, ஐயரவர்களைக் காமதேனு கற்பகவிருட்சம் பார்வதி முருகன் என்றெல்லாம் புகழ்வதற்கு மகிழ்வது, குமரேச வெண்பாவை அனுப்பியபோது மதிப்புரை வழங்கவேண்டிக் கேட்டுக் கொள்வது, எல்லாமறிந்த மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்க ளிடம் பயின்று சென்னையில் தமிழ்ப் புலமை நடத்தும் அருமை அனைவரிடமும் தயைமிகுந்து விளங்கும் நற்குணப் பண்பை

எடுத்துச் சொல்வது, புலவர்கூடி முடிசூட்டிப் போற்றிக் கொண்டாடும் பெருமை. தமிழ்ச் சங்கம் ஐயரவர்களின்றிச் சிறப்புப்பெறாது என்பதற்குப் பல மேற்கோள்கள் காட்டுவது, லயோலா கல்லூரி மாணவர்கள் ஐயரவர்களின் எண்பதாமாண்டு நிறைவுவிழாவினைச் சிறப்பிக்கும்போது அவர்களுக்குள்ள மொழியில் ஐயம் திரிபு முதலியன இல்லாத புலமை, நூலாசிரியன் உரையாசிரியன் பதிப்பாசிரியன் என்றவகையில் ஒன்றினும் ஒன்று உயர்ந்தது என விளக்குவது, அமுதினுமினிய தமிழே ஐயரவர்களின் உயிர்த்துடிப்பு என்று சிறப்பிப்பது இறையருளால் நரை, திரை, மூப்பு ஆகியவை இல்லாதிருக்கும்படிப் பிரார்த்தித்துக்கொண்டு வாழ்த்து முறை, முக்குலத்தாரும் புகழும் முதற்குலமான பிராம்மணராய் வேதமோதும் மரபினராய் வேங்கடசுப்பிரமணி என்றவரின் குமாரனாய்ச் சாமிநாதன் என்ற பெயருடையவராய் குருவிலக்கணத்தால் சிறந்து விளங்குபவராய்த் தமக்கு உபதேசித்த (பாடங்கற்பித்த பெருமையைப் புகல்வது, தாக்ஷிணாத்திய கலாநிதியென்ற சிறப்புப் பட்டம்பெற்று விளங்குபவர் நெடுங்காலம் வாழவேண்டுவது.

ஐயரவர்கள் பல நூல்களை எங்கெங்கோ சென்று தேடிப் பல நூல்களைப் பதிப்பித்துத் தமிழகத்தின் பண்பை உயர்த்தியதனால் அவர்போல் உழைப்பவர் எவருமில்லையென்று அவரது தொண்டைச் சிறப்பிக்க அவரைச் சுவாமியெனத் தினமும் கொண்டாடுவதே நன்றிக்கடன் என்று அவர் பெயர்பாடுமாறு கூறல், தமிழ்தாத்தா ஐயரவர்கள் வண்டுகள் மலர்த்தேனையுண்டபின் கூடுகட்டி மக்கள் பெற்றின்புற உதவுவதுபோலச் சங்க இலக்கியங்களை அச்சிட்டளித்த பெருமையர் என்பது இவர் சைவராலும் முதலில் மணிமேகலையைப் பதிப்பித்தது பிற மதத்தில் இவருக்குள்ள பெருமதிப்பினை விளக்குவது, பிறருதவியின்றித் தாமே அவரவரும் படித்தின்புற எளியவுரை எழுதியமைத்த சிறப்பு, இவர் ஏடுகளை வீண்போகாமல் கட்டி அச்சிட்டுக்காத்ததனைக் கோபாலன் ஆக்களையும்ஆயர்களையும் குன்றெடுத்துக் காத்த செய்தி, பாண்டவர்க்குக் கண்ணன் நன்மை செய்ததுபோல் உதவியதாக அமைத்துக்காட்டும் உவமைகள் மார்க்கண்டனைக் கூத்தபிரான் கூற்றுவனிடமிருந்து தடுத்துக் காப்பாற்றியதைப்போல, கரையானிடமிருந்து பழுதாகி விடாதபடி ஓலைச்சுவடிகளைக் காத்தமையைக் கூறும் சிறப்பு, திரு. ஞானசம்பந்தப் பெருமான் தமிழையெழுதி நீரிலும் நெருப்பிலுமிட்டுத் தமிழின் பெருமையை நிலைநாட்டியதுபோல இலக்கியத்தேன் இன்பந்தருமாறு உதவிய சிறப்பு, பயிர் வாடிவதங்காது வான்மேகம் மழைபெய்து நன்மை புரிவதுபோல இலக்கியங்களை வெளியிட்டுக் கண்டு காத்துத் தமிழ்த்தாயைத் துலங்கவைத்த பெருமை, தமிழ் அறநெறி ஆற்றல் ஆழ்மானதிறம் அறிவியல் நுட்பம் தெளிவு கொண்டது, இம்மொழி நலம் ஓங்கத் தொண்டுபுரிந்தவர் நிறைகுடம் போன்றவர், தமிழைப்போலவே தமிழகத்தில் நிலையாக விளங்கிவருகிறார் என்பன போல்வன கண்டின்புறுக.

அத்தற்கடையாளமாகச் சிலையாக விளங்கிவருகிறார் என்பது இச்சிலையை அடையாளமாகவைத்து, அதனைக் கொண்டாடிய சிறப்பு விழா நான்று திருமதி. ருக்மிணி அருண்டேல் அவர்கள் தனது வரவேற்புரையில், தினமும் ஐந்து நிமிடமோ, பத்து நிமிடமோ அவரவர் தமிழைப் படிப்பார்களானால் தமிழ் தானே வளரும் என்று எடுத்துக்கூறிய அருமையுரையும் இங்கு நினைவு கூர்வது என்பனபோன்றவை அறியத்தக்கனவாம், இவை போல்வன தமிழின்ப பெறப் பயிலவார் பெறும் நலமாக மெனக் கொண்டு மகிழ்ந்தின்புறுக.

உ

# தனிப்பாடல்கள்

கணபதி துணை

## கணபதி

கட்டளைக் கலித்துறை

உதவிக் குனையன்றி வேருரு மில்லை யுமைபுதல்வா
மதவிக்கிர வேழ முகமுடை யீர்வட மால்வரைக்கே
இதமிக்க பாரதங் கோட்டா லெழுதிய வென்னரசே
கதவிற் கணபதி யேபாலை மேவிய கற்பகமே. 1

உமைமைந்தனே! உதவிக்குஉன்னைத்தவிர வேறு எவருமில்லை. மதநீர் பொருந்திய யானை முகத்தோய். வடக்கேயுள்ள மேரு வில் உயிருக்கு இன்பந்தரும் பாரதத்தைத் தன் ஒரு கொம்பால் எழுதிய எனக்கு அரசாக விளங்குவோய். திருக்கழிப்பாலை என்ற தலத்தில் கதவோரத்தில் விளங்கும் கணபதியே. கற்பகம் போன்றவனே! யான் வேண்டுவன அளித்து அருள். பலவகை இடையூறுகளையும் விலக்கி நன்கு நிறைவுறச் செய்க.

பாலை–திருக்கழிப்பாலை. சிதம்பரத்தின் தென்கிழக்கே 7 மைலில் உள்ள தலம். இவ்வூர் மூர்த்தி, இப்போது சிதம்பரத்தின் தென்கிழக்கேயுள்ள சிவபுரி என்ற தலத்தில் தனி ஆலயத்தில் உள்ளது. சிவலிங்கம் சிறியது. வெண்ணிறமானது, வான்மீக ரிஷி பூசித்த தலம்,

கதவினருகே யுள்ளவர் கற்பக கணபதி.

வெண்பா

கொம்பொன்று காலிரண்டு கோலவரிக் கண்மூன்று
அம்பவள நால்வாயோ டைந்துகரன் – கும்பக்
குறடெறட வறடுருவி குடவயிறு நெறுநெறென
வறகுறுடு நெறுடுவயி றன். ௨

(பகைவரது) குடம்போலும் வயிறு நெறுநெறுஎன முறிய; அச்சந்தோன்றப் பகைவரைக் கால்களால் நெருடும் பருத்த வயிறுடைய விநாயகன், பாரதம் எழுத ஒரு கொம்பை எழுத்தாணி யாகக் கொண்டமையான் மிகுந்ததான கொம்பு ஒன்றுடையான், கால்கள் இரண்டு உடையான், அழகிய (சிவகணநாதனுதலின்)

நெற்றிக்கண் கொண்டவன். கோடுகளுடைய கண் மூன்றுடையான்;, அழகான தொங்கும் வாயான்; ஐந்து கைகளையுடையான்.

இவன் துன்பம் நீக்கி இன்பம் அளிப்பான் என்பது குறிப்பு

ஒன்று முதல் ஐந்து முடிய எண்கள் இப்பாவில் அமைக்கப்பட்டுள்ளன. பின் இரு சீர்களில் யானையின் வீரம் தோன்ற வல்லின எழுத்துக்களாலான சொற்கள் பயின்று வந்தமை அழகாம். இப்பாடலில் வெண்பாவுக்குரிய இலக்கணம் இல்லை. மூலத்தில் உள்ளபடி பதிப்பிக்கப்பட்டுள்ளது.

பழங்காலங்களில் வள்ளல், பிரபு, கோயில், அரண்மனை ஆகிய இடங்களில் முன் வாயிற்படியில் மூன்று, ஐந்து ஏழு, ஒன்பது பதினொன்று நிலை மாடங்கள் உண்டு. மாடங்களின் மேல் கும்பம் (கலசம்) வைத்திருப்பர்.

சுவாமிக்கு அபிடேகம் செய்ய யானைமீது குடத்தில் நீர் கொணர்வர், அதற்கும் கும்பமென்று பெயர்.

தலைவணங்காத பகையரசர் தன்பணிவைத் தெரிவிக்கத் தம் தலைகளில் குடத்தில் நீர் ஏந்திவருவர். அதன் முன்போ, பின்போ வரும் பட்டத்து யானை, அக்கும்பத்தை இடறி விழச் செய்வதும் மரபு. (இது தோல்வியுற்ற மன்னனை அவமானப் படுத்தும் அடையாளம்.)

கட்டளைக் கலித்துறை

அல்லமர் கண்டத் தரனடி யேதின மர்ச்சனைசெய்
நல்லவர் தேசிகர் நாவலர் நாளுமே நாடிவந்தோர்க்
கில்லையென் னுத வியன்மர பாள ரிருக்கும்வல்லை
செல்வ விநாயகன் பாதார விந்தம் திருத்துணையே. 3

இருள்போலும் கழுத்தினையுடைய சிவபெருமானது பாதத்தையே ஒவ்வொரு நாளும் மலர் இட்டு அருச்சனை செய்க. நல்லவர்களுக்கும் குருவிற்கும், நாவால் பாடவல்ல புலவர்களுக்கும் நாடித் தேடிவருபவர்களுக்கும் இல்லையென்று வாயால் கூறுது, அளிக்கும் (இயல்பான கொடுக்கும் குணமுடைய) மரபினர் இருந்து விளங்கும் வல்லை என்ற தலத்தில் சிறக்கக்காட்சிதரும் செல்வவிநாயகன் என்ற பெயருடைய இறைவன் பாத தாமரையாகிய அழகிய பாதம் இரண்டுமே துணையாம்.

வல்லை – வல்லை என்ற ஊரில் காளத்தி என்ற பெயருடன் வாழ்ந்த வள்ளல், கல்விமான்களுக்குப் பொன்பொருள் அள்ளிக் கொடுத்த கையே கை; பிற, வேங்கை அலகை முகை வேட்கை பலகை காங்கை அழுகை விழுகை போன்ற

கைதான் என்ற கருத்தைத் தரும் பாவொன்று பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் பாடல் என்று 141-வது செய்யுளாக எடுத்து விளக்குகிருர் கு. அழகிரிசாமி அவர்கள் தமது **தமிழ் தந்த கவியமுதம்** என்ற நூலுள்.

இவ்வூர் விநாயகர் பெயர் செல்வ விநாயகர், இஷ்டசித்தி விநாயகர் என வல்லைஸ்தல புராணம் கூறும்.

வல்லை - திருநின்ற வூரினரான காளத்திமுதலியாரை விவரிக்கும் இவர் இருப்பு, வல்ல மெனவும் படும் என்று கூறும் குறிப்புக் கொண்டு, திருவல்லம் என்ற தலம் பற்றி இங்குக் குறிப்புத் தரப்படுகிறது.

வல்லை-வல்லம்-திருவலம் எனவும் வழங்கும். நவக்கிரகங்களும் வல்லாளன் என்ற அரசனும் பூசித்த தொண்டை நாட்டுத் தலம். கஞ்சனென்னும் அசுரனைச் சங்கரித்த தலம்.

நந்தி கிழக்கு முகமாகவும், சுவாமி மேற்கு முகமாகவுமுள்ளார். சுவாமி-வல்ல நாதேசுவரர்; இறைவி-வல்லாம்பிகை; சுந்தரி. தீர்த்தங்கள் சிவகங்கை, சிவா நதி - கௌரி தீர்த்தம்; தலவிருட்சம்-வில்வம்; இக்கோயிலிலுள்ள விநாயகர் வடதிசையை நோக்கி வீற்றிருப்பது, உலகம் கடத்தலைக் குறிப்பிடும்.

ஞான சம்பந்தரும் அப்பரும் பாடிய தலம். சுந்தரரும் பாடியிருப்பதாகப் புதுவை சிவானந்த மூர்த்தி நாயனுர் இயற்றிய சடையீசர் வல்ல ஸ்தல புராண மூலம் அறியப்படுகிறது. இவ்வூர் பெண்ணை ஆற்றின் மேற்குக் கரையில் உள்ளது. ஆற்று நீர் உடல் நலந் தரும்.

இங்குள்ள மலையின் பெயர் கஞ்சராக்ஷசன். இங்குத் தோண்டினுல் ஒன்றன்மீது ஒன்ருய் மூன்று அந்தஸ்துகளைக் கொண்டு காணப்படுகிறது. பருவத லிங்கம் என்றும் அதனைக் கூறுவர்.

## திருப்போரூர் முருகன்

வெண்பா

ஆகாப் புகையிலையை யாரோ பயிரிட்டான்
போகாப் பொறியாச்சே போரூரா – வேகாத
கண்ணெல்லா நீர் சொரியக் கண்டவரெல்லாம்நகைக்க
எண்ணமெலாம் போராடு தே 4

போரூரில் விளங்கும் முருகனே ! உடலுக்கு ஏற்றுக்கொள்ளாத புகையிலையை எவனோ பயிரிட்டான், போக்க முடியாத குழிப்புண்கள் நாவில் ஏற்பட்டு விட்டதே. வேக்காடு மிகுதியால் கண்ணில் நீர் பெருக, பார்ப்போர் பரிகசித்துச் சிரிக்க எண்ணமெல்லாம் போராடுகிறதே, என்செய்வேன் அப்பனே. என்னைக் காக்க என்பது எச்சம். துன்பம் தாங்காமல் முருகனை நினைந்து பாடிய பாடல்.

திருப்போரூர் **யுத்தபுரி** என்றும் பெயர் பெறும். வெள்ளையார் ஓடை, சரவணப் பொய்கை என்ற தீர்த்த விசேடம் பெற்றது. வேப்பமரம் தல விருட்சம். திருக்கழுக்குன்றத்திற்குத் தென்கிழக்கே உள்ளது. சுயம்பு லிங்கம் பெற்ற தலம். சுவாமி - மகேசுவரர், அம்பிகை—ஸ்ரீபாலாம்பிகை. திருமகளால் பூசிக்கப்பட்ட தலம். அதனால் **ஸ்ரீபர்வதம்** என்றும் பெயர். முருகன் அசுரர்களைத் தாக்கிய இடம்.

### தணிகைக் குமரன்

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

மண்ணாசை பொன்னாசை மக்களாசை
வயதாசை வடிவாசை யணியினாசை
பெண்ணாசை மனையாசை யுலகை யாளும்
பேராசை கொண்டுபிறந் திறக்குந் தீயேன்
விண்ணாசைப் படுந்தேவாம் கையைச் சாடி
விண்ணுலகைப் பணித்தருளும் விசாகன் வீணைப்
பண்ணாசைப் படுந்தணிகைக் குமரன் பாதம்
பாவித்தே னென்பிறப்பைக் கோவித் தேனே 5

மண், பொன். மக்கள், வயது, வடிவு, ஆபரணங்கள், பெண், வீடு, இவற்றை யடைய வேண்டு மென்ற ஆசை, உலகமுழுவதையும் ஆள வேண்டும் என்ற ஆசையுடன் பிறந்து இறந்து உழலும் தீவினையேன், தேவலோகமளிக்கும் விசாக நட்சத்திரத்தில் தோன்றிய முருகன் அருளால், வீணையிசையில் ஆசைப்படுகின்ற திருத்தணிகை வாழ் குமரன் பாதத்தை எப்போதும் நினைந்து எனது பிறப்பைக் கோபித்துக் கொண்டேன்.

திருத்தணிகை குமரன் எழுந்தருளியிருக்கும் ஆறுபடை வீடுகளுள் ஒன்று. தணிகாசலபதி என்பது இறைவனின் பெயர். சூரனுடன் போரிட்டுப் பின் வீற்றிருந்த இடம். செரு - போர், தணி - தணிவது. போரிட்டு அமைதியாக இருந்த தலம். அருணகிரி நாதர் திருப்புகழ் பெற்ற தலம்.

இப்பாடலில் ஆசை என்ற சொல், அதே பொருளில் பல முறை வந்ததால் சொல் பொருட் பின் வருநிலையணி.

சாடுதல் - அழித்தல், விசாகம்-முருகன் தோன்றிய நட்சத்திரம். முருகனுக்கு வீணை இசையில் விருப்பம் அதிகம். "குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்" எனவரும் திருமுருகாற்றுப் படை பாடிய நக்கீரர் வாக்கானும்,

"உள்ளமொ டங்ஙன முலாவி னுனவன்
நள்ளிட னடைந்துகின் னரஞ்செய் தானவன்"
(முதல்வன் புராண முடிப்பு செ. 5) குமார சுவாமீயம் பாடிய பாம்பனடிகள் வாக்கானும் உணரப்படும்.

வெண்பா

மறைநான் முகப்பிரமன் மாலு மறியாவென்
பிறைவேணியன்றருவேற்பெம்மான்-நறைமலர்ப்பொன்
தாள்பணிவோர்க் கென்றும் சௌபாக் கியமெந்
நாளுமுள வாகும் நயந்து. 6

நால் வேதங்களையும் நான்கு முகங்களா லோதும் பிரமனும், திருமாலும் அடிமுடி தேடி அறியாத (எனது) பிறைச் சந்திரனைச் சடைமுடியில் கொண்டு விளங்கும் பரமன் பெற்றெடுத்த வேலேந்திய முருகப்பெருமான், புதுமலர் சூடிய அழகிய பாதம் பணிபவர்க்கு எப்பொழுதும் எல்லா நலன்களும், எந்தக் காலத்தும் இருந்து கொண்டேயிருக்கும்.

பிரமன் மால் - அடிமுடி தேடியவரலாறும் பிறையைச் சிவபெருமான் சூடிய வரலாறும் இப்பாவுள் உள. சௌபாக்யம் - மங்களங்கள் முழுவதும்.

அம்பிகை பாகன்

கட்டளைக் கலித்துறை

கச்சிக் கிடக்கின்ற கனதனத் தீரிரு கண்கள் பட்டு
இச்சித்திருக்கின்றவேழைநெஞ்சேவிமையோன்பயின்ற
பச்சைப் பசுங்கொடி யுண்ணு முலைபங்கன் பாதத்திலே
தச்சுக் கிடமன மேயுனக் கேதுந் தவ றில்லையே 7

வாடி வதங்கிப் போயிருக்கின்ற முலையுடைய பெண்டி ரின் இருகண்கள் பட்டு நீ விரும்பியிருக்கின்ற அறிவில் லாத மனமே! இமையாத நாட்டமுடைய சிவபெருமானு டன் கூடிய பச்சை நிறக் கொடிபோலும் இடையையுடைய உண்ணுமுலை பங்கன் பாதத்தில் பொருந்தியிரு, இதனால் உனக்கு எவ்விதத் தீமையும் இல்லை. நன்மையே விளையும்.

தச்சுக் கிடத்தல்-பொருந்தியிருத்தல். கச்சி என்று கொள்ள, ஒட்டிப் போன என்று பொருள். கச்சு – முலைமேல் அணியும் இரவிக்கை.

ஏழை நெஞ்சே - ஏழை - அறியாமை. பச்சைப் பசுங்கொடி - பச்சைப்பசேல் என்பது உலக வழக்கு.

**திருவண்ணாமலை** — மகதநாடு (அல்லது) நடுநாட்டுத் தலம் இது. பிரம விஷ்ணுக்களுக்கிடையே சோதி வடி வாய்த் தரிசனந் தந்த தலம். உமை இறைவனது முக்கண்ணைப் புதைத்த பாவம் விலகப் பூசித்து இடப்பாகம் பெற்ற இடம். மலைவலம் வந்த புழுகுப்பூனை, குதிரை நற்பதம் பெற்ற தலம். சைவ எல்லப்ப நாவலர் அருணசலபுராணம் பாடியருளி னர். தேயுலிங்கம், சூட்சுமலிங்கம். சுவாமி:- அருணசலேசர். இறைவி - உண்ணுமுலை. சிவகங்கை முதலான தீர்த்தங்கள் பல உள. அருணகிரிநாதர் முருகன் அருள் பெற்ற இடம்.

திருநெல்வேலி மாவட்டத்திலும் இவ்வம்மை பெயர் பெற்ற தல முண்டு.

## திருப்பனங்காடு

(வெண்பா)

கலைமகளும் பூமகளும் கைகோத்து நிற்கச்
சிலைமதவே ளூழியங்கள் செய்ய - நிலைபெறவே
கொம்மைத் தனங்கள் குலுங்கத் திருப்பனங்காட்(டு)
அம்மச்சி வாராளத் தேர். 8

சரஸ்வதியும் இலக்குமியும் இரு பக்கங்களிலும் கைகோத்துவர வில்லேந்திய மன்மதன் தொண்டு செய்ய, முலைகள் அசைந் தாட, திருப்பனங்காட்டுள் எழுந்தருளியிருக்கும் இராஜ ராஜேசுவரி தேரில் அமர்ந்து வீதிஉலா வருகின்றாள்.

இராமநாதபுரம் பக்கங்களில் தந்தையை நகரத்தார் (நாட்டுக் கோட்டை செட்டிமார்கள்) அப்பச்சி என்று கூறி அழைப் பார்கள். இது இன்றும் வழக்கிலுள்ளது. அதுபோல் தாயையும் அம்மச்சி எனப் புலவன் வழக்கத்திலில்லாவிட்டாலும் கூறிய தறிக. தாயை ஆச்சி என்றே கூறுவது வழக்கமாக இருந்து வருகிறது.

அப்பச்சி - தந்தை என்பது போல், அம்மச்சி - தாய்.
"வன்பார்த்தான் பனங்காட்டூர்" என்பது, திருப்பனங்காடு.
இத்தலம் கண்ணுவரிஷி நிவேதனம் செய்ய, கிடைத்த பனம் பழத்தைப் பெற்று சிவன் மகிழ்ந்த தலம், இன்றும், பனம் பழம் நிவேதனமுண்டு. சுவாமி பனங்காட்டீசுவரர், தேவி பெயர் - அமிர்தவல்லியம்மை ; தலவிருட்சம் - பனைமரம். இதற்கு ஒரு மைலில், சுந்தரர் இவ்வழி வந்தபோது இறைவன் அந்தணராய்க் கட்டமுது (கட்டுச் சோறு) அளித்த தலம். காஞ்சிபுரத்திலிருந்து தெற்கே 8 மைலில் உள்ளது.

(வெண்பா)

அண்டத் துறையுயிர்க்கு ளாதார மாகின்ற
தொண்டைக்கனியதரச்சொல்லமுதே!·தொண்டுபண்ணி
வந்தனம்பு ரிந்துபணி யுந்தமிய னென்றனுடைச்
சிந்தையிலி ருந்துக்ருபை செய், 9

எல்லா அண்டங்களுள்ளும் தங்கியிருக்கும் உயிர்களுக்குள் (காரணமாய்) ஆதாரமாய் அமர்ந்த கோவைக் கனிபோலும் உதடுகளையுடைய சொல்வடிவமாகிய அமுதமே! தொண்டு செய்துவணங்கி நமஸ்கரிக்கும் தனியவனான என் சிந்தையில் அமைந்திருந்து கருணை செய்க.

சொல்லை அமுதமென்றது உருவகம். அமுதம் இறவாத சிறப் பளிக்கும். அதுபோல் கலைமகள் அமுதம் எனப்பட்டாள். அண்டம் - பல பல, அளவிலடங்கா அண்டங்கள் ஆயிரத் தெட்டு என்க.

## திருவொற்றியூர்த் தியாகராசர்

(ஆசிரிய விருத்தம்)

அரும்பெ றற்சி ருர்த வழ்ந்த டிப்பொ டிக்குள் மூழ்கவும்
அரிவை மார்மு லைக்கி டும்ப டீரதூளி மொய்ப்பவும்
பொருவி லாதயானை வாசி சேனை யின்ப ராகமே
பொதுள வந்தி ருந்தவம்பு ரிந்து போக வைப்பரோ
கருவி மூாதவகைந மக்கு மால யன்பு ரந்தரன்
கரங்கு வித்துளங் கனிந்து கண்குளிர்ந்துப்பங்குனித்
திருவி மூாவெழுந் தருழி யுடலை மூட விடுவரோ
தெரியு மோதி யாக ராசர்திருவு ளச்செ யற்கையே. 10

பெறுதற்கரிய சிறு குழந்தைகள் தவழ்ந்து பாததூளிக்குள் மூழ்கிக் கிடக்கவும், மகளிரது முலைக்கு இடும் சந்தனப்பொடி (தூசு) நெருங்கவும், ஒப்பில்லா யானை, திருவாசி, சேனைகள் யாவும் காணுமல் வீணுகப் போகும்படி செய்வாரோ? தாய் வயிற்றுக் கர்ப்பத்தில் மறுபடியும் விழாதபடி நமக்குத் திருமால் பிரமன் இந்திரன் முதலானேர் கைகூப்பி, மனம் மகிழ்ந்து கண்களால் பார்த்து இன்புற்று, பங்குனி மாதத்தே உத்திர நட்சத்திரத்தினை அடிப்படையாக வைத்து முன்னதாகவே பத்து நாட்கள் கொண்டாடும் அறுபத்து மூவர் திருவிழா தோன்றியதைக் கண்டபின் பலகாலமாக எடுத்த உடலை மறுபடியும் மாயையால் மூடும்படி விடுவார்களோ? தியாகராஜப் பெருமானது மனத்திலுள்ள கருத்துக் கண்டறிய முடியுமோ? ஒருவராலும் அறிய முடியாது.

## திருவொற்றியூர்ச் சிவன்

வெண்பா

மாடொழிய மும்மதஞ்சேர் வாகனத்தி லேறினரோ
ஓடொழியப் பொற்கலத்தி லுண்டாரோ - நாடறியத்
தென்கண்ட சோலைத் திருவொற்றி யூருடையார்
என்கண் டிவராடு றூர். 11

எப்போதும் ஏறிவரும் மாடாகிய ரிஷப வாகனமின்றி, கன்ன மதம், கபோலமதம், பீஜ மதம் என்ற மும்மதம் பொழியும் யானை வாகனத்தில் ஏறி வீதி வலம் வந்தாரோ? திருவோடு கையில் (பிரமன் தலை ஒட்டிக்கொண்ட பிரம கபாலம்) நீங்கப் பொன் கிண்ணத்தில் உணவு அருந்தினுரோ? உலகமறிந்த தேன்பொருந்திய மலர்ச்சோலையுடைய திருவொற்றியூரில் விளங்கும் தியாகராஜப் பெருமான் எதனைப் பார்த்துவிட்டு இப்படி ஆட்டம் போட்டுக் கொண்டிருக்கிறுர் ? தெரியவில்லையே !

தேன், தென் என மோனைக்காக அமைந்தது.
ஆடுகிறுர் என்பது ஆடுறுர் என்று வந்தது.
சிவபெருமான் எப்போதும் ரிஷப வாகனத்திலேயே தான் எழுந்தருளுவார். யானை வாகனம் பார்வதிக்கும் உரியது. மாருக ஏறி வந்ததால் இப்படி ஆடுகிறுரோ? யானை சதா ஆடிக் கொண்டே இருக்கும். அதன் குணம் அது. அதன்மேல் ஏறியதனுல் அது ஆடுகிறதுபோல் தானும் ஆடுகிறுரா ?
இங்குள்ள 'தியாகர், இந்திரன் முசுகுந்த சக்கரவர்த்திக்கு அளித்த தியாகராசருள் ஒன்று, தியாகேசர் நடனம் இங்குச் சிறப்பு. அதற்குக் காரணம் புரியவில்லையே என்று ஐயம் தோன்ற உரைத்தபடியாம், ஐயவணி.

இங்கு நடைபெறும் நடனம் குந்தியாடிய நடனம் எனப்பெயர். இருந்தாடழகர் என்று இம்மூர்த்தியைக் கூறுவர், "உச்வாஸ நிச்வாஸ நடனம்" என்று வடமொழியில் கூறப்படும்,
உற்சவகாலங்களில் மட்டுமே, இரண்டு மூன்று முறைகளே இந் நடனம் நடைபெறுகிறது. முன்பு அமாவாசை தோறும் நடைபெற்று வந்ததாகத் தெரிகிறது.

தியாகராஜர் திருவிழாக் கண்டவர்களுக்கு மறுபிறவி இல்லை' ஒற்றியூர் ஆதிசேடன் பூசித்த தலம். சுந்தரர் சங்கிலியாரை மணக்கச் சூள் கூறிய தலம். பட்டினத்தடிகள் முக்தி பெற்ற தலம். சுவாமி - படம்பக்கநாதர், மாணிக்கத்தியாகர். தேவி- வடிவுடையம்மை. தலவிருட்சம் - ம கி ழ ம ர ம். தீர்த்தம் - கிருபா தீர்த்தம், கலைவாய்த்தீர்த்தம்.

கலிய நாயனர் திருவிளக்குத் தொண்டு செய்த இடம். சுந்தரர் மகிழமரத்தின் கீழ்ச் சங்கலியாருக்கு வாக்களித்தமையொட்டி மாசி மாதத்தில் மகிழடிசேவை என்ற உற்சவம் சிறப்பாக நடைபெறும். மூலவர் புற்று வடிவினர்.

வாசுகியை இறைவன் தன் உருவில் சேர்த்துக்கொண்டதால் படம்பக்க நாதர் என்பது காரணப் பெயர். இங்குள்ள தியாகர் ஏலேல சிங்கருக்கு மாணிக்கங்கள் தந்தமையால் மாணிக்கத் தியாகர் என்ற பெயரும் காரணப் பெயரே. இந்தத்தலத்துக்கு ஆதிபுரி, வேறு பெயர். வட்டப்பாறை அம்மன், துர்க்கை சந்நிதி மிகவும் சிறப்புடையது. மாந்தாதா, தலங்களின் கட்டளைகளைக் குறைத்து எழுதச் சொன்னன். 'திருவொற்றியூர் நீங்கலாக' என்று ஏட்டில் வரி பிளந்து இறைவன் எழுதியதால், எழுத்து அறியும் பெருமாள் ஆயினர். பிரளயத்தை மேல் வராமல் தடுத்ததால் ஒன்றியூர் என்ற பெயர் அமைந்தது. இத்தலத்தில் இருபத்து ஏழு நட்சத்திரங்களுக்கும் தனித்தனி இடம் மதிள் ஓரமாக அமைக்கப்பட்டிருப்பது சிறப்பு. ஆதி சங்கரர் பிரதிஷ்டை செய்ததாக மரபு.

## திருக்கச்சியேகம்பர்

### கட்டளைக்கலித்துறை

நல்லா யெனக்கொரு மன்னுட்டுத் தந்தருள் ஞானநெறி
இல்லா வெனைக்கொடு போம்பொழுதேயியல் பூசைதவம்
செல்லா நாக்கோவில் பலகலை ஞான தோத்திரமும்
எல்லா முடிந்தபின் கொல்லுகண் டீர்கச்சி யேகம்பனே.

காஞ்சிபுரத்தில் விளங்கும் ஏகாம்பர நாதனே. தந்தையே! எனக்கு ஒரு மன்னிப்பைக் கொடுத்தருள்க. ஞான வழியில் செல்லாத என் (உடலிலிருந்து) உயிரைப் பிரித்து எடுத்துக் கொண்டு செல்லும்போது, இயல்பாகச் செய்யும் பூசைகள், தவங்களில் செல்லமாட்டார். நாவினுல் கோவிலையும் பலகலை களையும் ஞானம் வருவதற்குக் காரணமான தோத்திரங்களையும் அறிந்தபின் அழைத்துக்கொண்டு செல்க.

தள்ளா - தல்லாளன அழைக்கப்பட்டது. கொல் என்பது கொல்லு என வந்தது. நில் என்பது நில்லு என்பதுபோல். ''நல்லாய் எனக்கு'' எனத் தொடங்கும் பட்டினத்துப் பிள்ளையார் பாடல் போல் இப்பாடல் வேருருவரால் பாடப் பட்டுள்ளது போலும்.

தொண்டை நாட்டுப் பிரசித்திபெற்ற பல்லவன் தலைநகர் காஞ்சி. சிவ, வைணவ தலம். இறைவன் - ஏகாம்பர நாதர். அம்பிகை - ஏலவார் குழலி; காமாட்சி அம்மை.

தீர்த்தம் - கம்பா நதி, பாலாறு. தலவிருட்சம் - மாமரம். ஐந்து பூததலங்களுள் பிருதிவி தலம். தேவி சிவனைப் பூஜித்து 32 அறங்கள் வளர்த்த பெருமையான இடம் 'நகரேஷு காஞ்சி' என்பர் வடமொழியாளர். முத்தி தரும் தலங்கள் ஏழனுள் ஒன்ருகக் கருதப்படும் பெருமைமிக்க தலம். இப்போது பெரிய காஞ்சி, சின்ன காஞ்சி என்று இரண்டாக விளங்குகிறது. இத்தலத்தில் கச்சியப்பர் காஞ்சிப்புராணத்தை இயற்றிப் பெருமைப் படுத்தினர். சுந்தரர் இடக்கண் பெற்ற தலம். 108 கோயில்கள் உண்டு.

### கருமுரட்டீசன் மீது பாடிய

வெண்பா

கள்ளிதனை மாலாக்கிக் காலில் விலங்காக்கி
பிள்ளைக் கடையாணி பின்னுக்கி – மெள்ள
கருமுரட்டி லீசனைக் கற்பித்த நேர்மை
படுகுழியில் பாச்சினத்தைப் பார், 13

கள்ள மனமுடைய பார்வதியைக் காமமயக்க முடையவளாகச் செய்து, காலுக்கு விலங்குபோல் செய்து, மூத்த பிள்ளை இளைய பிள்ளையார்களான, விநாயகன் முருகனை இருபக்கங்களிலு மமைத்து, மெதுவாய்க் கருமுரடு என்ற தலத்துள்ள இறைவனை

அமைத்த முறை, குடும்பம் என்ற பள்ளமாகிய குழியில்தள்ளிவிட்ட நிலையைக் காண்.

கள்ளித்தனத்தையுடைய பார்வதியை இடப்பாகத்தே உடையவன் சிவன். சிவன் பார்வதி வேறுவேறு என்று சைவர் கூறுர், கள்ளியைத் திருமாலாக்கி எனவும் கொள்ள இடமுண்டு. பார்வதி, திருமால் வேறு இல்லை என்ற கருத்தோடு பார்க்க இப் பொருள் அமையும். பிள்ளை-சுப்பிரமணிய சுவாமி, விநாயகன், மூத்தபிள்ளை, இளையபிள்ளை இருவரையும் முன்னும் பின்னும் வரும்படி செய்து; சுவாமி வீதிவலம் வரும்போது விநாயகன் முன்பும், சுவாமியும், அடுத்து அம்பாளும், பின் சுப்பிரமணியரும் வருவதை இங்கு மனதில் கொண்டுகாணப் பொருள்தெளிவாம்.

கள்ளிச் சாற்றைக் கலக்கிப் பருகியதால் ஏற்பட்ட பைத்தியத் தினல் காலில் விலங்கிட்டு, குழந்தைக்கு வாய் திறப்பதற்காக வாய் ஓரத்தில் அச்சாணியிட்டு, மெதுவாகக் கடுமையான முரட்டுத்தலைவனுக்குப் பாடங்கற்பிக்க, குற்றமுடையபிறவி என்ற பள்ளத்தில் விழச்செய்ததை நேராகக் கவனித்துக்கொள் என்று ஒரு குறிப்புப் பொருள் தோன்ற உளது இப்பாடல்.

## திருக்கோகர்ணம்

கட்டளைக் கலித்துறை

திருக்கோ கர்ணச் சிவனேயென் மட்டும் சித்தஞ்சுத்த
உருக்கோ கருணை குறித் தல்ல வோவெனதூழ்வினையின்
பெருக்கோ கருணைப் பெரியாயி சித்தமும் பேதித்தகம்
பருக்கோ கருணைப் பயோததி யாடும் பருவமுமே, 14

திருக்கோகர்ணத்தில் விளங்கும் இறைவ! என் வரை உனது உள்ளம் காதில்கேட்டு உருகவில்லையோ. நீ கருணையை யுடையவனல்லனோ! என் ஊழ்வினை காரணமாக ஏற்பட்ட வினைவோ? கருணையையுடைய பெரியோனே! உள்ளம்மாறி மனமகிழ்ந்து கருணையாம் பாற்கடல் ஆடும் பருவம் வளரவில்லையா?

கோகர்ணம்-புதுக்கோட்டைக்கு அருகில் உள்ளது. சிவபெருமானிடமிருந்து இராவணன் பெற்றுவந்த இலிங்கத்தைத் தேவர்களின் விருப்பப்படி விநாயகன் பிரதிஷ்டை செய்த லிங்கம் இது. இராவணன் பெயர்த்தெடுக்க முயன்றும் முடியாமல் அவன் "**மகாபல லிங்கம்**" என்றதால் இறைவனுக்கு **மகாபலநாதர்** எனப்பெயர். பசுவின் காதுபோல் லிங்கம்

விளங்குவதால் கோகர்ணம் எனப் பெறும். இங்கு இருகைகள் உடைய விநாயகனுக்குத் தனி கோவில் உண்டு. சிவராத்திரி இங்கு மகாவிசேஷம். மேற்குப் பார்த்த சந்நிதி. இங்கு யாவரும் இறைவனுக்கு அபிஷேகம் செய்யலாம்.

தலபுராணம் தனியே உண்டு. அம்பிகை - கோகர்ண நாயகி. தீர்த்தம்; கோடி தீர்த்தம். (காசி ஸ்ரீசைலம் போன்ற சிறப்புடைய தலம்.

### வேத சாட்சியாய் விளங்கும் நடராசப் பெருமான்

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

ஆட்டுக்கா றனைத்தூக்கி மறைக்கரியா னம்ப
லத்தி லானு னென்றே
காட்டுக்கா லெனப்புலியும் பாம்பும்வந்து
பயங்காட் டத் தாரான்
பாட்டுக்கா யிரந்தரவோ மீனாட்சி சுந்தரநின்
பனுவற் காகத்
தோட்டுக்கா தன்கழலைத் தூக்கியிது பரிசெனவுஞ்
சொல்லு வானே. 15

நடனம் ஆடுகின்ற காலைத் தூக்கித் வேத சாட்சியாக விளங்கும் பொன்னம்பலத்தி லாடுபவனாக ஆனான் என்று, புலிக்கால் முனிவனான வியாக்கிரபாத முனிவனும், பதஞ்சலி முனிவனும் வந்து காணுமாறு நடனமாடவும் கொன்றை மலர் மாலையை யணிந்தோன். ஒரு பாடலுக்கு ஆயிரம் தரலாமா? மீனாக்ஷி சுந்தரனே! உமது பாடலுக்காக. தோட்டினை யணிந்த காதினையுடையான் கழலணிந்த பாதத்தை உயர்த்திய தன்மை இது எனவும் கூறுவான். எடுத்துக்காட்டிற்கு ஆதாரமென்று சொல்லும்படி.

ஆட்டுக்கால் - ஆட்டினது கால் எனவும். நடனமாடும் கால் எனவும் சிலேடை. மறைக் கரி - வேதசாட்சியான இறைவன் ஆட்டுக்கால் என்றதற்கு ஏற்ப மறைக்கரி (மறைக்க வேண்டிய மாமிசமான கறி எனவும் சிலேடை. காலைத் தூக்கியமையால் அம்பலத்திலானான் என்பது பலரும் பார்க்குமாறு சபைக்கு எல்லாரும் காணும்படி வந்து விட்டான் என்பது நயம். ஆடியதற்குப் பரிசாகக் காலைத்தூக்கிக் காட்டுவது என்பது குறிப்பமைந்த நயம்.

தோட்டுக்காதன் - "தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடி" (சம்ப. தேவாரம்)

சிதம்பரம்:- புலியூர், தகராகாசம், புண்டரீகபுரம் எனப் பல பெயர்களுண்டு. ஆகாசத்தலம், கோயில் என்று வழங்கப் பெறும். சுவாமி - சபாநாயகர். அம்பிகை-சிவகாமியம்மை. திருமூல நாயகர், உமா எனவும் படும். சிவகங்கை முதலான பல தீர்த்தங்கள் உண்டு.

சபை - கனகசபை. பொன்னம்பலம் எனப்படும். சிவன் நடமிடும் தலம். வியாக்ரபாதர் பதஞ்சலி இவர்களுக்காக நடனமாடிய இடம். உபமன்னியு ரிஷி, பாற்கடல் பெற்றுண்ட தலம். வியாசர், சுகர், சௌனகர், சூதர் முதலானோர் பூசித்த பெருமையுடையது. துன்மதன், துற்றெரிசனன், துச்சகன், ஆகியோர் முத்தி பெற்ற இடம்.

தில்லை வாழ் அந்தணர் பூசிக்கும் தலம். சுந்தரர் சிறப்பித்த தலம். ஒரு மைலில் பத்திர காளி கோயில் உண்டு. சிதம்பர புராணம், புலியூர்ப் புராணம் என இவ்வூருக்குத் தலபுராணங்கள் உள்ளன.

**'பாட்டுக்காயிரம்'** பதிற்றுப்பத்தில் பெருஞ்சேரல் இரும்பொறையை அரிசில் கிழார் பாட, அவன் ஒன்பது நூறுயிரம் பொற்காசும் தன்னுட்சியும் புலவருக்குஅளித்துப் பெருமைப் படுத்தியமை கொண்டு இப்பாடலுள்வரும் 'பாட்டுக்கு ஆயிரம்' என்ற தொடருக்குப்பொருள் காணப்பட்டது.

## சிவனைக் காணும்போதும் இளம் பெண்களைக் காணும் போதும்

*அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்*

இளமடவார் தமைக்காணிற் பல்காட்டிக்
கால்பிடிப்ப ரென்று மீதூண்
தளமலர்த்தாள் கருத்தில்வைத் துச்சங்கரா
வருளென்று வணங்க மாட்டார்
வளமலி பட் டாடைமின்னுர் தமக்குதவ
வவர்மறுக்க வலிதிற் போர்த்தே
உளமகிழப் பார்த்திருப்பர் சிவன்றனுக்குச்
சாத்தவுளத் துன்னிடாரே. 16

சிவனுக்குப் பட்டாடையை அணிவிக்க மனத்தாலும் நினையாதவர் இளைய மகளிரைக் கண்டால் பல்லைக்காட்டிச் சிரித்துக் காலைப் பிடிப்பார்களென்றும். இது உனது தளதள வென்ற அழகிய தாமரை மலர் போன்ற பாதம் என்று உள்ளத்தில் கொண்டு "சங்கரனே நீ அருள்க" என்று வணங்காதவராய், வளமைமிக்க பட்டாடையை யுடைய மகளிர்க்குத் தந்துதவ, அவர் வேண்டா

வென மறுத்துக் கூற, வலுக்கட்டாயப்படுத்தி மேலே போர்த்து மன மகிழ்வர்.

### வைத்தியநாத சுவாமி மீது பாடியது

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

தாமத குணத்தி னாலுஞ் சஞ்சல நோயி னாலும்
சேமமில் லாமை யாலும் சிந்தைநொந் திரங்கு வோர்க்குக்
காமதே னுவைப்போ லுளுங் கருணை செய் தைய லெனுங்
காமியை மணந்த வெங்கள் கருத்தனே வேளூ ரானே. 17

தாமத குணம் கொண்டிருப்பதனாலும், அலைத்து (வருத்தும்) தன்மையுள்ள நோயையுடைமையினாலும் நலமில்லாததனாலும், மனம்வருந்தி மனக்கவலைப்படுவோர்க்குக் காமதேனுவைப்போல் கேட்டவற்றைக் கேட்டபடி தருவதனாலும், தன்னை நினைப்பவர்க்குக் கருணையையே செய்பவளுமான தையல் நாயகி (தையல் - பெண்) பெண்களுள் தலைவி, அவ்விறைவியைத் திருமணஞ் செய்து கொண்டவன் எங்களுக்கும், முதல்வன். புள்ளிருக்கு வேளூர் என்ற தலத்தில் (வைத்தீசுவரன் கோவில் என்ற தலத்தில்) எழுந்தருளி யிருப்பவன்,

எங்களைக் காப்பாற்றுவான் என்பது குறிப்பெச்சம்,
காமியை மணந்த (வேள்) மன்மதனே என்பது இங்கு நயம்.

புள்ளிருக்கு வேளூர் - வைத்தீசுவரன் கோவில், சுவாமி - வைத்திய நாதர். அம்பிகை - தையல் நாயகி. தீர்த்தம் - சித்தாமிர்தம். விருட்சம் - வேம்பு.

குமரகுருபரர் எழுதிய முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், படிக்காசுப் புலவர் எழுதிய புள்ளிருக்குவேளூர்க் கலம்பகம், புள்ளிருக்கு வேளூர்ப் புராணம் உண்டு. மேற்குப் பார்த்த சந்நிதி, சம்பாதி, ஜடாயு, ருக்வேதம், முருகன், சூரியன், இராமன், அங்காரகன் பூசித்த தலம். அங்காரகனுக்குத் தனி இடமும் பூஜையும் உண்டு. தஞ்சைவாழ் மக்கள் குலதெய்வம். அருணகிரியார் திருப்புகழும் உண்டு.

## குற்றாலநாதர் இடபவாகனக் காட்சியும் பயனும்

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

பூவிலே சிறந்தவெங் குழலார் கொங்கைப்
பொருப்பிலே கமழ் கலவைப் புழுகி லேகண்
ஏவிலே சிமிட்டு மருட் டினிலே யேக்குற்
றிளைஞர் மனங் குழைந்து மகிழ் பிரம மூதூர்க்
காவிலே மணஞ்செறி சண்பகக் குற்றாலர்
கவுரிகுழல் வாய்மொழிபாற் கைம்மாக் காத்த
சேவிலே கொடுத்த தரிசனம் பெற்றார்
இந்திர வாழ்வும் பரகதியுஞ் சேருவாரே. 18

அழகில் சிறந்த (கண்டார் விரும்பத்தகுந்த) கூந்தலையுடைய மகளிரது முலையாகிய மலையிலே, மணம் வீசும் சந்தனக் கலவை யுடன் கூடிய புனுகிலே, கண்ணாகிய அம்பிலே, கண்களால் சிமிட்டி மயக்கும் மயக்கத்திலே, ஆசையால் மனம் தாழ்ந்து ஏங்கி நின்று மகிழும் **பிரம்ம மூதூர்** என்ற ஊரில் அமைந் துள்ள சோலையிலே நன்மணம் நிறைந்த சண்பகமரங்களடர்ந்த குற்றால நாதர் மனைவியாம் (கௌரி), குழல் போலும் இன்குரல் அமைந்த வாயினின்று வருகின்ற உண்மையில் யானையைக் காத்த எருதிலே அளித்த தரிசனம் பெற்றவர்கள், இந்திரன் போன்று எல்லா வகையான வாழ்வும் பெற்று மேலான நற்கதி யும் பெறுவார்கள்.

கைம்மா — துதிக்கையையுடைய யானை, கொங்கைப் பொருப்பு - உருவகம். திருக்குற்றால நாதர் ரிஷப வாகனக் காட்சி கண்டவர் அடையும் சிறப்புக் கூறப்பட்டது.

ஏக்குறுதல் - அடைய வேண்டும் என்ற ஆசையால் தாழ்ந்து நிற்றல் **(குறள் பரி மே. உரை)**
என்றாற் போல,
உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர். **(குறள் கல்வி 395)**

கசேந்திர மோட்ச வரலாறு இங்குக் குறிப்பிடப்படுகிறது. அகத் தியரை வணங்காத இந்திரத்துய்மன் என்ற சந்திர குலத் தரசனே, அகத்தியர் சாபத்தால் யானையாய் மாறியதாகத் தெரிகிறது.

அகத்தியர் வருவதற்கு முன் இத்தலம் வைணவத்தலமாக இருந்ததாகவும் அவர் காலத்திற்குப்பின் சிவதலமாக மாறியதா கவும் திருக்குற்றாலத் தல வரலாறு கூறும்.

திருக்குற்றாலம், தென்காசிக்கு மேற்கே 3½ மைலில் உள்ள தலம். இது திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது.

சுவாமி-குறும்பலாவீசர், அம்பிகை - குழல்வாய்மொழி அம்மை.

*தீர்த்தம் -- சித்திரா நதி. தலவிருட்சம் - குறும்பலா.*

திரிகூடாசலம் என்று இத்தலத்திற்கு வேறு பெயரும் உண்டு. பஞ்ச சபைகளில் சித்திர சபை அமைந்த தலம். இச்சபை கோயிலுக்கு வடக்கே சிறிது தூரத்தில் உள்ளது. சுவரில் நடராஜர் ஓவிய வடிவமாக விளங்குகிறார். இங்குப் பஞ்ச தரிசனம் முக்கியம். விநாயகர், லிங்கம், கோபுரம், மலை, அருவி சேர்ந்தாற் போல் பார்க்கக் கேட்டுத் தரிசிக்க வேண்டும்.

மேலகரம் திரிகூட ராசப்ப கவிராயர் இவ்வூருக்குத் தலபுராணமும், குற்றாலக் குறவஞ்சியும் பாடிப் பரிசு பெற்றுள்ளார்.

## சோமசுந்தரப் பெருமான்

### கட்டளைக் கலித்துறை

பொடிபட்ட பிட்டுக்கு மண்சுமந்து பின்பொற்பிரம்பால்
அடிபட் டழுதலு மல்லால் வேட னறுசுதமாங்
கடிபட்ட மான்கறி யெண்ணுமற் றின்னுங் கருத்துனக்குப்
பிடிபட்ட தெப்படிச் சொக்கே கருணைப் பெருவெள்ளமே, 19

சொக்கநாதப் பெருமானே! கருணையின் பெருகிய வெள்ளமே! பொடிப் பொடியாகவுள்ள பிட்டுக்காக வந்தியென்ற ஆதரவற்ற முதியவளுக்குக் கூலியாளாய் வந்து மண்ணைச் சுமந்து பின் பாண்டியன் கையிலுள்ள பொன் பிரம்பால் அடிபட்டுக் கொண்ட வலி தாளாமல் அழுததுமல்லாமல், காளத்திமலையில் காளத்தியப்பருக்குத் தொண்டு செய்த வேடன் திண்ணப்பன் புதிதாய்க் காட்டில் வேட்டையாடிச் சுட்டுப் பக்குவப்படுத்திச் சுவை பார்த்துக் கொண்டு வந்த மானினது மாமிசத்தை எச்சிலென்று எண்ணுமல் தின்னும் கருத்து உனக்கு அமைந்தது எவ்வாறு சொல்? பார்க்கலாம்.

சொக்கநாதப் பெருமானைப் பற்றிச் சொக்கநாத உலா உண்டு. "தமிழ் விடு தூது" என்ற நூலும் சொக்கனின் பெருமையை எடுத்துரைக்கின்றது.

## சண்பகாரணிய ஈசன்

கட்டளைக் கலித்துறை

மருப்புளி னங்கள வாசிமந் தானிலம் வந்துலவக்
கருப்புளி னங்கள வாவுடன் சேருங் கலந்திருந்த
இருப்புளி னங்கள்வர் செண்பகா டவி யீசற்கென்மேல்
விருப்புளி னங்கள வாமோ ஈதென்ன விநோதங்களே.
20

(வெண் மணற் குன்றுகளிடையே), தென்றல் காற்று வந்து மெல்ல வீச. கருவையுடைய பறவையினங்கள் மிக்க ஆசை யுடன் ஒன்று கூடும். (ஆங்காங்கே வருவோர் போவோரான வழிப்போக்கரின் பொருள்களைக் கவர மறைந்திருக்கும் கள்வர் நிறைந்த சண்பகாடவி ஈசனுக்கு என்னிடம் அமைந் துள்ள விருப்பம் திருட்டுத்தனமாக மறைந்துள்ளதோ? இது என்ன ஆச்சரியம்!!
"மந்தானிலம் வந்துலவ"
"மந்தாநிலம் வந்தசைப்ப." (வஞ்சிப்பாவுக்கு மேற்கோள் காரிகை, 11.)

## பனசை யருளாளன்

(வெண்பா)

வாரீரோ கார்வகத்தே வாரீரோ வந்துமுகம்
பாரீரோ வெம்மைப் பணியீரோ — வாராயும்
பண்சிலம்பு பாடும் பனசை யருளாளன்
தண்சிலம்பு மாதரீர் தான். 21

இசையொலிசெய்யும் சிலம்பு ஒலிக்கும் உமது பனசையில் எழுந்தருளியுள்ள அருளே வடிவானவன் அவன். அவ்விறைவன் எழுந்தருளியுள்ள மலையைப் பாடுவீர். குளிர்ச்சி பொருந் திய சிலம்பினை யணிந்த மகளிர்காள் வருக. இன்னிசை பாடும் பனசையில் உள்ள அருள் நிரம்பப் பெற்றேன் குளிர்ந்த மலை மகளிரே வரமாட்டீரோ? சோலைக்கு வந்து முகத்தைப் பார்க்க மாட்டீரோ? எங்களை வந்து பணிந்து செல்ல மாட்டீரோ?

இப்பாடல் சோலையில் இறைவன் எழுந்தருளிய போது தம்மை வந்து வணங்கும்படியாக இறைவனும் இறைவியும் கேட்டுக் கொள்வது போல் அமைந்துள்ளது. விழா நடத்துவோர்

கூறுவது போலவும் கொள்ள இடமுண்டு. திருவிழா நடக்கும் முன்போ பின்போ வனமகோற்சவம் நடப்பது மரபு.

தான் - அசை, சிலம்பு - காலணி, மலை.

பனசை என்பது திருப்பனந்தாள். ஆடுதுறை இரயிலடிக்கு வடக்கே 6 மைலில் உள்ள தலம். கோயிலுக்குத் தாடகேச்சுரம் என்று பெயர், தாடகை அன்புக்காகச் சிவன் சாய்ந்து கொடுத்தார். குங்கிலியக்கலய நாயனாருடைய அன்புக்காகவும் நிமிர்ந்து அருளிய தலம். மேற்குப் பார்த்தசந்நிதி,

சுவாமியின் பெயர் அருணசடேசுவரர். அம்பிகை-பெரியநாயகி. தலவிருட்சம்: இரண்டு ஆண்பனைகள். தீர்த்தம்: மண்ணி ஆறு கோயிலுக்கு மேற்காக வடக்கு நோக்கி ஓடுகிறது.

## திருப்பெருந்துறையீசன்

### கலி விருத்தம்

விண்கட்கு விண்ணுறையான் மேயான் பெருந்துறையான்
மண்கட்டா மண்டபத்து வாவென்று வரவழைத்துக்
கண்கட்டி வாய்மூடிக் காதிலுரைத் தபொருள்
எண்பட்ட மந்திரத்தை யானறிந்து கொண்டேனே. 22

தேவஉலகிலுள்ள தேவர்களுக்குத் தேவதேவன் திருப்பெருந்துறை என்ற தலத்தில் பொருந்தி யுள்ளவன் மண்ணில் கட்டப்பெறாத மண்டபத்திற்கு "வா" என்று வரும்படி அழைத்து, கண்ணையும் வாயையும் மூடித் திறவாது பேசாமல் காதில் கூறிய மந்திரத்தை நான் நன்கு தெரிந்து கொண்டேன்.

எண்படுதலாவது அடிக்கடி நினைந்து நினைந்து ஜபிப்பது. ஒன்று இரண்டு என எண்ணப்படுவதால் எண் எனப் பெயர்.

பெருந்துறை - கும்பகோணத்தருகேயுள்ள திருநறையூருக்குப் பக்கத்தேயுள்ள தலம், சிவசக்தி, பிரமன் முதலியவர் பூசித்த தலம். சுப்பிரமணிய சுவாமிக்கு மூங்கை (ஊமைத் தன்மை) நீங்கிய தலம். திருக்கடம்பந்துறையிலும் இந்த ஐதீகம் உண்டு. சுவாமி பிரணவேச்வரர், சிவாநந்தேச்வரர் என்றும்: அம்பிகை மலையரசியம்மை, மங்களநாயகி என்றும் வழங்கப்படுவர். தீர்த்தம் - மங்கள தீர்த்தம். தலவிருட்சம் - வன்னி, இவை கோயில் முன் உள்ளன.

## வேதாள வாகனத்தின்மீது பவனிவந்த அரம்பையூர்தேவிமேல் பாடியது

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

விண்ணரம்பை யினுக்குமுறுக் காணி சேர்த்த
வீணையுந்துந் துமிமுழக்கும் வேத கீதப்
பண்ணரைம்பை இசைக்குமொலி யடங்கப் பாடும்
பான்மையும்சேர் தருதாம்பிர பன்னி நாட்டில்
கண்ணரம்பை யூரிளம்பெண் ணரம்பை மார்வெண்
சாமரைவீ சிடவேவே தாள மேறிக்
கண்ணரம்பை யல்குல்மயி லுலகுத் தாயார்
கணவர்தங் காட்சியிரு கண்கொள் ளாதே. 23

விண்ணென்று நன்கு இழுத்துக் கட்டப்பட்டுள்ள நரம்புக்கு முறுக்காணி சேர்த்த வீணையும், துந்துமி என்றவாத்தியமும், (குடமுழா என்ற வாத்தியம்) வேதமும், கீதமும், இசையோடுபாடும் அரம்பையர் என்ற தேவமாதர் ஒலிக்கும் ஒலி அடங்கும்படி பாடும் தன்மையும் சேர்ந்து விளங்குகின்ற தாமிரபரணி பாயும் நாட்டி லுள்ள அரம்பையூரில் உள்ள இளமகளிர் வெண்சாமரை வீச, வேதாளம் என்ற வாகனத்தில் ஏறி அம்பு போன்ற கூரிய அழகிய கண்களையும் பை போலும் அல்குலையும் மயில் போலும் சாயலையும் உடைய, உலகுக்குத் தாயுடன் கணவர் தரும் காட்சியைக்காண இருகண்களும் போதா; பலகண்கள் வேண்டும்.

தாமிரபன்னி-பரணி என்பதன் விகாரம். பண் நரம்பு என்க, இசையைத் தரும் நரம்பு, 2-ம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. விண் அரம்பை - தேவ உலகத்துப் பெண்டிருள் ஒரு பிரிவினர், முறுக்காணி - குரல் ஒலியுடன் பொருந்தும் இசைவரச் செய்ய வீணையின் கடைசியில் நரம்பு களைத் தளர்த்தவும் இறுக்கவும் அமைக்கவல்ல ஆணி போன்ற மரக்கருவி. வீணை, துந்துமி, முழக்கு - இசைக்குப் பக்கத் துணை யாக உதவும். இசைக் கருவிகளின் வகைகள். வீணை - நரம்புக் கருவி. முழக்கு - குடமுழா என இலக்கியங்கள் கூறும் தோற் கருவி. துந்துமி இதுவும் தோற்கருவி வகைகளுள் ஒன்று. தண் அரம்பை - குளிர்ந்த வாழை. சோலைவளங்கள் அமைந்த அரம்பையென்ற பெயருடைய ஊர் திருநெல்வேலி மாவட்டத் தில் உள்ளது.

சண்பக மரங்கள் மிகுதியானமையால் சண்பகக் குற்றுலம் எனப்பட்டது.

வேதாளம் - பேய்வகைகளுள் ஒன்று.

மேற்கோள் :—

"வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே" என்பது ஒரு பாட்டு. (நல்வழி செ. 23)

## அரங்கநாதன்

கட்டளைக் கலித்துறை

பாங்கிற் படிகட்டி யைஞ்ஞா றிரட்டிப் பணவிடைமேற்
றூங்கு மதிலொரு மாவேற்ற முண்டு சுரர்முனிவர்
ஆங்கவர் செப்புக் கடங்கா துலக மனைத்தும்பெறு
மோங்கு மரங்கத் திருப்பெட் டகத்தி லொருமணியே. 24

அழகாகப் படிகள் அமைத்து ஐந்தாறு படங்களையுடைய ஆதி சேடனை பாம்பணைமேல் அறிதுயில் புரியும். அதில் சிறந்துகாணும் ஏற்றமுண்டு. திருமகள் தங்கியிருப்பதான பெருமையுமுண்டு.

தேவர்களும் முனிவர்களும் பேசும் அவர்தம் சொற்களுக்கும் அடங்காது உலக முழுவதும் பெறுகின்ற ஓங்கி விளங்கும் அறிதுயில்புரியும் இடமான திருவரங்கம் என்ற அழகிய பெட்டியைத் திறந்தால் ஒப்பற்ற (கரு) மாணிக்கம் போன்ற அரங்கநாதப்பெருமான் விளங்குவான்.

திருப்பெட்டகம் - அழகான பெட்டிபோன்ற அரங்கம்.
திருவரங்கம்: சோழநாட்டுள் காவிரியின் தென்கரையில் உள்ள தலம். இத்தலம் கோயில் எனப்படும்.

சுவாமி:-அரங்கநாதன், நம்பெருமாள். தாயார் - அரங்கநாயகி. விமானம் ஓம்வடிவ பிரணவாக்ருதி விமானம், வேதச்ருங்கம். தலவிருட்சம்: புன்னை. நதி:- காவிரி நதி, சந்திர புஷ்கரணி முதலான ஒன்பதுவகைத் தீர்த்தங்கள் உண்டு.

சந்திரன் சுக்கிரன் ஆகியோர் பாவம் நீங்கிய இடம். இந்திரன் முதலானோர் பூசித்த இடம்.

இறைவன் சயனத் திருக்கோலத்துடன் காட்சி தருவார். பாம்பணையில் படுத்துள்ள நிலையில் தரிசனம். இராமன் பூசித்த மூர்த்தி. விபீடணனுக்குக் கொடுக்க அவர் பிரதிஷ்டைசெய்த சுயம்பு மூர்த்தி. இம்மூர்த்தியை அடிப்படையாக வைத்துப் பிள்ளைப் பெருமாள்ஐயங்கார் அஷ்டப்பிரபந்தம் என்ற நூல் பாடிப் பெருமைப்படுத்தியுள்ளது கருதத்தக்கது. ஸ்ரீ ஆண்டாள் அரங்கநாதனையே கனாவில் கண்டு மார்கழிநோன்பு நோற்று மணந்த இடம்.

## வடமலை நாதன்மேல் பாடியது

### கட்டளைக் கலித்துறை

வேதா வடமலை வெங்காலன் கையில் விடுவித்தென்னை
மாதா வடமலை கொங்கையுண் ணுதருள் மண்ணளந்த
பாதா வடமலை மேற்றுயின் ருய்கடல் பார்மகட்கு
நாதா வடமலை யாயலர் மேன்மங்கை நாயகனே. 25

வடக்குமலையானே நிலவுலகைத் திரிவிக்கிரமனாக வளர்ந்து மூவடியாக அளந்த பாதமுடையவனே. வடமலை என்ற பேரமைந்த திருப்பதியில் எழுந்தருளியிருப்பவனே. அலர்மேல் மங்கையின் கணவனே. பிரமன் எழுதிய பிறவியாம் கடலைத் தாண்டும்படி செய். கொடிய எமனது கைப்பாசத்தில் அகப் படாது விடும்படி செய். நான் தாய்ப்பால் உண்ணுமல் அருள். இதுவே வேண்டுவது.

முலைக்கு - மலை உவமை.

தாய் வயிற்றில் புகுந்து பிறவாமை வேண்டுவதை உணர்த்து வது இப்பாடல்.

வெங்காலன் - கொடிய இயமன், வேதா-வேதங் கூறும் பிரமன். மண்ணளந்த பாதா - மாபலி சக்கரவர்த்தி செய்த யாகத்தில் வாமனனாய் வந்து, மூவடி மண், யாகம் நிகழ்த்த வேண்டிப் பெற்ற பின் வானளாவ வளர்ந்து நிலவுலகை ஓரடி யாலளந்து, வானை மற்றோரடியாலளந்து, பின் மூன்ருவது அடிக்கு 'இட மெங்கே" என, மாபலியைக் கேட்க, அவன் தன் தலை தாழ்ந்து சிரம் மீது வைக்கும்படி வேண்ட, அவ்வாறே தன்பாதத்தை அவன் சிரம் மீது வைத்து அவன் ஆணவம் அடங்கச் செய்து தேவர்களைக் காத்த உட்கதை இதன்கண் அமைந்துள்ளது. கடல் பார் மகட்கு நாதா—

கடலைத் திருமாலின் மனைவியாகச்சொல்வார்கள் பெரியோர்கள். (ஸமுத்ர வஸனே தேவி, பர்வத ஸ்தன மண்டிதே! விஷ்ணு பத்னீ நம: துப்யம் பாதஸ்பர்சம் க்ஷமஸ்வமே" என்பது வட மொழி சுலோகம்.

"கடலை ஆடையாயுடைய அணங்கே! மலைகளையே முலையா யுடைய தாயே! திருமாலின் தேவியே! உன் இணை பாதங் களுக்கு வணக்கம் செலுத்துகிறேன். உன் பாத கமலங்களைத் தொட்டு வணங்குவதற்காக என்னை மன்னித்து ஆட் கொள்க" என்பது இந்தச் சுலோகத்தின் பொருள். இத்தனையே கடலைப் பெண்ணாக உருவகம் செய்து திருமாலின் மனைவியாகக் கொள் வதற்கு ஆதாரமாகக் கொள்க.

பூ தேவி ஸ்ரீ தேவி நீளா தேவி சமுத்ர தேவி என்பன திருமால் மனைவியர் பெயர்கள் என்றறிக.

பூதேவி என்பது பூமியைப் பெண்ணாக உருவகம் செய்தபடி என்க.

கடல் திருமால் பள்ளி கொள்ளும் இடம் என்பது அனைவரும் அறிந்ததே. லட்சுமி தேவி கடலில் தோன்றியதாக நாம் கேட்டிருப்பதும் நினைவிற் கொணர்க.

திருமலை, திருவேங்கடம். ஏழுமலை, வடமலை, வடக்குமலை என்பன திருப்பதிக்கு வேறு பெயர்கள்.

இறைவன் - ஸ்ரீநிவாஸன்; வேங்கடாசலபதி, வேங்கடேசப் பெருமாள். இறைவி - அலர்மேல்மங்கைத் தாயார். விமானம் - ஆனந்த விமானம்.

சுவாமி புஷ்கரணி முதலான 18 தீர்த்தங்களையுடைய தலம். தேவரிஷிகளுக்கும் தொண்டைமானுக்கும் நேரில் தரிசனம். திருவையாறு தியாகராஜ ஸ்வாமிக்குத் திரை விலகித் தரிசனம் தந்த பெருமையுடையது. இங்கு நடக்கும் அற்புதங்கள் அளவிலடங்கா.

திருவேங்கடத்தந்தாதி, திருவேங்கடக் கலம்பகம், திருவேங்கடத் தலபுராணம் திருவேங்கட மாலை, திருவேங்கடத்தலங்காரம் முதலிய நூல்கள் உண்டு.

கட்டளைக் கலித்துறை

பொருதரங் கத்தும் வடத்து மனந்த புரத்துமயன்
கருதரங்கத்துந் துயில்வேங் கடவ! கண்பார்த்தருள்வாய்
நிருதரங் கத்து நிறம்போல் வருங்கங்கு லேரத்தன்றி 26
லொருதரங்கத்தும்பொழுதும்பொறுளென் றொருவஞ்சியே

அரக்கரது உடலின் நிறம்போல வருகின்ற இருள் நேரத்தில் அன்றில் என்ற பறவை. ஒரு முறை கத்தும் பொழுதும் பொறுக்க மாட்டாள் என் ஒப்பற்ற பெண்ணனவள். அலைகள் மோதும் பாற்கடலிடத்தும் வடஆலமரத்தும் திரு அனந்தபுரம் என்ற தலத்தும், பிரமன் கருதிய திருவரங்கத்தும் அறிதுயில் புரியும் திருவேங்கடவனே! கடைக்கண் பார்த்து அருள்புரிவாய்.

பொருதரங்கம் - மோதுகின்ற மோதும் மோதிய அலை எனப் பொருள். வினைத்தொகை. அலையுடைய கடலில் திருமால் ஆதிசேடன் மீது அறிதுயில் கொள்வான்.

அரங்கம் - ஆறு பாயும்போது பிளவுபட்டு இரு பிரிவாய் ஓடும் இடம். காவிரியின் கரையில் அமைந்துள்ள ஸ்ரீரங்கம் என்பது. பெயர் பெற்ற வைணவத்தலம். அங்குத் திருமால் சயனத் திருக்கோலத்தில் (படுத்த நிலையில்) காட்சி வழங்குகின்றார்.

வடம் - ஆலமரம் என்பது பொருள். வடவிருட்சம் என்பது காசியில் உள்ளது. உலகம் நீரால் சூழ்கிப் பிரளயம் ஏற்படும் போது அந்த ஆலமரத்து இலையொன்றில் குழந்தை வடிவமாய் வாயால் கால் விரலைச் சப்பிக் கொண்டிருக்கும் நிலையில் அறிதுயில் கொள்வான். அந்த நிலையை வட பத்ர சாயி என்பார்கள். வடம் என்றால் ஆலமரம் என்றும், பத்ரம் என்றால் இலை என்றும், சாயி என்றால் படுத்துக் கிடப் போன் என்றும் பொருள்.

அனந்தபுரம் - திருவனந்தபுரம் என்ற தலம், கேரள நாட்டுள் விளங்கும் வைணவத்தலம். இங்கும் இறைவன் படுத்திருக்கும் கோலமே காணலாம். எனவே இந்த நான்கு இடங்களிலும் உள்ள ஒரே நிலை தொகுத்துக் காட்டப்பட்டது. இப்பாடலில் வேங்கடவன் நிற்கும் நிலையில் உள்ள வடிவில் காட்சி தருகின்றவன்.

கண்பார் - கண் என்பது கடைக்கண் என்று பொருள். சுவாமிக்கு நேர் எதிரில் நின்று வேண்டுவது சிறப்பன்று. கடைக் கண் ஓரத்துப் பார்வை விழும்படி மக்கள் நின்றே தரிசிக்க வேண்டும் என்பது ஆன்றோர் கருத்து.

நிருதர்:- அரக்கர் வகையினருள் ஒரு சாரார். அவர்கள் எப் போதும் இரவிலேயே உலாவுவர். அவர்தம் உடல் நிறம் கறுப்பு. அக்கறுப்பு நிறம் இருளுக்கு உவமையாய்க் கூறப்பட்டது.

தூங்கிக் கொண்டிருப்பவரிடம் சென்றால் ஒன்றும் பெற இய லாது அன்றோ! தன்னை யார் நாடித் தேடி மலையேறி வருகின் றார், எப்போது அவர்களுக்கு அருள் புரியலாம்; அந்தப் பக்தன் இன்னும் வந்து சேரவில்லையே; வந்தவுடனே அவனைக் காக்க வைக்காமல் அநுக்ரஹம் செய்து உடனே அவன் தரும் காணிக்கைகளை ஏற்றுக்கொள்வதற்காக வழி மேல் விழி வைத்து அருளவல்லவனை நீ அருள் என்பது இங்கு நயம்.

சடகோப ஐயங்கார் பாடியது

வெண்பா

27. அஞ்சனத்தை யொத்தநடை யாரங் களமதார்
அஞ்சனத் தைநகி லம்புயமாம் - அஞ்சனத்தை
ஒத்தவிழி நாமகளே யொப்பறுநின் றுளௌனது
சித்தவிழிக் குள்ளமரச் செய்.

இயல்பாகவே பயந்த தன்மையுடைய அன்னம்போல் நடை, அல்லது பச்சைநிறத்துடன் விளங்கும் மயில் போலும் நடை, மிகவும் அழகிய கழுத்தில் மதநீர் பெருகும் யானையின் இருமத்தகம் போலும் முலை, அழகான தோள், மை போலும் கருவிழி, இவற்றையுடைய பிரமன் நாவில் வீற்றிருக்கும் கலைமகளே! ஒப்பற்ற உன் பாதங்கள் என்சித்தம் (அறிவு) ஆகிய பார்வைக்குள் எப்போதும் நிலையாக அமர்ந்திருக்கும் படி செய்க.

கருமையை நீலம், பச்சை என்று கூறல் மரபு. ஆழி - கடல். அஞ்சனத்தை :- அஞ்சு - அனத்தை. அஞ்சுதல் - பயப்படுதல். ஐந்து என்ற த்வனிப்பொருளும் காண்க. களமது + ஆர் + அஞ்சனம். சந்தனம் பூசப்பெற்ற மலை போன்ற முலை. அஞ்சனத்திரி என்பது ஒரு மலை. அஞ்சனம் - மை. ஒத்த:- உவம உருபு, அரியலூர் என்பது அரியில் என்று வழங்கும். அரிக்கு இல்லாக இருத்தலின் இப்பெயர். அரி-திருமால் இல்-இருப்பிடம். இது ஒரு சமஸ்தானம். சரித்திர வரலாறுகள் நிரம்ப உண்டு. குன்றவள நாட்டைச் சார்ந்தது. இங்கு வாழ்ந்த ஜமீன்தார் வழியினர் மழவராயர் எனப்படுபவர். மழவர்-வீரர் இவர்கள் குலதெய்வம் ஒப்பில்லாதவள் என்ற தேவி. ஐயரவர்களைக் கவர்ந்த இடம். இங்குள்ள பெருமாளுக்கு வேங்கடேசப் பெருமாள் என்பது பெயர். சிவ பெருமானுக்கு ஆலந்துறையீசர் என்றும், அம்பிகைக்கு அருந்தவ நாயகி என்றும் பெயர்.

**சடகோப ஐயங்கார்** பரம்பரை வித்துவான் மரபில் வந்தவர். சண்பகமன்னூர் என்பது இவர் குடிப்பெயர். தென்கலை வைணவர். சிறந்த கவிஞர்; பால சரசுவதி, பாலகவி என்ற பட்டம் உடையவர். இவரை ஆவண்ணா என்றும் அழைப்பர். பாகவதம், கம்பராமாயணம் ஆகியவற்றில் நல்ல தேர்ச்சி உடையவர். இவரது மனைவியார் செங்கமலத்தம்மாள். இவர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களுக்கு இளமையில் பாடம் கற்பித்தவர். தாம் இயற்றிய ஆலந்துறையீசர் பதிகத்தை ஐயரவர்களுக்குக் கற்பித்தவர்.

## காக்கையும் மயிலும்

வெண்பா

அங்கு மரனடைந்தே யண்ணுபலத் தோகையுற்றே
துங்க வனமேயுந் தோற்றத்தாற் —சங்கையிலா
வாக்கையெடுக் காம லருள்குன்றை வேள்கிரியிற்
காக்கை மயிலாகுங் காண். 28

மயிலுக்கு :- அழகிய முருகனையடைந்து, நெருங்கிய பல தோகைகளைப்பெற்று, சிறந்த காடுகளில் பொருந்தி மேயும் வகையால் சந்தேகமில்லாத உடம்பைப் பெருதவாறு அருளும் குன்றின்மேல் விளங்கும் முருகன் எழுந்தருளியுள்ள மலையில் மயிலாகும்.

**காக்கைக்கு :** அழகான மரங்களில் தங்கிப் பல இறக்கைகளுடன் கூடி, நெருங்கிய காடுகளில் பொருந்திக் காணப்படலால் ஐயமின்றி வா(ய்)க்கரிசி யெடுக்காமல் அருள்கின்ற குறுகிய வடிவோடு காட்சிதரும் முருகன் விளங்கும் கிரியில் காக்கையாகும்.

## விசயரகுநாதன்மீது பாடியது

அசையும் பனைமட லேலன் றிலுக்குந் தென்றலுக்கும்
இசையுங் குயிலொலிக்கு மென்பேதை வாடுவளோ
திசையஞ்சுமன்னரெலாந் தெண்டனிடச் சென்றுதிக்கு
விசையஞ் செய்முத்து விசயரகு நாயகனே. 29

இப்பாடல் செவிலி கூற்று.

காற்றில் இயல்பாக அசையும் பனைமடல்மேல் அன்றிற் பறவைக்கும் தென்றற் காற்றுக்கும் இசைபாடும் குயிலின் குரலுக்கும் என் மகள் வாட்டமடைவாளோ? திக்குகளெல்லாம் பயப்படும் மன்னர்கள் எல்லாரும் தெண்டனிட்டு வணங்கிச்சென்று திக்கு விஜயம் செய்கின்ற முத்துவிஜயரகுநாத நாயகன் என்பான்மீது காதலுடையாள்.

வீழ்ந்துவணங்கலைத் தண்டனிடல் என்பர். தண்டம் சமர்ப்பித்தல் என்று இன்றும் வைணவர்கள் கூறுவர்.

அன்றில் ஒலிப்பது, குயில் கூவுவது, தென்றல் வீசுவது பிரிந்தார்க்குத் துயர் தருவன.

பேதை - பெண் என்பது பொதுப்பொருள். மகளிர்க்குரிய (1. பேதை, 2. பெதும்பை, 3. மங்கை, 4. மடந்தை, 5. அரிவை 6. தெரிவை, 7. பேரிளம்பெண் எனப்) பருவங்கள் ஏழனுள் ஒன்று. எந்த ஒன்றாலும் புலவர் மகளிரைப் புகழ்வது மரபு.

அசைதல் - காற்றிலாடுதல்; விசை - ஏழன் உருபு திசை - பக்கம்; விசயம் என்பது எதுகைக்காக விசையம் என அமைந்தது.

திக்கு விஜயம் - அக்கால முறைப்படி பலதிசைகளிலும் ஆட்சி புரியும் மன்னர்களையும் அரசர்களையும் அடிபணியச் செய்து தனக்கு அடங்கினவராகச் செய்வது வழக்கம். மன்னன் அருள்வது உறுதி யாதலின் வாட்டமுறாள்.

## ஆகாயம் - பூமி (சிலேடை)

### வெண்பா

அஞ்சனத்தை யாருதலா லம்பூடே சேருதலாற்
செஞ்சாலி மேவித் திகழ்தலாற்-கஞ்சமுகைத்
தண்கொங்கைச் சிற்றிடையாந் தமரல்ல சந்ததமு
மண்டலமே யாகாய மாம் 30

### ஆகாயத்திற்கும் பூமிக்கும்

நிலத்திற்கு:- அழகிய மக்களைக் கொண்டு அழகிய நீரோடு சேர்ந்திருத்தலால், நல்ல சாலி என்ற பெயரமைந்த நெற்பயிரோடு கூடி விளங்கலால் தாமரை மொட்டுப்போன்ற குளிர்ச்சி மிக்க முலை யுடையவளாவாள், சிறிய இடையை யுடையோள்.

ஆகாயத்துக்கு: - எப்போதும் வானம் மைபோலும் நிறமுடைய மேகத்துடன் சந்திரனைப் பெற்றிருத்தலால், சிவந்திருக்கும் சாலி என்ற மீன் கொண்டு விளங்கலால் என்று அறிந்து கொள்க.

அஞ்சனம் - பூமிக்கு, அம்சனம் - அழகிய மக்கள், ஒரு செய லாய்க் கொண்டு ஆகாயத்துக்கு நீல நிறம் என்றும், அருந்ததிக்குச் சாலி மீன் என்று பெயர்,

தண் கொங்கை - குளிர்ந்த முலை

சிற்றிடை - சிறுமை + இடை.

மண்டலம் - ஆகாயம், பூமி இரண்டுக்கும் பொது.

இப்பாடலில் 3ஆம் அடியில் 2வது சீருடன் 3வது சீர் பொருந் தாமை யுணர்க. பாட வேற்றுமை இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

## கவி அலட்சியமாகக் காரணம்

### கட்டளைக் கலித்துறை

அஞ்சாலிச் சாதியும் வண்ணானும் சேடரும் அம்பட்டரும்
செஞ்சாயக் காரரும் வேசியர் மக்களும் தினங்கவியைப்
பஞ்சாகத் தூற்றிப்பண மொன்றுக்கோர் கவிபாடியதால்
நஞ்சாகப் போச்சுது ராசர் களுக்கிந்த நாட்கவியே 31

துணி நெய்வாரும் துணி துவைக்கும் வண்ணாரும், சேடரும் - சேணியர் - செட்டியார் வகையினருள் ஒரு வகையார் துணிநெய்வோரும் தலை க்ஷவரஞ் செய்கின்றவரும், சிவந்த சாயமேற்றுபவரும், தாசிகளின் புதல்வரும் ஒவ்வொரு

நாளும், பாடலைப் பஞ்சுபோல் எளிதாக யாரும் நினைக்கும்படி பாடி வாரி இறைத்துப் பணமொன்றுக்கு (பணம் – பழங்காலத்தில் 2 அணு என்பர்-12NP) ஒரு பாட்டுப் பாடிய காரணத்தால் விஷம் போல், ஏற்றுக் கொள்ள வெறுப்பேற்பட்டுவிட்டது இக்காலப் பாடல்கள்.

பஞ்சை வாரி இறைத்துப் பக்குவப் படுத்துவதற்காகக் கோலால் அடிப்பார்கள். இதுவே பஞ்சு தூற்றுவது எனப்படும்.

சாலியர்–புடவை நெய்வோர். இவர் ஒரு பிரிவினர்; தொழிலாளி.

வண்ணான் - துணி வெளுக்கும் இனத்தவர். இவர்களையும் ஒரு சில மாவட்டங்களில் சாலியர் என்று வழங்குவதுண்டு.

சேடர் - நூல் நூற்பவர், புடவைகளும் நெய்வர். நூல்களுக்குச் சாயம் ஏற்றுவதும் உண்டு. இவர்களும் ஒரு தொழில் காரணமாக ஒரு பிரிவினராயினர்.

நஞ்சு- விடம். ராசர்-தமிழில் இராசர் என்றே வருதல் முறை. அரசர் என்பது பொருள்.

இந்த நாட் கவி - இக்காலக் கவி.

### மானுவேல் பற்றி மாம்பழக்கவிராயர்
### ஆசிரிய விருத்தம்

கருணையொடு பிரதியுப கார நினை யாதுதவு
  கண்யவா னியாதலாற்
கதியென்று புகுவேன் கருத்தினை வெளிப்படக்
  காட்டுவேன் கேட்டல்வேண்டும்
அருமைதவிர் காலவித் யாசத்தி னுலுள்ள
  ஹஸ்தரொக் கங்களெல்லாம்
அடியோடு செலவான தல்லாம லுங்கடனும்
  அதிகமாய் நேரிட்டதாற்
பருவமழை முகிலெனும் படிவளரு நின்னையே
  பற்றியித் திசைவந்துபின்
பழவினையி னுல்மதி மறந்துவழி தப்பிவீண்
  பகல்கழித் துளமலுத் தேன்
மருவிய வருத்தத்தை மாற்றுவது நின்பாரம்
  மற்றொருவ ராலாகுமோ
மாசிலா விசுவாச தாசில்தா ரெனுநேச
  மானுவேல் மஹராசனே.

குற்றமற்ற அன்பு மாறாத தாசில்தாரான மானுவேல் மகராஜ! கால வித்தியாசத்தினுல் கையிலுள்ள ரொக்கங்களும்

முழுவதும் செலவாகிவிட்டன. மேலும் கடனும் அதிகமாகியது. முன் வினையால் வழி தவறி, வீண் பொழுது போக்கினேன். மனமும் அலுத்துப் போய் விட்டேன். பருவ காலத்தே பொழியும் மழை மேகம் போல் உன்னிடம் வந்த பிறகு, என் துயரை மாற்றஉன்னைத் தவிர வேறு ஒருவரால் முடியுமோ? முடியாது.

மாம்பழக் கவிராயர் :- இவர் விசுவகர்ம குலத்தவர். தந்தை முத்தையாசாரி. கி.பி. 1836ல் பழனியில் பிறந்தார். குலமக்கட் பெயராகிய மாம்பழம் எனத் தந்தை பெயரிட்டார். இவரது 3ஆம் வயதில் வைசூரி கண்ட போது, முருகன் சந்நிதியில் கிடத்த மறுநாள் நோய் நீங்கியது. ஐந்தாம் ஆண்டில் முதுகில் தந்தை எழுதிக் காட்டிப் பழக்கியபடி பழகித் தமிழ் வல்லவரானார்.

பழனிப் பதிகம், குமரகுரு பதிகம், செந்திற் பதிகம் ஆகிய நூல்களை இயற்றினர்.

தென்முகவை பொன்னுசாமித் தேவர் வாழும் இராமநாதபுர ஸமஸ்தானம் சென்று ஒரு சீட்டுக் கவி பாடிக் கையேட்டினரிடம் கொடுத்தனுப்பினார். இவர் பார்வையற்றமையால் அரசர் காண, மறுத்தனர். அரசர் கொடுத்த சமஸ்யையைப் பாட முடியுமோ என, அப்படியே கொடுத்த சமஸ்யைகளைப் பாட கவிச்சிங்கமெனப் பட்ட மளித்துத் தம் ஸமஸ்தான வித்துவானுக்கப் பெற்றவர்.

### புலிக்கும் - சங்குக்கும்

வெண்பா

அத்தமுற்றே யோட்டமதை யாடும் வலையுற்றே
மெத்தவுந்தான் வேலையின் வாய்மேவுமே - சத்திமிகுங்
கங்காதரன் சுதனுங் காங்கேயன் றன்வரையிற்
சங்கே புலியாச்சு தாம். 33

ஆற்றல் நிரம்பிய கங்காதரன் மகன் காங்கேயன் வாழும் மலையில் புலி:- மாலைக் காலமானதும் இரைதேடப் புறப்பட்டு அங்குமிங்கும் காட்டில் அலைந்து திரிந்தாடும். வேடர் கட்டும் வலையில் நன்கு அகப்பட்டு வேடனிடம் சிக்கிக் கொள்ளும்,

சங்கு:- கையில் எடுத்து ஊத ஓசை பெறும். கடலில் மீன் பிடிக்கச் செல்லும் மீனவர் கடலில் வலை வீசும்போது அகப்படும். கடலில் பொருந்தியிருக்கும்.

தசரதன் மகன் தாசரதி என்பது போலவும், சனகன் மகள். சானகி என்பது போலவும், கங்காதரன் மகன் காங்கேயன் என அழைந்தது தத்திதாந்தநாமம்,

## பானுவுக்கும் தென்னைக்கும்

வெண்பா

*அம்பாளை யுற்றிடலா லானவரை மேவுதலாற்*
*கும்பாகும் வாரியலைக் கொள்ளுகையாற் — கொம்பாகு*
*மன்னநடை வள்ளிமண வாளன்வே லன்கிரியிற்*
*றென்னைமரம் பானுவாச் சே.* 34

**சூரியன் :-**

சூரிய மண்டலநடுவே காயத்திரி தேவி காலையில் காயத்திரியாகவும் பகலில் சாவித்திரியாகவும் மாலையில் சரசுவதியாகவும் விளங்குவதாக வேதம் கூறும் மரபுப்படி அம்பாளைப் பெற்றிருத்தலால், காலையில் உதயகிரி என்ற மலையில் தோன்றி, மாலையில் அஸ்தமய கிரி என்ற மலையில் மறைவதாக வேதம் கூறுவதன்படி மலையில் பொருந்துவதால், இருளாகிய கடலைப் பொருந்துதலால், சூரியன் மறைந்ததும் இருள் நிறைந்துவிடுவதாலும், இருளைக் கடலாக உருவகஞ் செய்திருப்பதாகக் கொள்ளப்படுகிறது.

**தென்னை :-**

அழகிய பாளைகளைக் கொண்டு விளங்குவதால், பாளையை வெட்டி அதிலிருந்து இறக்கப்படும் கள் இறக்குபவர் இறங்கியிருக்குமளவு எடுத்துக் கொண்டு விடுவராதலால் அவர்களிடம் பொருந்துவதால், கும்மென்ற (துர்நாற்றம் புளித்த நாற்றம்) ஏற்படுவதால், கள் இறக்குபவர்கள் கள் இறக்கும்போது இடுப்பில் பாளைகளை வெட்டக் கத்தியையும் கொண்டிருத்தலால், கொம்பு போன்ற இடையையுடையவளும், அன்னம் போலும் நடையையுடையவளுமாகிய வள்ளிக்கு மணவாளன் வேலேந்திய முருகன் தங்கியுள்ள மலையில், தென்னை மரம் சூரியனுக்கு ஒப்பாம்.

அம்பாளை - அழகிய பாளை (தென்னைக்கு) அம்பாள் - ஒரு சொல்லாகக் கொண்டு இறைவி என்க. வானவர் - ஒரு சொல்லாகக் கொள்ளும் போது தேவர். வானவரை - ஆகாயமளாவி வளர்ந்துள்ள மேருமலை. கும்பு - கவிந்து கொள்ளும் இருள். வாரியலைக் கொள்ளுதல் - வாரி அலை கொள்ளுதலால் என்க. வார் இயலைக் கொள்ளுதல் - நீண்ட தன்மையைக் கொள்வதால். கொம்பு - கொம்பு போன்று வளர்ந்துள்ள பெண்ணுக்கு உவமையாகு பெயர். அன்ன நடை - அன்னப்பறவை போன்ற நடை; பெண்களின் நடைக்கு உவமை.

## இசைத்தட்டைப் பற்றியது

வெண்பா

அமெரிக்கா வின்நியூ யார்க்கெடிஸ னும்யூ
கிமேலாச்செய் போன கிராப்பின் - நமேலோர்
விஞ்சுநால் வேதன் விதிக்கறியான் அப்பூமான்
அஞ்சுவே தக்கடவு ளாம். 35

அமெரிக்காவிலுள்ள நியூயார்க்கில் தோன்றிய எடிஸன் என்ற அறிவாளி மேன்மையுடன் விளங்கும்படி செய்த போனகிராப்பை நமது மேன்மைகொண்ட மக்கள் அறிவான்மிக்க நான்கு வேதங்களையுமறிந்த பிரமனும் எப்படிச் செய்வதென்று தானேயும் அறிந்திலன். அவனுக்கும் மேலாக எடிஸன் இக்கருவியைச் செய்து உலகுக்கு உதவியமையால் அந்த எடிஸன் என்பான் நான்கு வேதத்துக்கும் மேலாக ஐந்தாவது வேதமுணர்ந்த அப்பிரம் மனுக்கும் மேம்பட்ட கடவுளாவான்.

விதிக்கறியான் — விதிக்க — அறியான். பூமான் — பூமியில் மேலானவன் அஞ்சுவேதக் கடவுள் — அம் — சுவேதம் — கடவுள். அழகிய வெண்மையான புகழ்பெற்ற கடவுளுக்கு ஒப்பானவன். புகழை வெண்ணிறமாகக் கூறுவது மரபு.

Phonograph என்ற ஆங்கிலச் சொல்லும் அமெரிக்கா, நியூயார்க்கு, எடிஸன் என்ற பிறமொழிச் சொற்களும் கலந்து பாடப்பட்டுள்ளது.

## மீரா முகம்மது மீது பாடியது

ஆசிரியவிருத்தம்

அருவிலை பஞ்சத்தை வரவிட்ட மாபாவி
ஆங்கிரஸ வருடம் வந்தில்
வடுக்களை இடத்தினி னுடாங்கிக் கிடந்ததனை
யாரடா வென்று கேட்டோம்
திருமருவு சங்க்ராந்தி யானென் றுரைத்ததைச்
சீயிங்கு வந்த தென்ன
செல்லடா இவ்வேளை யுன்றனுக் கேயாங்கள்
செப்பமா கப்படைக்க
ஒருபடிநெ லரிசிகறிகாய்பழம் தாம்பூலம்
ஒருவரும் தருவாரிலை

ஓடடா வென்றே யுரைத்துளே மதனேயோர்ந்
துண்மையா யானேகியே
இருமைவகை தெரிகின்ற சேகுமீ ராயிலவை
யீன்றநயி னார்முகம்ம
திலவையிட மெய்திநான் சகலமும் கொடுவருவேன்
என்பொங்கல் இடுமென்றதே. 36

மிகவும் கடுமையாக விற்கும் விலைகளையுடைய பஞ்சத்தை வரவிடும்படி செய்த கொடிய மகாபாவியான ஆங்கிரஸ வருடம் வந்து சமையலறைக்குள் அமைந்துள்ள அடுப்பில் ஒடுங்கிக்கொண் டிருந்ததைப் பார்த்து, "நீயார்" என்று கேட்டோம். "அழகு பொருந்திய சங்கராந்தி பீடை நான்" என்று பதில் கூறிற்று. நீ இங்கு வரக் காரணம் என்ன ? சீ ! இங்கிருந்து இப்போதே சென்று விடு, உனக்கு நாங்கள் நன்றாகப் படைப்பதற்கு ஒருபடி நெல், ஒரு படி அரிசி, கறிகாய்கள், பழவகைகள், தாம்பூலம் இவைகளை ஒருவரும் தரக்கூடியவரில்லை. இங்கிருந்து அடா! ஓடிவிடு! என்று கூறினோம். அதனைக் கேட்டு உண்மையுடன் யான் சென்று இம்மை, மறுமை என்ற இருவகை நிலைகளையும் நன்றாகத்தெரிகின்ற சேகுமீராயிலவைப் பெற்றெடுத்த நயினாமுகம்மதிலவையிடம் சென்று நான் எல்லாம் கொண்டு வருவேன். எனக்குரிய பொங்கலை இடுக என்று சங்கராந்தி பீடை கூறிற்று.

இப்பாடலுள் நயினாமுகமது லப்பை என்றவரது கொடுக்கும் இயல்பு வெளிப்படுத்தியபடி.

சங்கராந்தியின்போது அடுப்பில் இட்டுப் பொங்கல் இடுவதற்கும் கூட வசதியில்லாத அளவு பஞ்சம் குடிகொண்டிருந்ததும் வெளி யானபடியாம்.

பொங்கலிடத் தேவை அரிசி, காய்கறி பழவகை வெற்றிலைப் பாக்கு முதலாயின என்பது புலப்படுத்தப்பட்டபடி. நயினா முகம்மது லப்பையும் இதனைப் பாடிய புலவரும் வாழ்ந்தகாலத்துப் பஞ்சமிகுந் திருந்தமை வெளியாம்.

ஞான குரு

அலையு மனத்தை யகத்தடக்கும்
அவனே சரியை கடந்தவனும்
அலையு மனத்தை யகத்தடக்கும்
அவனே கிரியை முடித்தோனும்

அலையு மனத்தை யகத்தடக்கும்
அவனே யோக தற்பரனும்
அலையு மனத்தை யகத்தடக்கும்
அவனே ஞான வதிசூரன். 37

கண்டபடி அலைகின்ற மனத்தை உள்ளத்தினின்று வெளியே செல்லாதபடி அடக்கும் ஆற்றல் உடையவரே சரியை என்ற முதலாவது நிலையைக் கடந்த பெரியவனுவான். அத்தகையோனே இரண்டாவது நிலையாகிய கிரியை என்ற நிலையையும் கடந்த பெரியவனுவான். அவ்வாறே மூன்றும் நிலையாகிய யோகம் என்ற, தானே அதுவாக ஆகவல்ல தற்பரன் என்ற நிலையைத் தாண்டியவ னுவான். அவனே எல்லாவற்றுக்கும் மேலான நான்காம் நிலை கூடிய ஞானம் நிரம்பப் பெற்ற சிறந்த ஆசானுவான்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என நிலைகள் நான்கு: இவை யோகிகளின் பயிற்சிக்குரிய நிலைகள்.

## படிக்கவைக்காத பெற்ருேர்

### கட்டளைக் கலித்துறை

அள்ளிக் கொடுக்கின்றசெம்பொன்னுமாடையுமாதரவுந்
துள்ளித் திரிகின்ற காலத்தி லென்னைத் துடுக்கடக்கி
யுள்ளத்தி லுள்ள உபாத்தியைத் தேடி யுதவியுடன்
பள்ளிக்கு வைத்தில ரேபிதா வாகிய பாதகரே. 38

வாரிவழங்கும் செம்பொன்னும் ஆடைகளும் ஆதரவும், துள்ளி விளையாடித் திரியும்போது எனது துடுக்கான செயல்களை மாற்றி மனதிலுள்ள தக்க ஆசிரியரைத் தேடி, பிற்காலத்திற்கு உதவும் உதவியுடன் கூடியதான பள்ளிக்கு வைத்தாரில்லை தந்தையாகிய கொடியவர்.

துள்ளித்திரிதல் குழந்தைகள் சொல்வன கேளாவிட்டால் — தலை துள்ளித் திரியாதே என்று கோபித்துக்கொள்வர் தாய்மார்,

துள்ளி ஓடுதல், கன்றுக் குட்டியின் குணம்.

## காட்சி சேர்பவர் இவர் எனல்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அறிவெனும் பாயைக் கட்டி
அன்பெனுஞ் சுக்கா னேட்டி
யிரவெனுங் கடல்க டந்து
ஏகமாய் நின்ற போது
துறவெனுந் தொண்ணூற் ருருல்
தூக்கியே பாதம் வைத்து
கரவெனு மின்ப துன்பங்
கடந்தவர் காட்சி சேர்வார், 39

அறிவு என்ற பாயைக்கட்டி, அன்பு என்ற படகுதள்ளும் துடுப்பான சுக்கானால் இரவு என்ற அஞ்ஞான இருளைத் தாண்டி,ஒருமை மனதுடன் இருந்தபோது துறவு என்ற தொண்ணூற்று ஆறு தத்துவங்களால் தூக்கியே பாதத்தை எடுத்து வைத்து மறைப்பு என்ற இன்பதுன்பகளைக் கடந்து நின்றவர் சத்து சித்து ஆனந்தம் என்ற யோக நிலையில் காணும் காட்சியை மனதினால் காணப் பெறுவார்கள்.

தூக்கியே பாதம் வைத்து - ஒரு கால் மடக்கி, ஒரு கால் ஊன்றித் தவமிருத்தல்.

காட்சி - மனதில் உணரும் ஞானம்.

சுக்கான்-படகின் இரண்டு பக்கங்களிலுமிருந்து படகோட்டிகள் தள்ளும் கொம்புகள்.

அறிவு பாய், அன்பு சுக்கான், இரவுகடல் - உருவகங்கள்.

## குருடன் கருடன்

சிலேடை வெண்பா

அற்பகலு மாசையுறு மானமா லைப்பொருந்தும்
பற்பல வரைக்கையுறப் பற்றுமே - கற்புத்
தரும்வள்ளி காந்தன் தடவரையி டத்தே
குருடன் கருடனு கும் 40

*வள்ளிகாந்தன் வீற்றிருக்கின்ற மலையில்.*

அற்பகலும் - 1. பகற்காலம், இருட்டுக்காலம் போலிருக்கும்
2. இருள் நீங்கிய பின் பகலில் இரை தேடப் புறப்படும்.
மாசையுறும் - 1. பார்வையற்றமையால் குற்றமுடையவனும்.
2. பொன்னிறம் போன்றிருக்கும்.
ஆனமாலைப் பொருந்தும் - 1. மாலைக்கண் பெற்றிருப்பான்.
2. விஷ்ணுவைத் தன் மேல் சுமக்கும்

பற்பலவரைக்கையுறப்பற்றும் - 1. அங்கங்குச் செல்லும்போது பிறர்கையைப் பிடித்துக்கொண்டு செல்லுவான் 2. பலபல மலைகளைத் தங்குவதற்கு ஏற்ற இடமாகக் கொள்ளும். இவற்றால் குருடன் கருடனுக்கு ஒப்பாவான்.

## மாம்பழக்கவிச்சிங்கநாவலர் பாடல்

சீட்டுக் கவி

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அற்புதமுத் தமிழ்பகர்மாம் பழக்கவிச்சிங்
கங்குறிப்பிட் டனுப்பு மோலை
பொற்புமிகு மனுமந்த புரிமுத்துக்
குமாரதுரை புத்ர ரத்னம்
கற்பகநேர் சர்க்கரைமால் காண்கவிது
வரைநினையாக் கார்ய மென்ன
பற்பலர்கட் குந்தெரியப் படுத்திவெகு
மதிதகுந்த படிசெய் வாயே. 41

மிகவும் அருமை மிகுந்த இயல் இசை நாடகம் என்ற முத்தமிழ் பாட வல்ல மாம்பழக்கவிச்சிங்கம் குறிப்பாக எழுதியனுப்பும் ஓலையை அழகான அனுமந்தபுரி முத்துக்குமாரதுரையின் புதல்வர், இரத்தினம்போன்றவர் கற்பகம்போல் தரவல்ல சர்க்கரை மால் என்பவர் காண்க. இதுவரை நினைத்துப்பாராத செயல் என்ன? எல்லாருக்கும் தெரியும்படி செய்து பரிசைத் தகுந்தவாறு அளிப்பாய்.

பகர் ஓலை-வினைத்தொகை, மாம்பழக் கவிச்சிங்கக் கவி நாவலர்:- *இவர் பழநியில் தட்டார் குலத்தில் பிறந்தவர்; தந்தை, முத்தையா* சாரியார் என்பவருக்கு கி.பி. 1836 மன்மத வருடத்தில் இரண்டாவது மகனாகத் தோன்றியவர்.

திருமலை நாயக்க மன்னர் இவரது மரபினருக்கு அளித்த பட்டப் பெயரைத் தன் மகனுக்கு 'மாம்பழம்' என்றே பெயரிட்டு வழங்கிய தால் இச்சிறப்புப் பெயர் இவருக்கு அமைந்ததுபோலும்.

அனுமந்தபுரி - பெரியாற்றுக்குச் செல்லும் வழியில் உத்தம பாளையத்தை யடுத்துள்ள சிற்றூர். இவ்வூர் எல்லையில் தோப்பின் நடுவே அண்ணன்மார்கல் என்னும் கல் உள்ளது, தவருக நடந்து கொண்டவளைக் கொன்ற இரு சகோதரர் அவளுக்காக எழுப்பிய கல் என்று சொல்லப்படுகிறது.

*சர்க்கரைமால்* :-இப்பெயருடைய புலவர் இருவர் உளர். ஒருவர் பாட்டனர். மற்ருெருவர் பேரர். பாட்டனர் பாடல்கள் இனிமை யுடைமையாகஇருந்ததால் சேதுபதியவர்கள் பொன்னெட்டி என்று பட்டமளித்து மானியங்களும் வழங்கியுள்ளார்.

இதுவரை நினையாக் கார்யம் என்ன - இதுவரை எவரும் மனதாலும் நினைத்துக் காண்முடியாதபடி என்று சொல்வதுபோல. என்ன:- உவம உருபு.

*கற்பகம்*--எண்ணுவார் வேண்டிய தளிக்கவல்ல தேவலோகத்துள் அமைந்துள்ள ஐவகை மரங்களுள் ஒன்று.

## கலவியின் மகிழ்தல்

கட்டளைக் கலித்துறை

அனந்தானை வென்ற நடையன்ன மேயடி யேனிடத்திற்
சினந்தான் தணிந்தொரு விண்ணப்பங் கேளுன்னைச். சேர்ந்துகும்பத்
தனந்தான் தழுவியும் மற்ருெரு மாதர் தனந்தழுவ
மனந்தா னெனக்கெழு மோசொல்லு வீர்மணி வாய்திறந்தே 42

அன்னத்தை வெற்றிகொண்ட நடையையுடையவளே, (அன்னம்போல்வாளே). அடியேனிடம் கோபம் நீங்கி யான் சொல் லும் ஒரு சொல்லைக்கேள். உன்னைக் கூடி, குடம்போலும் முலையைத் தழுவியும் வேருெரு பெண்ணின் முலையைத் தழுவவும் மனம் எனக்கு வருமோ. வாய்திறந்து கூறுவீர்.

அன்னமே - உவமையாகு பெயர். விளி, அன்னம் என்பதன் இடைக்குறை அனம். மகளிர் நடைக்கு அன்னத்தின் நடை உவமை.

மணி - செம்மணி. மணி பலவகை - இங்குச் செம்மணியெனக் கொள்க. சிவந்த மணியின் நிறம் போன்ற வாய் என்பதனுல் நிறவுவமை.

இயற்கைப்புணர்ச்சிக்குப்பின் தலைவியைவிட்டுப் பிரிய எண்ணும் தலைவன், வேறு ஒருத்தியை யடைய மனம் விரும்பாது. விரைவில் வருவேன் என்று உறுதி கூறிப் பிரிய எண்ணுவதாக அமைவது இப்பாடல் என்று கோடல் பொருந்தும். அல்லது; பரத்தையிற் பிரிவாகக் கொள்ளவும் இடமுண்டு.

இல்லறம் நடத்தும் தலைவன் பரத்தையிடம் தொடர்புடையான் என ஊரவர் சொல்லக் கேட்டாள். தலைவன் வரும்போது அவனிடம் கோபங்கொண்டாள். "பிறமாதினைச் சேரேன்" என்று, தலைவி, தோழி இருவரிடமும் தலைவன் சொல்வதாகக் கொள்ளினும் ஏற்கும்.

### இவையிவை இன்னன்னவற்றைக் கெடுக்கும் என்பன

கட்டளைக் கலித்துறை

ஆட்டைக் கெடுத்தது ஊதை புங்காற்றும் அடர்மழையும்
நாட்டைக் கெடுத்தது கலகமும் பஞ்சமும் நலமுடைய
வீட்டைக் கெடுத்தது மூஷிக மெலியு மூட்டையுநற்
பாட்டைக் கெடுத்தது விருமலுங்கோழையும் பாழ்சளியே
43

ஊதைச்சாரலும், காற்றும், அடைமழையும் ஆட்டைக் கெடுத்துவிட்டன. கலகமும் பஞ்சமும் நாட்டைக் கெடுத்துவிட்டன, மூஞ்சூறு, எலி, மூட்டைப்பூச்சியும் நன்கு கட்டிய வீட்டைக் கெடுத்துவிட்டன. பாழான கோழை, இருமல், சளி மூன்றும் பாடும் குரலைக் கெடுத்துவிட்டன.

சாரலும், காற்றும் மழையும், கலகமும் பஞ்சமும், எண்ணும்மைகள்.

### இன்குரல் அமைய

கலி விருத்தம்

ஆடா தொடைஅஞ் சோலை நொச்சி
வாடா நெல்லி வசம்பு கடுக்காய்
கோடா நெய்யில் குழப்பித் தின்றலப்
பாடா மின்று பண்ணிசை பாடும் 44

ஆடு தொடா இலை (ஆடாதொடை) அழகான சோலையிலுள்ள நொச்சியிலை, வாடாத நெல்லி, (பச்சை நெல்லிக்காய்). வசம்பு, கடுக்காய் இவற்றை நல்ல காய்ச்சியுருக்கிய நெய்யில் குழப்பித் தின்றால் இசைபாடும் இன்குரல் அமையும்.

ஆடாதொடை அஞ்சு-ஐந்து இலைகள், ஓலைநொச்சி-நொச்சித் தழை ஐந்து, வாடாத நெல்லி இலை. இலைகள் ஒவ்வொன்றுக்கும் ஐந்து, எனக் கொள்க.

அப்பாடாம் - அப்பாடா என்று அதனை உண்டு மகிழும்போது இன்பமாக வெளிவரும் சொல். அ பாடு ஆம் எனப் பிரிக்க அந்தப் பாடுவதற்குரிய இன்குரல் அமையும் எனக் கொள்க.

## கற்றோர் குணம்

கலி விருத்தம்

ஆடை சுற்றி யழகாய்த் திரியினும்
வாடை பூசி வளர்மனை புக்கினும்
ஓடை யேந்தி உழன்று திரியினும்
பாடை யேறினும் ஏடது கைவிடார். 45

ஆடைகளை உடுத்திக்கொண்டு அழகாகத் திரிந்தாலும்,(வாடை நறுமணம்வீசும் சந்தனம் பூசிச் சிறந்த வீடுகளில் இருந்தாலும், பிச்சை எடுக்கும் ஓட்டை ஏந்தி உழன்று திரிந்து கொண்டிருந் தாலும். இறந்து போகும்வரை படிப்பதற்குரிய ஏடுகளைக் கைவிடாமல் இருப்பார்கள் (கற்றோர்கள்).

பாடை ஏறினும் என்பது, பாடம் ஏறினும் எனவும் கொள்வ துண்டு. பாடம் நன்கு மனதில் பதிந்து விட்டாலும் மறவாமல் நினைவு கூர்வதற்காக எப்போதும் படித்த ஏடுகள் திரும்பத் திரும்பப் பார்க்கப்படவேண்டும் என்பதற்காக ஏடுகள் கையிலிருத்தல் வேண்டும்.

ஏடுகள்:- அக்காலத்தில் ஒழுங்கு செய்து எழுத்தாணியால் எழுதப்பட்ட பனை ஓலைகள். ஓலைகளை ஏடுகள் என்பர்.

ஓடு - துறவிகள் (சந்நியாசிகள்) வீடு வீடாகச் சென்று உணவு பெறத் தமது கையில் உள்ள மண் பாத்திரம். இதனை ஓடு என்பர். சுரைக்காயை நன்கு காயவைத்து ஓடுபோல் கொள்வதுமுண்டு.

“மாயனுர்க்குயவன் செய்த மண்ணுபாண்டம் ஓடடா”. வளர்மனை-வினைத்தொகை. “பாடை ஏறினும் ஏடது கைவிடேல்” என்பது ஔவை வாக்கு.

## கல்வியை நாமகளிடம் வேண்டல்

வெண்பா

ஆதார மாகிநின்ற வைம்பூத மிந்தியங்கட்
காதார நாதமதை யாதரிக்கும்-வேதாந்தச்
சொல்லமுதே நல்லமுதே புல்லரிடம் போய்ப்புகலச்
செல்லிலாக் கல்வியருள் செய் 46

உலகுக்குக் காரணமான நிலம் நீர், தீ, கால், வான் என்ற ஐவகைப் பூதங்கட்கும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐவகை இந்திரியங்களுக்கும் அடிப்படையான ஒலிவடிவை ஆதரிக்கும் (சப்தரூபமாகவிளங்கும்) வேதாந்தங்களில் சொல்லுத லாகிய அமுதமே. நல்ல அமுதமே. அற்பரிடம் அடைக்கலம் சென்றடையாத கல்வியை யருள்க.

இந்திரியம் என்பது இந்தியமாயிற்று. பிந்து, வாக் தேவதை பஞ்சபூதமாய், ஒளிவடிவாய் விளங்குபவள். " நாத விந்து கலாதீ நமோ நம" என்பார் அருணகிரிநாதர்.

இந்தியங்கட்கு ஆதார நாதமதையாதரிக்கும் இது, யோக நிலையை விவரிக்கும் குறிப்பு.

இந்திரியங்கள் ஐந்தும் அடங்கி ஒரு நிலைக்கு வரும்போது அவற்றுக்கு இருப்பிடமான நாதம் ஒலிக்கத் தொடங்கும். நாதம் பிந்து, கலை மூன்றும் முறையே வெளிப்படத் தொடங்கும். அவ்வாறு வெளிப்படுவதற்கு அடையாளமாக ஓம் என்ற பிரணவ ஒலி, உள்ளே கேட்டுக் கொண்டே இருக்கும்.

## இருபது ஜதை

ஏர் உழ அனுப்புமாறு விடுத்த ஓலை

ஆசிரிய விருத்தம்

ஆயுள்வே தத்தினுங் கணிதத்தி னும்பரம்
பரஞ்சித்து வித்தை தனிலும்
அருந்தமி ழிலக்கண விலக்கியத் தின்கவிதை
யாகவொரு நான்கி னுக்கும்
வாயுளபி றச்சமய வாதிக்கும் வாதியென
மாநில மெடுத்த புலவன்
வண்மைதிகழ் கரிவலம் புரிநமசி வாயகவி
வாணன் விடுக்கு திருபம்
தாயினிலு மன்பன்திரு வப்பமகி பாலனருள்
தய்வு பெறுநதி குலேசன்
தண்டமிழ்க் குரையாணி வடமலை நராதிபதி
தானெதிர் பணிந்து காண்க
நேயமுடன் என்மதலை சிற்றம் பலந்தனை
நின்பா லனுப்பி வைத்தேன்
நீணிலத் துழவடைக் கேரிருப துக் கெருது
நிலவள மனுப்பி விடவே. 47

ஆயுள் வேதம், கணிதம், வழிவழியாக முன்னோர்கள் செய்து வந்த சித்து வித்தை, சீரிய தமிழ் இலக்கண இலக்கியம் கவிதை ஒப்பற்ற நான்கு வகையிலும் வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்ற நான்கிலும் பேச்சில் வல்ல மற்ற சமய வாதிகளுக்கும், த்க்க வெல்ல வல்ல சமயவாதி எனப் பெயர் பெற்ற பெரிய நிலத்தில் புகழ் பெற்ற புலவன் வள்ளல் தன்மைமிகுந்த கரிவலம்புரி என்ற ஊரில் வாழும் நமசிவாயகவி என்ற கவிவாணன் எழுதியனுப்பும் கடிதம்.

தாயினும் அன்பினன், திருவப்பமகிபாலன், அருளுடன் தயவு காட்டுவதில் ஆறுகளில் கங்கைபோல் விளங்கும் குலத்துதித்த தலைவன். இனிய தமிழுக்கு உரையாணிபோல்வான். (ஆதாரமாக இருப்பவன்) வடமலையில் வாழ்வோன்: மக்களின் தலைவன்; எதிரில் வணங்கி இக்கடிதத்தைக் காண்பானாக.

அன்புடன் என் மகன் சிற்றம்பலத்தை உன்னிடம் அனுப்பினேன். நிலத்தில் உழவு ஓட்டுவதற்கு ஏர் இருபத்துக்கு எருதுகள் நிலவளம் பெறும்படி உழ அனுப்பி வைத்து விடுவீராக.

ஆயுள்(ர்) வேதம் - சோதிட, வைத்திய சாஸ்திரங்கள், சித்து வித்தை - சிறியதைப் பெரியதாகவோ, ஒன்றை மற்றொன்றாகவோ அமைக்கும் திறன்.

இலக்கண இலக்கியம்- "இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பல்" (நன். சூ. 141)

பிறச்சமய வாதம் - சைவம்-வைணவம் ஜைனம் போன்ற மதங்கள் மிகுந்திருந்த அக்காலத்தில் அவரவரும் தத் தம் மதமே சிறந்ததென சொற் போரிடும் வழக்கம் நெடுங்காலமாக இருந்து வந்தது. அவ் வகையிலும் இப்புலவர் சிறந்திருந்ததாகக் கூறிக் கொள்கிறார்.

கரிவலம்புரி-கரி வலம் வந்த நல்லூர். இதனைக் கருவை யென்பர். சங்கரநயினார்கோயில் அருகே உள்ள ஊர். சுவாமியின் பெயர் பால்வண்ண நாதர் - பழைய் களாச் செடி சுவாமிக்கு நிழல் அளித்து வருகிறது.

இவ்வூருக்குக் கருவைப் பதிற்றுப்பத்து அந்தாதி, கருவைக் கலித்துறை யந்தாதி. கருவை வெண்பா அந்தாதி என்ற நூல்களை வரதுங்கராம பாண்டியர் என்பவர் பாடியுள்ளார்.

**நமசிவாயகவி:** இவர் திருநெல்வேலி மாவட்டம் பாபநாசத்தலத்திற்கடுத்த விக்கிரம சிங்கபுரத்தில் வேளாளர் மரபில் தோன்றியவர். நவாபு அரசன் காண உலகம்மை கையிலுள்ள பூச் செண்டு தன்கைக்கு வரப் பாடினார் என்பர்.

பாபநாசம் உலகாம்பிகை பிள்ளைத்தமிழ், பதிற்றுப்பத்தந்தாதி சந்த விருத்தம், மாலை, சிலேடை வெண்பா முதலிய நூல்களை இயற்றியவர்.

வாழ்நன் என்பது வாணன் என்று மருவியதனால் மருஉ· நிருபம்-நிருபன்-மன்னன்· அக்காலத்தில் ஒரு மன்னனுக்கு மற்றொரு மன்னன் தனக்குப் பெண் தர வேண்டுமென்றோ அடிபணிய வேண்டுமென்றோ நட்புக்காரணமாகவோ பனை ஓலைகளில் செய்திகளை யெழுதி யனுப்புவர். மன்னனுக்கு இவ்வழக்கம் முதலில் இருந்தது. அது நாளடைவில் மக்களிடமும் பரவி நிருபம் என்பது கடிதம் என்று பொருள் பட்டதென்றறிக.

### தோழி பிரிவிற்குடன்படாமை

வெண்பா

ஆர்செய்த வஞ்சனையோ ஆறுமுகவே லாயுதமேற்
றூறுசொல்ல ஞாயமுண்டோ தோகையரே-பூமாதே
பனிக்குள் வெடிக்குமோ பாண்டியனு ருன்னாட்டில்
தனித்து விருப்பாளோ தான் 48

பாண்டியனை உன் நாட்டில் தலைவி உன்னை விட்டுப் பிரிந்திருப்பாளோ. சிறிது நேரமும் உயிர் வைத்திராள். பிரியும்படி செய்த இச்செயல் எவர் செய்த வஞ்சனையோ ? ஆறுமுக வேலாயுதம் மேல் குற்றம் கூற நியாயம் உளதோ? தோகையையுடைய மயில் போன்ற சாயலையுடைய மகளிரே. தாமரை மலரிலுள்ள இலக்குமி போல்வாளே. பனிக்காலத்தில் உள்ளம் எங்காவது வெறுப்பு ஏற்படுவது உண்டா? இவ்வாறு ஏற்பட்டிருப்பது மிகவும் வியப்பே.

தலைவனைப் பிரிந்தமையால் உள்ளம் வெடித்துவிடும் போன்று உள்ளது, என் செய்வேன் எனத் தலைவி இரங்கியவாறு காண்க.

பனிக்காலத்தில் பனி மிகுதியால் வெடிப்பு ஏற்படுவது உண்டு என்பதும் இங்கு உரைக்கப்பட்டுள்ளது அறிக,

தூறு - பழி தூற்றல். தனித்து இருப்பாளோ என்றே இருக்க வேண்டும், அல்லது தனித்து இருப்பாளே என்று அமைய வேண்டும்.

### காலம் போம் வார்த்தை நிற்கும்

வெண்பா

ஆலம்போல் நீலவிழி யங்கயற்கண் மாதே! கேள்
காலம்போம் வார்த்தை நிற்குங் கண்டாயே-சாலப்
பசித்தார் பொழுதும்போம் பாலுடனே யன்னம்
புசித்தார் பொழுதும்போம் போம், 49

விஷம்போலும் நீலமலர் போலும் பார்வையையுடைய அழகான கயல்மீன் போலும் கண்கொண்ட பெண்ணே! நீ, கேட்பாயாக, காலம் சென்று விடும்; சொன்ன சொல் மட்டும் நிலைத்து நின்றுவிடும். இதனை நீ அறியமாட்டாயோ. மிகவும் பசியுடையவரது பொழுதும் (பசிக்குங்) காலமும் சென்று விடும். பாலுடன் சோறு கலந்து உண்ட செல்வரது காலமும் சென்று விடும்.

பசியுடைய ஏழைகளின் பொழுதும், பாற் சோறுண்ணும் செல்வந்தர் பொழுதும் ஒன்றுகவே போய்க் கொண்டிருக்கும். இருவருக்கும் ஒரே பொழுது தான் சென்று கொண்டிருக்கும். ஒருவருக்கு ஒன்று. மற்றொருவருக்கு இன்னொன்று என்பது இல்லை.

ஆனால் ஒருவர் ஒரு வார்த்தையை சொல்லி விட்டாரானால் அது மட்டும் எப்போதும் இருந்து கொண்டே இருக்கும், அது நல்லதானாலும் அல்லதானாலும் சரியே. சொற்களைச் சொல்லும் பொழுதும் பேசும் பொழுதும் யோசித்துப்பேசவேண்டும். 'மடி நழுவினல் கட்டி விடலாம்; வாய் நழுவினல் கட்ட முடியாது' என்பது தமிழகத்தில் வழங்கும் ஒரு பழமொழி. அதனல் பேசுவதில் சிந்தனை வேண்டும் என்பதை இப்பாடல் விளக்குகின்றது. "ஆலம்போ லெழுநீல" திருவேற்காடு திருப்புகழ்).

### பிரம்மை பொன்னுவேற் பிள்ளையவர்கள்

### இயற்றியது

மலடுகளின் வகை.

ஆண்கூட் டிருந்துமொரு காலத்தும்
பிள்ளையில் லவள்சென்ம மலடியாகும்

ஆசையோடு மகவையீன் றவையெலா
மேமனுக் களிப்பவள் வழிமலடியாம்

மாண்பெறு கருப்பவதியா யிரண்டோர்
மதியில் மாபூதங் கழுதுசிங்கம்

மகிழ்நரொடு போகாதி சொப்பனங்கண்டு
கருமாய்ப்பவள் காம மலடி

ஆண்மக விறந்தொழிய பெண்களோடு
வதிபவ ளவள்கன்னி காமலடியாம்

ஆண்களே தங்கிடப் பெண்களைப் பறிதந்த
வரிவையே புருஷ மலடி

ஆணென்று பெண்ணென்று பெற்றுச்சுக
'மாகபுவி யமர்வளே காகமலடி

இருமைதரு மாண்பெண் ணிரண்டினி லொன்றின் றீட்
டிருப்பவள் வாழை மலடியாம்
கருமூன்று நாண்மூன்று மதிநின்று
கருநசிக் கப்பெற்றவளு முன்னொரு
கருவழிந்திட மூன்றுவருடத்திற் கருவழிய
காண்சூதி காம லடியாகும்
அருமைபிள் ளைகளெலா மழியதனி
யாய்நின்ற வவள்மிருத மலடியாகும்
இவ்வொன்பான் மலடெலாம் பாவமேலீட்டினு
லிங்குண்டா மென்ப ரான்றோர். 50

ஆணினுடைய சேர்க்கை இருந்தும் பிள்ளையில்லாதவள் சென்ம மலடியாவாள். ஆசையுடன் குழந்தைபெற்று அவையெல்லாவற்றையும் எமனுக்கு அளிப்பவள் வழி மலடி. (பரம்பரை மலடாவாள்) சிறந்த கருப்பமுற்று இரண்டொரு மாதங்களில் பூதங்களாலோ பேய்களாலோ சிங்கம் முதலியவற்ருலோ கணவனுடன் கூடி இன்பமுடன் சொப்பனங்களைக் கண்டு கரு அழியப்பெறுபவள் காம மலடி. ஆண் குழந்தை இறக்கப் பெண்களோடு மட்டுமிருப்பவள் கன்னிகாமலடி. ஆண்கள் மட்டும் தங்கப் பெண்களைப் பறிகொடுத்த வரிவை ஆண்மலடி. ஒருஆண் ஒருபெண்மட்டும் பெற்று இன்பமாய் உலகிலிருப்பவள் காக மலடி. ஆண் பெண்களில் ஒன்றை மட்டும் பெறுபவள் வாழை மலடியாவாள். கருவை 3 நாள் 3 மாசம் தங்க, கரு அழியப் பெற்றவள், முன்பு ஒரு கரு அழிய, மூன்று ஆண்டில் கருஅழிய வாழ்பவள் சூதிகாமலடியாம். அருமையான பிள்ளைகளெல்லாம் அழியத் தனியே யிருப்பவள் அழிவுடைய ம்ருத மலடியாவாள். இவ்வொன்பது வகை மலடெலாம் பாவம் மேலீட்டால் இங்கு உண்டாம் என்பர் மேலோர்.

## வேங்கடேசுர ரெட்டப்பன் மீது அகப்பொருள் பாடல்

*அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்*

ஆலுங் கரும்பை மிதித்தேறி அடரும் பகடு
கோடுதைத்தும்
அப்பாற் கஞ்ச னெடுவாளை யகற்றி திரைக்கா
வேய்ங்குழலும்
கோலுஞ் சுழுந்தோன் போலுமுது குடிநன்றுடை
னைமைப் புரக்குங்
கோமான் வேங்கடேசுரெட்டன் கொடைப்போற்
றழைத்த நெடுங்கடலே. 51

காற்றில் ஒலிக்கும் கரும்பை மிதித்துக் கொண்டு ஏறி எதிர்க்கும் எருமைக் கடா கொம்பால் குத்தியும், அப்பக்கத்தே தாமரையின் நடுவே வாளை மீன்களை நீக்கி மீன் பிடிப்போர் தம் கூடைகளில் நிறைத்துக் கொண்டு ஊதும் புல்லாங்குழலும், செங்கோலும் சுமந் தான் போலும்! நல்ல நாட்டினன். எங்களைக் காக்குந் தலைவன். வேங்கடேசுர ரெட்டன் கொடைத் தன்மை போல் செழித்து விளங் கும் நீண்ட கடலே!

கஞ்சம் - தாமரை, நிரைக்கா வேய்ங்குழல் - இடைச்சிறுவர் பசுவை அழைக்க ஊதும் புல்லாங்குழல்.

வேங்கடேசுர ரெட்டப்ப பூபதி :- பாண்டி மண்டலத்தில் உள்ள எட்டையபுரத்தை ஆண்டவர். இவரது குமரரன் முத்துசாமி யெட் டப்பன். இவரைப் பற்றி, சமுத்திர விலாஸம் என்ற நூல் கூறு கின்றது. இந்நூலை இயற்றியவர் கடிகை முத்துப் புலவர்

### மனிதராவார் இவரெனல்

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

ஆனதோர் புகழு முண்டாம்
 அறிவுடன் பொறுமை யாண்மை
தானமுந் தவமு முண்டாந்
 தருமமும் தயவு முண்டாம்
ஈனமாங் குலத்தில் வந்து
 எய்தினு மின்பத் தோர்கள்
ஆனதோர் புகழைக் கொள்வார்
 அவர்களே மனித ராவார். 52

அமைந்த புகழும் அறிவுடன் பொறுமை, ஆண்மைத் தன்மை, தானம், தவம், தருமம், தயை எல்லாம் ஏற்படும். தாழ்ந்த குலத்தில் வந்து தோன்றினும் இன்பமுடையவர்கள் அமைந்த புகழையே கொள்வார்கள். அத்தகையோரே மனிதர் எனப்படுவார்.

தானமும் தவமும்-முன் செய்யுளில் உள்ள விளக்கங்களைக் கொண்டறிக. தருமம் "தர்மோ ரக்ஷதி ரக்ஷித:" "தருமம் தலை காக்கும்" பழமொழிகள் "தான தர்மம்" என இரண்டினையும் சேர்த்தே நாட்டில் பேசுவது வழக்கம்.

தரும புத்திரர் - பாண்டவருள் முதல்வர். இவர் தர்மமே வடிவானவர்; எமனது அம்சம். எமனுக்கும் தர்மன் எனப் பெயர் உண்டு. எமதர்மன் என்று உலகில் கூறுவார்கள். தருமத்திற்கு ஒரு தேவதை உண்டு.

தரும தேவதை வெண்மை நிறம் நான்கு பாதம் இருகொம் புகள் உயர்ந்த முசுப்பு (கொண்டை), பூமியில் படியும் வாலுமுள்ள எருதின் உரு.

இது க்ருத யுகத்தில் 4 கால்களுடனும், துவாபரயுகத்தில் மூன்றுபாதங்களுடனும். த்ரேதாயுகயத்தில் 2கால்களுடனும் கலியுகத்தில் ஒரு பாதத்துடனும் நடக்கும்:

இது திருமாலின் மார்பில் தோன்றி எல்லா உயிர்களையும் காத்து விரும்பியதைத் தருவது.

''புகழைக் கொள்வா ரவர்களே மனிதராவார்''
''தோன்றிற் புகழொடு தோன்றுக'' —(குறள் 236)

## தோழி—பிறைகண்டிரங்கல்

வெண்பா

இச்சிக்கு மாத ரெவற்குமோ காமசரந்
தைச்சி தளர்வுறுமென் றன்னளவோ – கச்சி
வருவானம் பட்ட வடுகநாட் டிந்த
பெருவ்வானம் பட்ட பிறை. 53

காஞ்சிபுரத்தில் தோன்றி வருகின்ற வடுகநாட்டுள் இப்பெரு வானத்தில் தோன்றிய பிறை, விரும்பும் மகளிர் அனைவர்க்கும் தளர்வைத் தரும். அது என்னுடைய அளவிலோடு மட்டும் விட்டு விடுமா? என்னையும் வாட்டுகின்றதே.

வானில் தோன்றும் பிறை, மகளிர்க்குக் காமன் விடும் அம்பு பாய்தலால் தளர்வைத் தரும். இச்சித்தல் - விரும்புதல்.

"இச்சை அறிவியற்றலால் இலயபோக அதிகாரப் பொருளாகி" (கந்தர்கலி வெண்பா)

கச்சி - மயில் வடிவில் அமைக்கப்பட்டது. அதன் பின்பகுதி, தோகை போன்ற சோலை. ஏரி இரண்டுஞ் சிறகாளயில் வயிரூரக் காருடைய பீலி கடிகாவாச் - சீரிய அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே பொற்றேரான் கச்சிப் பொலிவு (யாப்.வி 93 உரை)என்று பெருஞ்சித்திரனர் நகரை அழகு தோன்றப் புகழ்வர்.

வடுக நாடு - ஆந்திரரை வடுகர் எனவும். அவர் பேசும் தெலுங்கை வடுகு எனவும் தமிழர் வழங்கினர். குடக்கிலுள்ளது, குடகு என்பது போல வடக்கிலுள்ளது. வடகு என்ருகி, பின் வடுகு என வடிவம் மாறி வழங்கப்பட்டது.

வடதிசை மருங்கின் வடுக" (காக்கை பாடினியம்) "வடவடுகர் வாளோட்டிய'' (புறம் 378)

பிற்காலத்தே ஆந்திர ருட் பலிஜர் முதலிய ஒரு பிரிவினருக்குப் பெயராகத் தமிழர் வழங்கினர்.

## மூதேவி சேருமிடம்

இஞ்சி நெல்லி யிலைக்கறி பாகற்காய்
கஞ்சி வெண்டயிர் கங்கு லருந்திடிற்
பிஞ்சிப் பூமகள் போயுடன் மூத்தவள்
கொஞ்சிக் கொஞ்சிக் குலவி நடிப்பளே. 54

இஞ்சி, நெல்லிக்காய், இலைக்கறி, (கீரை) பாகற்காய், கஞ்சி. வெண்டயிர் ஆகிய இவற்றை இரவில் உண்டால் இலக்குமி அவனை விட்டு விலகுவாள், அக்காளான மூதேவி வந்து குடிபுகுவாள்.

வெண்டயிர் - வெண்மையாகிய தயிர், பூ மகள் - தாமரை மேல் வீற்றிருக்கும் இலக்குமி.

கொஞ்சிக் கொஞ்சி-அடுக்கு. குலவி "எந்தையும் தாயும் குலாவி யிருந்ததும் இந்நாடே" (பாரதியார்)

### சங்கப் பாடல்

பிறந்தக வாழ்வை வெறுத்தல்

ஆசிரியப்பா

இராமழை பெய்த வீர வீரத்துச்
செங்கோல் வேந்த னுழவ னாகிப்
பனைநுகங் கொண்டு யானையேர் பூட்டி
வெள்ளி விதைக்கப் பொன்னே விளையினும்
வேண்டேன் பிறந்தகத் தீண்டிய வாழ்வு
செங்காய் வரகுப் பசுங்குரல் கொய்து
கன்று காத்துக் குன்று நுணுக்கி
யூடுபதர் போக்கிமுன் னுதவினோர்க் குதவிக்
காடுகளை யிந்தனம் பாடுயர்த் தெடுத்துக்
குப்பைக் கீரை யுப்பின்றி வெந்ததை
யிரவத் தாலம் விரைவுட னெடுத்துச்
சோறு கொண்டு பீற லடைத்தே
ஒன்றுவிட் டொருபொழுது தின்றே கிடப்பினும்
நன்றே தோழி நங்கணவன் வாழ்வே. 55

இரவு மழை பெய்ததனால் ஈரநிலத்தில் செங்கோல் செலுத்து கின்ற மன்னன் உழவனாய், பனைமரத்தினை நுகத்தடியாகக் கொண்டு யானையையே ஏர் உழும் காளைகளாகப் பூட்டி, வெள்ளியையே விதைக்க விடியற் காலத்தில் கிழக்கே தோன்றும் சுக்கிரோதயத்தில் உழுது விதைத்துப் பொன்னாகவே விளைந்தாலும் பிறந்தகத்து வாழும் வாழ்வை விரும்பேன்.

சிவந்து நன்கு முற்றிய காய்களையுடைய வரகு என்ற தானியத்தினது பசுங் கதிர்களைக் கொய்து மாடு கன்றுகள் மேய்ந்து விடாதவாறு பாதுகாத்துக் குன்றி எனப் பொடி செய்து சேர்ந்துள்ள பதர்களை விலக்கி, முதலில் தனக்கு உதவியவர்களுக்கு எல்லாம் தாராளமாகக் கொடுத்து, காடுகளை ஆராய்ந்து விறகுகளைச் சேகரித்துக் கட்டாகக் கட்டி அதனை அடுப்பிலிட்டு எரித்து, குப்பை மேட்டில் விளைந்த கீரையை உப்பிடாமல் வேகவைத்ததை அயலார் வீட்டுத் தாம்பாளத்தில் வேகமாக எடுத்து, சோற்றைக் கொண்டு பொத்தல்களை ஓட்டைகளை) அடைத்து ஒரு வேளைவிட்டு மறுவேளை உண்டு (கிடந்த இருந்த போதிலும் நல்லதே. தோழி நம் கணவனுடன் வாழும் வாழ்வே சிறந்தது.

வெள்ளி - சுக்கிரன். பொன் - வியாழன் இரண்டும் நவக்கிரகங்கள். இங்கு வருதல் நயம், வெள்ளி விதைத்தால் மற்றொரு உலோகம் விளையாது. எதனை விதைக்கிறோமோ அதனைத்தான் அறுக்கலாம், வினை விதைத்தவன் வினையே அறுப்பான். தினை விதைத்தவன் தினையே அறுப்பான் என்பது பழமொழி. "விரை ஒன்று விதைக்கச் சுரை ஒன்று முளைக்குமா" என்பதும் இதனையே விள்க்க வந்த பழமொழியே. மன்னர் பகைவர் நாட்டைக் கைப்பற்றிப் பனைமரத்தை நுகத்தடியாகக் கொண்டு விதை விதைப்பர்.

இரா - இரவு என்பது. குப்பைக் கீரை - இது குப்பைமேட்டில் தாமாக வளருங் கீரை. கன்றுகாத்து - மாடு கன்றுகள் மேயாமல் பாதுகாத்து, இங்குக் கன்று ஒன்றே கூறினும் "ஒன்றினம் முடித்தல் தன்னினம் முடித்தல்" என்ற உத்தியான் பயிர்களை மேயவரும் விலங்குகளனைத்துக்குமே பொருந்தும் எனினும் மாடு, கன்று என இணைத்துக் கூறுவது வழக்காதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

குன்று நுணுக்கி - குன்றியளவாகச் சிறிது சிறிதாக ஆகுமாறு கதிர்களிலிருந்து பொடிசெய்து, உரலில் இட்டுக் குத்தி. பசுங்குரல் - பச்சை பசேல் என வெளிவரும் கதிர். முன் உதவினோர்க்குதவி - "உதவி வரைத்தன்று உதவி. உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து" (குறள் 105).

"செய்யாமற் செய்த வுதவிக்கு" குறள் 101-ன உரையில் பரிமேலழகர் விளக்கமெழுதும்போது, "கைம்மாறுகளெல்லாம் காரண முடையவாகலின், காரணமில்லாத உதவிக்கு ஆற்றுவாயன" எனச் சிறப்புரை காண்பது ஈண்டு கருதத்தக்கது.

"காடுகளை யிந்தனம் பாடுயர்த்தெடுத்து" காடுகளில் விறகு வெட்டி அவற்றைச் சுமைகளாகக் கட்டி விற்பதும் உண்டு, சொந்த உபயோகத்துக்கும் பயன்படுத்துவதுமுண்டு.

"உப்பின்றி வெந்தது" உப்பு வாங்கக்கூடக் காசில்லாமல் முன் காலங்களில் மக்கள் ஏழ்மையுற வாழ்ந்தமை இங்குத் தெளிவு.

நோய் நொடி வந்த போது உப்பின்றி வேகவைத்து உண்ணு மாறு நாட்டு வைத்தியர் கூறுவதும் உண்டு. அப்போது அப்படி வேகவைப்பதுமுண்டு. நோய் நொடி வந்தாலும்கூடப் பிறந்தகம் செல்ல விரும்பவில்லை தலைவி என்பதே இங்குக் கருத்து.

“சோறு கொண்டு பீறல் அடைத்து” உடலைச் சோற்ருலடித்த சுவர்” என்பர், அதனுல் இவ்வுடலாகிய சுவரில் ஏற்பட்ட பசி என்ற ஓட்டையை (துளையை) ஒரு வேளை மட்டும் உண்டு மறு வேளை பட்டினி கிடந்து” வாழ்ந்த குடும்பங்கள் அன்றும் இருந்தன; இன்றும் இல்லாமல் இல்லை.

## தலைவன் கூற்று

கட்டளைக் கலித்துறை

இருப்புக் கபாடம் படீரென வேமிதித் தேறுதந்திப்
பொருப்புக் குதையன் தளவாய் நரேந்திரன் பொலன் கிரிவாழ்
கருப்புச் சிலைநுத லீர்முகத்தே தும்பிக் கண்படைத்தீர்
மருப்புக் கையும்பெறி னும்மைமுன் னேனென்று வாழ்த்துவனே. 56

மதில் வாயிலின்கண் உள்ள இரும்புக் கதவைப் படீரென்று உதைத்துக் கொண்டு ஏறுகின்ற தந்தத்தையுடைய மலையாகிய யானையின்மேல் தோன்றுகின்ற தளவாய் நரேந்திரன் அழகிய மலையில் வாழுகின்ற கரும்பு வில்லைப்போன்ற நெற்றியையுடையீர், முகத்தில் வண்டு போலும் கருமையான விழி படைத்திருக்கின்றீர். தந்தமும், துதிக்கையும் பெற்ருல் உம்மைத்தெய்வங்களுக்கு முன்னே ணை விநாயகன் என்று கூறி வாழ்த்துவேன்.

இரும்புக் கவாடம்-என்பது, சிலம்பு அதிகாரம், சிலப்பதிகாரம் என அமைந்தது போல. “மென்ருெடர் மொழியுட் சில வேற்றுமை யில், தம்மின வன்ருெடராகா மன்னே என்ற நன்னூல் விதிப்படி “மன்னே” என்ற மிகையால் அமைந்தன என்க. கருப்புச்சிலை யென்பது மவ்விலக் கணத்ததே.

படீர் என-என்பது படீரென, என்று அமைந்தது ஒலிக்குறிப்பு. தந்தி-தந்தத்தையுடையது. தத்திதாந்தநாமம், சிலை நுதல் :- உருவகம், சிலையே நுதல்.

ஆனை சொல்லியதற்கு ஏற்றவாறு, முகத்தில் தும்பிக்கையும் மருப்பு(க் கை) தந்தத்துடன் கூடிய கை என்றும் சொல்லப்பட்டு, அவ்வாறு இருந்தால் முன்னோன் (விநாயகப் பெருமான்) என்று வாழ்த்தி வணங்கலாம் என்று கூறியிருப்பது நன்கு நயம் உணர்ந்து இன்புறத்தக்கது.

## சீய புரந்தானனிடமிரத்தல்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

இல்லையென வறியாத சீயபுரந்
தானனைப்போய் யாழ்ப்பா ணன்றுன்
பல்லைவிரித் திரந்தக்காற் பழகுசோற்றை
வெண்டுசைப் பாலி யாமற்
கொல்லநினைத் தானப்பா நால்வாயைப்
பரிசென்று கொடுப்பா ருண்டோ
தொல்லுலகி னல்வாய்க்கு மொருவாய்க்கு
மிரையெங்கே துரப்பு வேனே. 57

கேட்போருக்கு இல்லை யென்பதையே அறியாத சீயபுரம் என்ற நகரை ஆண்டவனிடம் போய் யாழ்ப்பாணன் பல்லைக் காட்டி யாசித்தால், பழைய சோற்றையும் வெண்மையான ஆடைகளையும் கொடுத்துப் பாதுகாக்காமல் கொல்ல எண்ணினான், அப்பனே. தொங்குகின்ற வாயையுடைய யானையைப் பரிசு என்று கொடுப்பவர் உலகில் உளரோ? பழமையான உலகில் நான்கு வாய்க்கும் ஒரு வாய்க்கும் உணவு எங்கே தேடுவேன் ?

இல்லை-இல்லையென மாட்டார் இசைந்து "—நல்வழி 9. இரத்தல்-ஈயென இரத்தல் இழிந்தன்று ஈயே னென்றல் அதனினு மிழிந்தன்று" (புறம் 204) இரந்து முயிர் வாழ்தல் வேண்டின் பரந்து, கெடுக உலகியற்றி யான். (குறள் 1062)

பல்லை விரித்திரத்தல் - "பல்லெலாந் தெரியக் காட்டி, பருவரல் முகத்திற் கூட்டி. இரத்தல் இழிவு இழிவு எந்த ஞான்றும்" குசேலோபாக்கியானம் (1-66)

வெண்டுசு - வெண் துசு - வெண்மையான ஆடை. யாழ்ப்பாணன் - இலங்கையிலிருந்து வாழ வந்தவன்.

நால்வாய்-கீழ் நோக்கித் தொங்குகின்ற வாய் உடைய யானை. யானையைப் பரிசாக அக்காலத்தே கொடுப்பது வழக்கம். பாணன் ஒருவன் யானையைப் பரிசாகப் பெற்று வந்து தன் மனைவி பாணினியிடம் யானையின் பெயர்களும் வேறு பொருள்களும் தோன்றப் பாடிய பாடலரில் உணர்க.

(தன்) ஒரு வாய்க்கே இவ்வுலகில் உணவு தேடமுடியாத நான் நால்வாய்க்கு(யானைக்கு)வேறு எங்கே உணவு தேடுவேன் என்கிறார் இப்புலவர். யானையைக் கட்டித் தீனி போடுவது என்பது அரிய செயல். ஒருவாய் நால் வாய் எனக் கூறியதுணர்க. துரப்புவேன்- தேடுவேன்.

## தாமோதரவேள்மீது பாடியது

ஆசிரிய விருத்தம்

*இலக்கண நூ லன் குணர்ந்தோ ரிலக்கியமே தேரார்*
*இரண்டு முணர்ந்தோ ரெனினுங் கவியியற்ற வறியார்*
*கலக்கவி செய்வோர் வசனகா வியமே யறியார்*
*காவியஞ் செய்வோர் மதங்கள் கழறிடவே தெரியார்*
*தலக்கணுரணர்ந் தோர்கள் பிரசங்கமே தெரியார்*
*தரையியற்கை யிலை யவெனிற் றமிழோடைங் கிலியக்*
*கலைக்கியான முழுதுணர்ந்த பூரணபண் டிதனங்*
*கன தா மோதர வேட்குக் கலைமகளு நிகரோ ?* 56

இலக்கண நூலை நன்றாக அறிந்தவர்கள் இலக்கியத்தைப் பற்றி நன்கு அறிய மாட்டார்கள். இலக்கணம் இலக்கியம் இரண்டையும் நன்றாக அறிந்தவர் என்றாலும் கவிதை (செய்யுளை) இயற்ற அறிய மாட்டார். அளவற்ற கவிதைகளைச் செய்பவர் உரை நடைக் காவியம் என்ன என்பதே அறிய மாட்டார். காவியங்கள் செய்பவர்கள் (இலக்கண நூல் கூறும் எழுவகை மதங்களைப் பற்றிக் கூற அறியமாட்டார். தன்மங்களைப் பற்றி அறிந்திருப்பார், ஆனால் சொற்பொழிவாற்ற அறியமாட்டார். உலகின் இயற்கை இதுவென்றால், தமிழுடன் ஆங்கிலக் கலைஞானமும் மற்று முழுதுமறிந்தவரும் முழுமையரின பண்டிதரு மான தாமோதரவேளுக்குக் கலைமகளும் ஒப்போ? ஒப்பாகாள்.

தாமோதர வேள் :- யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர். இராவ்பகதூர் பட்டம் பெற்றவர். சென்னையில் அரசாங்க உத்தியோகம் பார்த்தவர். கும்பகோணத்தில் வக்கீலாகவும், புதுக் கோட்டையில் நீதிபதியாகவும் இருந்தவர். பல பழைய தமிழ் நூல்களை அச்சிட்டிருக்கிருர்.

கலைமகள் - அறுபத்து நான்கு கலைகளுக்கும் தலைமையான வாக்குத் தேவதை.

## சுரப்பவை

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

இறைக்கச் சுரக்கு மணற்கேணி
ஈயச் சுரக்கும் பெருஞ்செல்வம்
அறுக்கச் சுரக்கும் பூம்பாளை
யணுகச் சுரக்குங் காமப்பால்
கறக்கச் சுரக்கு மாவின்பால்
கற்கச் சுரக்கு மெய்ஞ்ஞானந்
திறக்கச் சுரக்குந் தீபவொளி
சிவத்துட் சுரக்கும் பரவெளியே. 57

மணலில் தோண்டிய நீருற்று, இறைக்க இறைக்க ஊறும். மிகுந்த செல்வம் அள்ளி அள்ளித்தர வளரும், தென்னம் பாளை அறுக்க அறுக்க வளரும். காமமானது பெண்ணை நெருங்க நெருங்க வளரும். பசுவின் பால் கறக்கக் கறக்கச் சுரக்கும். உண்மை ஞானம் படிக்கப் படிக்கச் சுரக்கும். தீபத்தின் ஒளி, திரையைத் திறக்கத் திறக்கப் பிரகாசித்து விளங்கும். சிவத்திடம் பிரகாசப்பட்டு விளங்கும் 'பர' வெட்ட வெளி.

மணற்கேணி "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத் தூறு மறிவு" (குறள். 396).

திறக்கச் சுரக்கும் தீபவொளி :- திருவாதிரையன்று 7 திரைகள் இட்டு வைத்திருப்பர். ஒவ்வொன்ருக விலக்கவிலக்கத் தீப வொளி தெரியத் தொடங்கும் என்பார்கள். கோவில்களில் இவ்வாறு செய்வது வழக்கு. பரவெளி-சிவத்தைத் தியானிக்கத் தியானிக்கச் சோதி விளங்கும்.

## இன்பப் புணரி

### ஆசிரியம்

........................இறைமார் பிடங்கொள்
மலர்மேல் மங்கையின் மன்னுமோ ரஞ்சத்
தளிர்போல் மேனித் தைய லொருத்தி
ஈரா ருட்டைப் பிராயத் திளையாள்
வயிறு வாய்த்தனள் வயாவுற் றனளே
ஊனுட் கொள்ளா ளொருசிறி துற்றது
எதிரெடுத் தெய்த்தனள் இருந்திருந் தொல்கித்
துயின்றனள் மயிலொத் துறுபஞ் சணையில்
மெல்லிய லிளைத்தனள் மீது நரம்பு
பைத்தன சூலும் பையமு திர்ந்தாள்
மற்றது காணூஉ மன்ற விரங்கி
ஆடவர் பலரு ''மம்ம! குரீ இன்
தலையிற் பனங்காய்த் தாங்குமோ கொல்''லெனக்
கோதையர் பலருங் ''கொடிக்குக் காயது
தாங்கரும் பாரமோ சாற்றுமி'' னென்ன
தளர்நடை யெய்தித் தகுமீ ரைந்தாம்
மதிவந் தெய்த மதிநுதல் நோவுற்று
''அம்மகோ'' வென்று அலறி விம்மி
வெயிலிற் புழுவென வெம்பித் துடித்து
வேதனை கைம்மிக வேலுறாஉ மானென
வெய்துயிர்த் தழுது வேர்த்துமெய் நடுக்குற்று
ஒருகால் கல்லறை யுற்ற தெனவும்
எமபுரங் குரோச மிவளுக் கெனவும்
களைத்துக் கண்கள் காணு வாகச்
செவிகே ளாது தெய்ய மாழ்குழி,
குழந்தையின் அழுகுரல் குவாவெனச் சிறிது
செவிபுக் குறைப்பச் சேண்விளங் கொருமுதல்
ஒருத்தி பிடிப்பவு மொருத்தி யடிப்பவும்
எளிய ளாகிவந் தெடுத்தடுக் குறிக்கண்
வெண்ணெ யுண்ணொன்று செய்வேறு கானத்தால்
பட்ட மரந்தழைத் தாங்குப் பதறுடல்
பூத்துளம் பூரிப் பெய்தப் புரிந்துதான்,
முந்துறு துயரெலா முதலிலாக் கனவென
எண்ணி யின்பப் புணரியி லாழ்ந்தனள். 58

சிறிதளவு திருமாலின் மார்பில் இடங் கொண்டு விளங்கும் தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் இலக்குமி போன்ருள் பயந்து காணும் மாந்தளிர் போலும் உடலுடையாள் ஒருத்தி, பன்னிரண்டு வயதுடைய இளையாள் தன் வயிற்றில் குழந்தை உண்டாகப் பெற்ருள்; மசக்கையுடையவளாஞள்; அதனுல் உணவு உட்கொள்ள வில்லை; ஒரு சிறிதளவு அப்படியே உட்கொண்டாலும் எதிரே எடுத்து எறிந்து விடுவாள். மயில் போல் பஞ்சு மெத்தையில் படுத்துப் படுத்து அசதியுடையவளாய் உறங்கிஞள்; உடல் மெலிந்தாள்; இளைத்துப் போஞள்; உடலின் மீது நரம்புகள் தெரியலாயின; மெல்ல மெல்லக் கருப்பமும் முற்றியது. அதைக் கண்டு மிகவும் இரங்கிஞள். ஆண்களெல்லாரும் 'அம்மா! குருவி, தலையால் பனங்காயைத் தாங்கமுடியுமோ?' என்றதிசயித்தார்கள். மகளிர்கள் எல்லோரும், "கொடிக்குக் காயானது தாங்க முடியாத பாரமாகுமோ சொல்லுங்கள்" என்றனர். நடை தளர்ந்தாள்; பொருந்திய பத்தாம் மாதம் வந்தடையச் சந்திரன் போலும் முகத்தாள், பிரசவத்திற்கறிகுறியான (நோய்) வலி எடுத்து, 'அம்மா அம்மா...... என்று வாய் விட்டு அலறிஞள்; விம்மி விம்மிப் பெருமூச்சு விட்டாள்; வெயிலில் கிடந்த புழுப்போலத் துடித்தாள். பிரசவ வேதனை மிகுதியாக வேலாலடிபட்ட மான்போல வெம்பித் துடித்தாள்; ஒரு வேளை கல்லாலடிப்பட்ட மான் போன்ருள். இயமனுலகம் ஒரு குரோசமளவே உளது எனவும் சொல்லும்படியாஞள்; களைத்துக் கண்கள் தெரியாதவளாஞள்; காது அடைத்தது; மிகவும் வேதனைப்படும் போது குழந்தையின் அழுகுரல்'குவா குவா' என்பது சிறிது காதில் கேட்க, தொலைவிலிருந்து ஒப்பற்ற ஒருத்தி அவளைப் பிடித்துக் கொள்ளவும், மற்ருெருத்தி அடிக்கவும், எளியவனுய்ச் சாதாரணமான, மனிதனுய் வந்து அடுக்கி வைக்கப்பட்ட அடுக்களையில் உள்ள உறியில் வெண்ணெயுண்ணும்போது செய்த (வேணுகானத்தால்) குழலோசையில்பட்ட மரம் தழைத்தாற் போலப் பதறுகின்ற உடம்பு, இன்பத்தால் பருத்து, உள்ளம் மகிழ்ச்சியால் பூரித்துப் பொங்க மகிழ்ச்சி அடைந்து, தான் முன்பு அடைந்த துன்பமெலாம் காரணமில்லாத கனவு போலாம் என்று நினைந்து இன்பக் கடலில் மூழ்கித் திளைத்தாள்.

இப்பாடல் கருப்பமுறும் மகளிர் இயல்பை அழகுற விவரிக்கின்றது. 12 வயது பெண் லக்ஷ்மி தேவிக்கு ஒப்பாகக் கூறப்படுகிருள்.

குருவி தலையில் பனங்காய் வைத்தாற் போல், கொடிக்குக்காய் பாரமாகுமா, வேல்பட்ட மான் போல், முதலிலாக் கனவு போல் வேணுகானத்தால் பட்ட மரம் தழைத் தாங்கு, வெயிலிற் புழுவென" என்ற பழமொழிகள் இப்பாவில் கையாளப்படுகின்றன.

இப் பாடலுள் பிரசவ வேதனை சித்தரித்துக் காட்டப்படுகிறது. கண்ணன் குழலூதும் போது பட்ட மரம் தழைத்தது போல் பிரச வித்தபின் பட்ட துன்பம் மறந்து இன்புறும் செய்தி விவரிக்கப்படும் அழகான பாடல் இது.

வயா - கர்ப்பமுற்ற மகளிரின் அல்ப ஆசை;அக்காலத்தில் பிறர் அறியாமல் மண்ணைச் சுவரிலிருந்து எடுத்து உண்பது வழக்கம். இச்செய்தியைப் புறநானூறு.

வயாவுறு ம க ளி ர் வேட்டுணி னல்லது ........
பகைவருண்ணு வருமண் ணினையே" என்று விவரிக்கிறது.
(புறம் 20

கல்லறை – பிணம் புதைப்பிடம். குரோசம் - இக்காலத்தில் மீட்டர் தொலைவு என்று சொல்வது போலப் பழங்கால அளவுப் பெயர்.

தளிர் போல் மேனி - உவமை. மதி நுதல்-உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

காணூஉ (கண்டு); குரீஇ - குருவியின் என்பது பொருள்; வேலூறுஉ மான் - இவை உயிரளபெடைகள்,

அம்ம! இரங்கற் குறிப்பின் வந்த வியப்பிடைச்சொல் இச்சிறுமி குழந்தையை வயிற்றில் தாங்குவது எப்படி என்று இரக்கம் ஒரு புறம்; ஆச்சரியம் மறுபுறம், என்க.

பைத்தன – கர்ப்பமுறுவாள் நரம்புகள் உடல், மெலிவுற்றிருப்பின் பச்சைப் பசேலென நரம்புகள் தோலின் மீது காணும் பசுமை நிறமாகக் காணப்படும்.

அழுகுரல், செய்கானம் வினைத் தொகைகள். 'அளியனாகி வந்து' கண்டார் இரங்கும் வகையில் தனியனாய் வந்து என்பது பொருள்.

"அளியன் தானே முதுவாய் இரவலன்" என்பதும் காண்க. (திருமுருகாற் 284).

இன்பப்புணரி என்று மட்டும் கூறியதால் ஏகதேசவுருவகம்.

## இராம வேளானைப் பாடியது

வெண்பா

இன்மை பொறுத்தோம் இயம்பினோம் நீநம்மை
இன்னந் தெரியா திருந்தக்கால் - உன்னையாம்
பாட்டிலே தோணும் படிசித்தி நாதனைப்போல்
நாட்டுவோம் ராமவே ளான். 59

இராமவேளான் என்ற பிரபுவே! வறுமையைப் பொறுத்துக் கொண்டோம்; எடுத்துச் சொன்னேம்; நீர் நம்மை இன்னும் அறிந்து கொள்ளாமலிருப்பீராஞல் உம்மை யான் மனதில் தோன்றியவாறு, சித்திநாதனைச் சொன்னது போல் உம்மையும் கூறுவோம்.

சித்திநாதன் என்பவரிடம் இப்பாடலைப் பாடிய புலவர் சென்று ஏதோ வேண்டிக் கேட்டும் கொடுக்காமையால் வாய்க்கு வந்தபடி பேசியதும், அது போல் இராம வேளான் என்பவரையும் பேசப் போவதாகவும், தனது வறுமையைப் பற்றி எடுத்துக் கூறியும், உபகாரஞ் செய்யாமலிருப்பதையும் சுட்டிக் காட்டுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

தோன்றும்படி என்பது தோணும்படி எனப் பேச்சு வழக்குள் வழங்கும்.

## தலைவன் பிரிவிற்கிரங்கல்

வெண்பா

இன்று புதிதோ வெமதாவி காத்தளிப்ப
தன்றுமுத லின்றளவு மல்லவோ – வென்றிதிகழ்
காக்குநாய கன்செழியன் கந்தாடை யேயணையில்
தூக்குமா முத்தனையார் சொல். 60

எமது உயிர் பாதுகாக்க அன்றுமுதல் இன்றுவரை வெற்றி விளங்கும் காத்தலில் வல்ல தலைவன் செழியன் கந்தலா டையையே கட்டிக் கொண்டால் முத்துப் போலும் பற்களையுடைய மகளிர் சொல் உயர்ந்து நிற்குமோ?

கந்தாடை-கந்தலான ஆடை, கந்து + ஆடை எனவும் பிரித்துப் பொருள் கூறுக. கட்டுத்தறியை ஆட்டி அசைக்கும் ஆற்றலுடைய துதிக்கையைத் தூக்கிக் காட்டும் இயல்புடைய விலங்கான யானை போன்ற நடையுடையார் மகளிர் என்க.

முத்துக்கள் பிறக்குமிடம் 32ல் யானைத் தந்தமும், மகளிர் கழுத்தும் உண்டு என்பது திருவிளையாடற் புராணத்தால் இங்கு உணரத் தக்கது.

மகளிர் சொல் உயர்ந்து நிற்காது; தலைவன் தலைவியைப் பிரியான். அவனைப் பிரிந்தால் அவளாவி பிரியும் என்பது பொருள்.

## பெரியவர்சொல் கேள்

கட்டளைக் கலித்துறை

ஈரெட்டு முன்வந்து புறமுட் டுற்றறவு மீற்றுவண்ணம்
தேரொட்டு மூன்றுமுட் டலொடு தேற்றவுஞ்சிந்தை
செய்து
சீரிட்டு னுரைப்பற் றிலொன்றி யாதவர் தேர்ந்தவற்றைப்
பாரிட்ட மாகப் பெரியோர் தமதுரை பாத்தறியே. 61

பெரியவர் விருப்பப்படிக் கண்டறிந்து கொள். பார் (இஷ்டம்) இட்டம் எனப்பிரிக்க.

ஈரெட்டு – பதினாறு வயதுக்குள். "இளமையிற் கல்" என்பதே சாரம். பதினாறு வயதுக்கு மேல் மகனுக்கு ஆகிவிடுமானால் அவனை நண்பன் போல் பாவிக்க வேண்டுமென நீதிசாரம் அறிவு கூறுகிறது. அதனால் அதற்குள் பெரியோர் சொல் கேட்டுப் படித்துக் கொள்ள வேண்டும் என்பது இங்குக் குறியீடு. பற்றில் ஒன்றிலாதவர் - பற்றற்றவர் அல்லது பத்தில் ஒன்று குறைந்த முதியவர். பார்த்தறி – என்பது பாத்தறி என வந்தது.

## மறவரியல்பு

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

ஈனமது தானறியா ரின்ப துன்ப
மீதெனினு மன்றியிலே யிருந்து வாழ்வார்
தானதன்மந் தனையறியார் கந்தை யாளர்
சாதிகுல பேதமெனுந் தன்மை யில்லை
யானபுகழ் கொள்ளறியா ரன்பு மில்லை
யஞ்செழுத்தின் றிறமறியா ரறிவு மில்லை
கானகமே யிடமாக விருந்து வாழ்வார்
கன்மறத்தின் குலத்தில்வந்தோர் கண்டுகொள்ளே
62

தாழ்வை உணரமாட்டார்கள். இன்பதுன்பங்களிலிருந்த போதும் அவற்றை மனதில் கொள்ளாமல் வாழ்வார்கள். பிறருக்கு அளிக்கும் தான தருமங்களைச் சிறிதும் செய்வதற்கு அறிய மாட்டார்கள். கந்தையாடைகளையே அணிவார்கள். சாதிகுல வேறுபாடுகளை உணரமாட்டார்கள். சிறந்த புகழைத் தேடவேண்டுமென்று எண்ண மாட்டார்கள். உள்ளத்தில் அன்பு இல்லை. ஐந்தெழுத்தின் வகையை யுணரமாட்டார்கள், அறிவும் இல்லை, காடே இருப்பிடமாகக் கொண்டு வாழ்வார்கள். கல்போன்ற உறுதிமனமுடைய மறவர் குலத்தில் வாழ்ந்தவர்கள்; இதனைக் கண்டு கொள்வாயாக.

மறவர் - வீரர். காட்டில் வாழ்பவர். தானதன்மம் - தானம். என்பது, தேவர்க்கும் நல்லோர்க்கும் ஈந்து புண்ணியம் பெறுவது. தரும வழியில் தேடிய பொருளை முக்குற்றமற்ற நல்ல தவத்தோரைக் கொள்க எனப் பணிந்து குறையிரந்து தம் உள்ளம் உவந்து ஈவது தலைப்படுதானம்.

ஆதுலர் குருடர் மாதர் முதல் பிறர் சிறுமையைப் பற்றி மனம் இரங்கி ஈவது இடைப்படு தானம், புகழ் ஆரவாரம் கைம்மாறு அச்சம் கண்ணோட்டம் காரணம் கடைப்பாடு இவற்றால் ஈவது கடைப்படு தானம் என மூவகை.

நாற்பத்திரண்டு வகை தானங்கள் அபிதான சிந்தாமணியுள் விவரமாகக் குறிக்கப்படுகின்றன. அவற்றுள் 16 சிறந்தன எனச் சுருக்கப்பட்டுமுள்ளன.

திருமணக் காலத்தில் புதுமணத் தம்பதியர் (பல) தானம் செய்வர். இறந்தவருக்குச் செய்யும் 12ஆம் நாள் கிரியைகள் முடித்து அவற்றின் முடிவில் பஞ்சதானம் தசதானம் கோதானம் எனவும் மற்றும் பலவும் தம்தம் சக்திக்கு ஏற்றபடி செய்வர்.

பூசை. யாகம். யக்ஞம் முதலான காரியங்கள் முடிந்ததும் அதன் பிறகு அதன் பயன் பெறத் தான தருமங்கள் செய்வர். தானங்களுள் சிறந்தது அன்னதானம். அவற்றுள்ளும் மிகவும் உயர்ந்தது நிதானம் என்பதே. பெரியோர்கள் கொண்ட முடிவு.

> "தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
> வானம் வழங்கா தெனின்" (குறள் 19)

என்ற குறளுக்குப் பொருளெழுதும் பரிமேலழகர் "தானமாவது அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடுங் கொடுத்தல்; தவமாவது மனம் பொறி வழி போகாமல் நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின. பெரும்பான்மைத் தானம் இல்லறத்தின் மேலும், தவம் துறவறத்தின் மேலும் நின்றன" என்று பொருளெழுதுவர். குறள் 19 உரை.பரிமே.

தவமாவது மனம் பொறி வழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயினிலை நிற்றலும் மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப் பிற வுயிர்களை யோம்புதல். (தவம். பரிமே. முன்னுரை).

## பிரபு இறந்ததற் கிரங்கல்

கொச்சகம்

உங்கள் மக்களும் நீங்களும் நோய்கொள்ள
எங்கள் மக்களு நாங்களு மென்செய்தோம்
எங்கள் மக்களும் நாங்களும் படுதுயர்
உங்கள் மக்களு நீங்களும் படுவீரே. 63

உங்களுடைய மக்களும் நீங்களும் துன்பங் கொள்ள, எங்கள் மக்களும் நாங்களும் என்ன தீவினை செய்தோம். எங்கள் மக்களும் நாங்களும் நீங்கள் இல்லாமையால் படுகின்ற துன்பத்தை உங்கள் மக்களும் நீங்களும் படுவீராக.

நீங்கள் இல்லாமையால் கொடுத்து ஆதரிப்பாரின்றி நாங்கள் வருந்துகிறோம், அதுபோல் நீங்களும் சென்று விட்டதால் எங்களைப் போலவே பெற்றுக் கொள்பவர் இல்லாமல் யாருக்கு இனிக் கொடுப்பது என்று ஏங்கி வருத்தப்படுக.

நோய் - வருத்தம். "ஒருநோக்கு நோய் நோக்கு" (குறள் 1091)
"நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம்" —(குறள் 320).

படுதுயர் - வினைத்தொகை. என் செய்தோம் - செய்தோம் உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்று. என் - "எவன் என்னும் குறிப்பு வினையை என்னென்றும் என்ன என்றும் வழங்கும் இத்தொடக்கத்தன மரூஉ" (நன். சூ. 267 சங்க உரை).

## விசயரகுநாதன் மகன் கோபாலத் தொண்டைமானைப் பாடியது

ஆசிரிய விருத்தம்

உதிக்கின்ற சந்திரபிம் பத்தினிடை விளங்கக்
களங்க மென்றே யுரைக்க யாரும்
மதிக்கின்ற முகமதனில் கஸ்தூரி திலகமிட்ட
பெண்ணைச் சேர்வாய்
பதிக்கின்ற ரத்னமுடி விசையரகு நாதனுனைப்
படைத்த யோகா
துதிக்கின்ற மதனகோடித் துரைராச கோபாலத்
தொண்டை மானே. 64

மாலையில் தோன்றுகின்ற சந்திரபிம்பத்தின் நடுவே விளங்குகின்ற களங்கம் என்றே யாரும் உரைக்க, எல்லாரும் மதிக்கும் முகத்தில் கஸ்தூரிப் பொட்டிட்ட பெண்ணைச் சேர்ந்து இன்புறுவாய், இரத்தினம் பதித்த முடியுடன் விளங்கும் விசயரகுநாதன் உன்னைப் பெற்ற யோகத்தால் (அதிர்ஷ்ட வசத்தால்) போற்றிக் கொண்டாடும் கோடி மன்மதர்களை யொத்த துரையான ராசகோபாலத் தொண்டைமானே!

இப்பாடல் விசயரகுநாதன் மகன் ராசகோபாலத் தொண்டைமான் என்பதனையும், அவனையும், பெண்ணைச் சேருமாறு அமைத்துக் கூறப்பட்டுள்ளதால், அவனும் ஒரு ஸ்த்ரீலோலன் (காமி) என்பதனையும் புலப்படுத்தும்.

கோபாலத் தொண்டைமான் – தொண்டைமான் என்பதால் தொண்டைமான் வழியினன் என்பது தெளிவு. அரசனுக்குத் தொண்டு செய்யும் பணியில் ஈடுபட்டு அரசகாரியங்களைக் கவனித்துப் பிரதிநிதியாய்ச் செய்து வந்ததால் தொண்டைமான் எனினும் பொருந்தும் என்பது மறிக.

திலகம்-நெற்றிப் பொட்டு.

தாமரை, முல்லை, அசோகம், மாம்பூ, நீலமலர் இவை ஐந்தும் மன்மதன் பாணங்கள். காதலர்க்கு இன்பத்தைத் தூண்டும் கருவிகள்.

## முத்து மகள் கோவிந்தி

கட்டளைக் கலித்துறை

உமக்குங் குழற்கும் பதினு யிரந்தெண்ட னுந்தனிடை
சுமக்கின்ற கொங்கைக்கு நூறு யிரந்தெண்டன் தொண்டன் கண்டீர்
நமக்கந்தி வேளை திருக்கலி யாணம் நடத்திடுகுங்
குமக்கொங்கை முத்து மகளே திருப்பதி கோவிந்தியே 65

நம் இருவருக்கும் மாலை வேளையில் திருக்கல்யாணம் நடக்கும்படி செய்தருள்க. குங்குமக் கலவை பூசப் பெற்ற முத்து என்பவனது மகளே திருப்பதி கோவிந்தியே! உமக்கும் உமது கூந்தலுக்கும் பதினுயிரம் வணக்கம். உந்தனிடம் நீ சுமந்து கொண்டிருக்கும் கோங்க மலர் போன்ற அழகான முலைகளுக்கும் (நூறுயிரம்) லக்ஷம் வணக்கம் செய்கிறேன் இதனைக் காண்.

பதினாயிரம் நூறாயிரம் என்பன எண்ணுப் பெயர்கள். கொங்கை கோங்க மலரின் மொட்டுப் போன்று குவிந்திருத்தலின் முலைக்குக் காரணப் பெயர். கொங்கு-தேன் எனவும் பொருள்படும் கோவிந்தன் மனைவி கோவிந்தி. சீவக சிந்தாமணியில் கோவிந்தையார் இலம்பகம் என்ற ஒரு பகுதி உண்டு. இங்குக் கோவிந்தை என வந்துள்ளது.

கோவிந்தை கோவிந்தி என்பன இரண்டும் கோவிந்தனுக்குரிய பெண்பாற் பெயர்கள் போலும். பத்து ஆயிரம் - பத்தாயிரம் பதினாயிரம். எனவும், நூறு + ஆயிரம் - நூறாயிரம் எனவும் பிரிக்கப் படும். கண்டீர் - முன்னிலை வினைமுற்று. அந்திவேளை திருக்கல்யாணம் நடத்திடு. அலர்மேல் மங்கைத் தாயாருக்குத் திருக்கலியாணம் நடைபெற்றது கண்ட புலவர் பாடிய பாடல்.

தண்டன், தெண்டன் என வந்தது. குப்புறவிழுந்து வணங்குதல். முத்து மக்களே! கோவிந்தியே! விளிகள்.

## உடன் போக்கின் பின் செவிலி அழுங்கல்

வெண்பா

ஊரைவிட்டுப் போய்ஒரு நாழிகைக் குள்ளே
நீரைவிட்ட தாமரைபோல் நின்றேனே-சேரைவிட்டு
செப்போ டிளமுலையாள் செவ்வி திருமுகத்தை
யெப்போது காண்போ மினி 66

ஊரைவிட்டுச் சென்றுபோய் ஒரு நாழிகைக்குள் நீரைவிட்ட தாமரையைப் போல் வாடி நின்றேன். செப்புப்போலும் இளமையான முலையுடைய தலைவியுடன் சென்ற பின் இவர்களது முகத்தை இனி எப்போது காணப் போகிறோம். சேற்றையும் நீரையும் விட்ட தாமரை, வாடி வதங்கி உயர்ந்து நின்று தனித் தனியாய்க் காட்சி அளிக்கும்.

ஒரு நாழிகை - 24 நிமிஷங்கள்) இக்காலக் கணக்குப்படி. துடி, கடிகை, நாழிகை, வேளை, நாள், வாரம், பட்சம், மாதம், ஆண்டு, யுகம் என்பன பழங்காலப் பெயர்கள். நீரை விட்ட தாமரை போல் உவமை. சேறு - என்பது தனிச் சொல்லின் எதுகைக்காக மாறி இடையினமாயமைந்து நின்றது

செப்பு - குங்குமம் வைக்கும் சிறுபெட்டி. மகளிர் முலைக்கு, வடிவ உவமை யென்க. "செப் பன்ன இளமுலையாய்" என்பது குறுந்தொகை.

இளமுலை - பண்புத்தொகை. செல்வர் இரு முகம் - மகளிர் அவ ரவரும் தம்தம் கணவரைச் செல்வமாகவே கருதுவர் என்பதும் இங்குப் புலப்படுத்தப்படும். கேள்வன் - என்பதும் கணவனையே குறிக்கும். அவனே அவளுக்கு உண்மை உறவினன் என்பதும் சொல்லே விளக்குவது மறிக. இல்லறம் நடத்த மனைவி கூறும் நல் ஆலோசனைகளைக் கேட்பவன் ஆதலின் கேள்வன் எனினும் பொருந்தும்.

"செல்வர்" என்றே கொள்ளும்போது தலைவன், தலைவி இரு வரும் ஒத்த மனத்தினராதலின் தங்கள் செம்மைத் தன்மையான காதலை நிலை நாட்ட மேற்கொண்ட உடன்போக்கு மூலம் வெளி படுத்துவதாகக் கொண்டால் செல்வர் என்பது செம்மையான குண முடையவர் என்பதும் பொருந்தும்.

## நீதி சாத்திரம்

ஈயும் தானம்

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

எடுத்திடும் விசைய னம்பு ஏகமா யெடுத்தேயொன்றைத்
தொடுத்திடிற் பத்துமாகில் விடுக்கில் தா னூறு மாகி
லெடுத்தகை விட்ட வாறே ஆயிர மாகி லேற்கில்
மடுத்திடுங் கோடி யாம்போல் மறைவல்லோர்க் கீயுந்
தானம் 67

அருச்சுனன் எடுக்கும் அம்புகளுள் ஒன்றைத் தொடுத்தால் பத்தாய் விடும். எய்யும் போது அதுவே நூருய், கையால் எடுத்து விட ஆயிரமாய், அதனை யேற்கும் போது கோடியாய் ஆவது போல் வேத மோதும் அந்தணர்க்கு அளிக்கும் தானம் வளரும்.

இப்பாடலில் ஒன்று பத்து நூறு ஆயிரம் கோடி என்ற எண்ணுப் பெயர்கள் அமைந்துள. அந்தணர்க்கு அளிக்கும் தானம் வளரும் என்பது இப்பாடலில் விளங்கும் உண்மை.

## தோழி பிரிவுக்கு அழுங்கல்

வெண்பா

எந்தனங்கள் பட்டுருகி எங்கணவன் போனவழி
கந்தனங்கள் பூங்குயிலே காணீரோ- அங்கணவன்
வாழையிலே கென்றேன் வரப்பிலே கால்கண்டேன்
தாழையிலே கண்டேன் தலை. 68

இது ஒருதுறைக் கோவை.

இப்பாட்டின் மோனையை நோக்கும் போது எகரம் அமைந்திருத்தலால் அந்தாதித் தொடையில் அமைந்த பாடலாக இருக்கலாம் என்று ஊகிக்க இடம் உண்டு.

தலைவி, அழகிய கணவனுடன் வாழ்ந்து கொண்டிருக்கையில் கன்றுபோல் பின் தொடர்பவளாவேன். வரப்பிலே கால்வைத்து நடப்பேன். (ஊன்றக் கண்டேன்). (வாழைமரம் வளர்ந்து) வாழ்ந்து வரும்போதே செல் என்றேன். தாழை மலர்எரும் நெய்தல் நிலத்திலே தலைவன் செல்லக் கண்டேன், எமது முலைகள் பட்டு உருகி, எமது கணவன் சென்ற வழி அழகிய குயில்களே! கந்தன் போன்ற எமது தலைவரைக் கண்டீரோ! கண்டிருப்பின் அவர் சென்ற இடம் கூறுக என்பது இசையெச்சம்.

பூங்குயிலே! - விளி. அழகிய இன்குரல் கொண்ட குயிலே. கன்றேன் - வாடினேன். கன்று போலானேன் சிலேடை. கால் கண்டேன் - (கால் கொள்வது). ஊன்றுவது (நடுவது). வாழை - மருத நிலக் கருப் பொருள்; தாழை - நெய்தல் நிலக் கருப்பொருள். தலை கால் தனம் - என்ற அவயவப் பெயர்கள் அமைந்து வந்தமை அறிக.

வரம்பு - வரப்பு என, சிலம்பு - சிலப்பு, காம்பு - காப்பு, என வலித்தது. சில சமயங்களில் கால், தலை தெரியாமல் பேசுவது மேல் கீழ் என்பது போல அடி இயைபாக அமைந்து காண்பதறிக.

### செந்தீக் கொழுந்து

வெண்பா

எல்லை பலகடந்திட் டெங்கும் புகழ்பூத்து
தொல்லை மனுக்காக்கத் தோன்றிற்றே-கொல்லை
வழியிலொரு பேய்நின்று வஞ்சனையாற் செய்த
குழியிலெழு செந்தீக் கொழுந்து 69

வயல் வெளிகளை அடுத்துள்ள கொல்லை புன்செய்ப் பயிர் விளையுமிடங்களான மேட்டு நிலப் பாங்கான வயலிடங்களிடையே கொடிய பேய் ஒன்று வஞ்சகமாகச் செய்த குழியில் வீழ்ந்து தப்பிப் பிழைத்து வந்த சிவந்த தீக்கொழுந்து, தனது நாட்டு எல்லைகள் பலவும் தாண்டி எல்லா இடங்களிலும் புகழ் மணம் கமழச் செய்து மிகவும் பழமை வாய்ந்த மனு நீதியைக்காக்க ஆட்சி புரியத் தோன்றிற்று.

வாக்களித்த வேளாளருள் ஒருவர் மட்டும் பிழைக்க, அவர் மகன் வாழ்ந்த செய்தியைக் குறிப்பது இது.

புகழ் பரவுவதைப் புகழ் பூத்தல் என்பர். பூ மலர்ந்தால் மணம் பல இடங்களுக்கும் பரவும். அது போல் புகழும் பரவுதலால் புகழ் பூத்தல் என்பர், எழு செந்தீ – வினைத்தொகை. செந்தீ – பண்புத் தொகை.

தொல்லை மனு - இது மநு மன்னன் சரிதத்தை நினைவு கூர்வது. மநு ஆண்ட போது அவனைச் சோதிக்க இந்திரனும், யமனும் முடிவு கொண்டு இந்திரன் பசுவாகி, யமன் கன்றாகி மநுவின் மகன் திருஆரூரில் வீதியில், தேரில் பவனி வருகையில், கன்று தேர்ச் சக்கரத்தின் கீழ் அகப்பட்டு இறக்க, தாய்ப்பசு கதறி, ஓடிச் சென்று, அரண்மனை வாயிலில் கட்டப்பட்டிருந்த ஆராய்ச்சி மணியை யடிக்க, மநு வெளியே வந்து நிகழ்ந்த தறிந்து, அப்பசுவின் துயர் போலவே தானும் அடைய முடிவு கொண்டு, தன் மகனைத் தேரின் அடியில் கிடத்தி மாளச் செய்யவும், விண்ணில் மாற்று வடிவில் வந்தோரும் சிவ பெருமானும் இடப வாகனத்தில் உமையுடன் ஏறி வந்து, இறந்த குழந்தையைப் பிழைப்பித்து மநுவின் ஆட்சித் திறனைப் பாராட்டிய செய்தி இங்கு உணரத்தக்கது. (திருவாரூர்த் தலபுராணம்)

## அரிது எனல்

வெண்பா

எழுதரிது முன்ன மெழுதிய தொன்றைப்
பழுதறவா சிப்பரிது பண்பா—முழுதுமதைக்
கற்பரிது நற்பொருளைக் காண்பரிது கற்றபடி
நிற்பரிது தானந் நிலை. 70

முதலில் எழுதிய ஒன்றை எழுதுவது அரிதாம். படித்து உள்ளம் பதியும்படி குற்றமின்றி வாசிப்பது அரிது. முழுவதும் அதைக் கற்பது அரிது. அதனிடத்தே அறம் பொருள் இன்பம் வீடு என்ற நாற்பொருள்களையும் காண்பதரிது. தாம் கற்றவாறு அந்நிலையில் நிற்றலரிதாம்.

இப்பாடலுள் 'அரிது' என்பது பல முறை வந்துள்ளதால் சொற்பொருள்பின்வருநிலையணி. எழுத, படிக்க, கற்க, காண, நிற்க அரிதென்க,

## [1]கழுதை புரண்டகளம்

வெண்பா

எழுதியதறக் கணக்கும்,.................)
உழுகோலு மீத்திக்கொள் ளாதான்-வாழ்க்கையும்
அழுது புரண்டமனை யாளு'மிவை மூன்றும்
கழுதை புரண்ட களம். 71

பத்திரத்தில் எழுதியபடித் தீர்த்து வாங்காத கணக்கும், உழுகின்ற கோலும் வாழ்க்கையில் மிச்சப்படுத்திக் கொண்டு வாழாதவனது வாழ்க்கையும், அழுது புரள்கின்ற மனையாளுடன் வாழும் குடும்ப வாழ்வும் ஆகிய இவை மூன்றும் கழுதை படுத்துப் புரண்ட இடம் போல் ஒன்றற்கும் பயன்படாததாகிவிடும்.

மீத்தி என்பது மிகுதி என்பதின் விகாரம். உழுகோல் - வினைத் தொகை. வாழ்க்கை - கைவிகுதிபெற்ற தொழிற்பெயர். மூன்றும் - உம்மை முற்றும்மை. முன் பாடலிலும் நான்கும் என்பதும் அது.

குறிப்பு :— சீர்திருத்த முடியாத நிலையிலுள்ள ஒரு பாடல் இது முன் அடியில் பின் இரு சீர்கள் இல்லை.

## தமிழுக்கு இரங்காதவர் எவர்.

கட்டளைக் கலித்துறை

எறியும் பசுவு மெறியா தமுத மெறிக்குங்கெர்ப்பம்
பிறியுங் குழந்தையுங் கண்ணுறங் காநிற்கும் பேயினமும்
பொறியுந் தியவிடப் பாந்தளு மாடல் புரியுமின்பஞ்
செறியுந் தமிழுக் கிரங்கா தவரெவர் தேசத்திலே, 72

காலைத்தூக்கி உதைக்கும் குணமுடைய பசுவும் கறக்கக் காலைத் தூக்காது தனது பாலைச் சுரந்து தரும். கர்ப்பத்திலிருந்து பிரிகின்ற குழந்தையும் கண்ணுறங்கும். பேய்க் கூட்டங்களும், புள்ளிகளை மேலேயுடைய விடப்பாம்பும் ஆடும். இன்பம் நிறைந்திருக்கும் தமிழுக்கு இரங்கி அருள் புரியாதவர் எவருளர்? அனைவரும் கருணை செய்துதவுவர்.

(எதுகைக்காகப் பிரியும் என்பது வலித்தது).

கறக்க வரும் போது சில பசுக்கள் கறக்க விடாமல் உதைக்கும்; கொம்பால் முட்டித் தூக்கி எறிய முயற்சிக்கும்; இவை கவடுள்ள மாடுகள். அமுதம் - பால்.

கர்ப்பம் பிரியும் குழந்தையும் கண்ணுறங்கா நிற்கும் - கர்ப்பத்திலிருந்து பிறக்கும் போதே குழந்தை "குவா குவா" என இவ்வுலகில் பிறக்க நேர்ந்ததே என்று அழுது கொண்டே பிறக்கும். கண்ணுறங்கா நிற்கும் - உறங்கும். அழுது கொண்டே யிருக்கும் குழந்தையும் தமிழ் மொழியில் தாலாட்டுப் பாடினால் உறங்கி விடும் என்பது கருத்து.

பேய், பாம்பு ஆகிய கொடிய உயிர்வாழ் இனங்களும் தமிழ் இசைப் பாடலுக்கு ஏற்ப ஆடும். இன்பஞ் செறியும் தமிழ் - தமிழ் என்பதற்கே இனிமை என்பது பொருள்.

### கொடுத்துச் சிவத்தல்

வெண்பா

என்னெஞ்சு மென்விழியுங் கொண்டோ விலங்கேசன்
பொன்னஞ் சிகாமணியும் பொன்முடியும்-வன்னெஞ்சு
சிந்துங் கொடைச் சிவந்தான் றென்கொடியார் வன்கழங்கு
பந்துஞ்சா தித்த படி 73

கொடுப்பதாகிய கொடையால் கைகள் சிவந்து நிறைந்து, எனது (தேன் வழியும்) மலர்க்கொடி போன்ற தலைவி, வலிய கழங்கும் பந்தும் போன்ற முலைகளால், எனது மனம், கண்களைக் கொண்டு தான் இலங்கை அரசனான இராவணன் பொன் போன்ற நிறைந்தவளான இலக்குமி அமிசமான சீதையைச் சிறைவைத்தமையான் இராமனது சிகாமணியான சூடாமணியும், தனது அழகிய கீரீடமும் வலிய நெஞ்சமும் சிந்தினான்.

இப்பாடலில் சிகாமணி - சீதையின் திருமணக் காலத்தில் கொடுக்கப்பட்டது. அதனைச் சீதை அனுமன் மூலம் இராமனுக்கு அடையாளமாக அளித்தாள்.

பொன்முடி சிந்தியது - இராவணன் சீதையை விடாமையான் போரில் அவனது தலை பத்தும் சிதறும்படி செய்வதன் முதலில் தோல்வியின் அடையாளமாக அவன் முடிகளை வீழ்த்தினான். வலிய நெஞ்சு சிந்துதல் - மனம் உடைந்து போகும்படி தலை விட்டுப் பிரித்தாலும், சுற்றத்தார், படைகள் அழிக்கப்பட்டதாலும் நெஞ்சுடைந்து போதல் என்க.

வன்கழங்கு - சூதாடும் கருவி. அது போன்ற முலை. பந்து - உருண்டை வடிவினது. அது போன்று அடிப்பகுதி பருத்து விளங்கலால் பந்து எனப்பட்டது.

### ஆண்டான் கவிராயர் குதிரை மீது பாடியது

கட்டளைக் கலித்துறை

என்னைச் சுமக்க வறியாய் சுமக்கு மியல்ப றியாய்
பொன்னைப் பறித்துக் கொடுத்தா யொருகட்டுப் புல்லுத் தின்பாய்
பின்னைச் சவுக்கடிக் கஞ்சாய் அடிக்கடி பேண்டுகொள் வாய்
உன்னைக் குதிரையென் றேன்படைத் தான்மல ருள்ள வனே 74

என்னை ஏற்றிக் கொண்டு செல்ல அறிந்து கொள்ள வில்லை. எப்படிச் சுமக்க வேண்டுமென்ற தன்மையையுமறியவில்லை. என்னிடமிருந்து (உன்னை விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டிய அளவு) பொன்னைப் பறித்து விற்றவனுக்குக் கொடுக்கும்படி செய் தாய். ஒரு கட்டுப்புல் நன்ருகத் தின்பாய். பிறகு நான் சவுக்கால் அடித்தால் அதற்கும் அதனைப் பெறுகிருேமேயென்றும் பயப்பட மாட்டாய். அடிக்கடி (லகான்) சேணம் பூட்டிக் கொள்ளப் பெறு வாய். அல்லது அடிக்கடி மருள்வாய். உன்னைக் குதிரையென்று விலைகொடுத்து வாங்கிக் கொண்டேன். தாமரை மலரில் உள்ள பிரமனும் உன்னைக் குதிரை யென்று பெயர் வைத்துப் படைத்தானே அவனை யென்ன வென்று சொல்வது என்றுதான் தெரியவில்லை.

செலுத்தத் திறமற்ருேன் ஒருவன், குதிரையை வாங்கி அதனைச் செலுத்த முடியாமல் தவித்துக் கூறிய பாடல் போல் தோன்றுகிறது. சவுக்கால் அடித்தால் பயந்து கொண்டு சாணம் போடும்.

**சவுக்கு** - ஒலிக்குறிப்பு. குதிரையைச் செலுத்தும் சாட்டை; அதனை இழுத்து அடிக்க முயலும் போது உண்டாகும் ஒலிக்குறிப் பால் அமைந்த பெயர். அடிபெற்று அடிபெற்றுத் தேறி விட்டதனல் நாளடைவில் அச்சவுணர்வு மாறி இது ஒரு சாதாரணச்செயல் என்று அதன் மனதில் பதிந்து விட்டதனுல் அச்சம் விலகியதெனவுணர்ந்து கூறியது போலச் 'சவுக்கடிக் கஞ்சாய்' என்ருன் போலும்!

**மலருள்ளவன்** - தாமரை மலர் மேல் விளங்கும் பிரமன். படைக்குங் கடவுள். இப்படிப் படைத்து விட்டானே எனத் திறமை யில்லாமையை வெளிப்படுத்திக் கொள்ள முடியாது பிரமனைப் பழித் தான் போலும்!

## வேம்பத்தூர் பிச்சுவையர் பாடல்

கொச்சகம்

ஏர்புரியுந் துறைசையிற்சுப்பிரமணியவெழின்மணி தென்
சார்புரியுந் தவக்குறையோ தவம்புரியுந் தவக்குறையோ
சீர்புரியுந் தவக்குறையோ சகம்புரியுந் தவக்குறையோ
ஆர்புரியுந் தவக்குறையோ வருவாகிய கன்றனையே. 75

அழகான திருவாவடுதுறையில் விளங்கிய சுப்பிரமணிய தேசிக மகா சந்நிதானமே! மிகவும் அழகான தென்னுட்டுத்தவ வலிமை குறைவு காரணமோ? தவமே செய்து கொண்டிருந்த அத்தவத்தின்

வலிமை குறைவு காரணமோ? மற்றவர்க்கு அள்ளியருளும் தவத்தின் குறைவு காரணமோ? உலகின் தவக் குறைவு காரணமோ? இவ்வாறு இவ்வுலகினின்று நீங்கியது யாருடைய தவக்குறைவால் நேர்ந்ததோ? (சந்நிதானம் சித்தியடைந்த போது பாடிய பாடல் இது).

## தேவைநகர் பாஸ்கரவேளைச் சிவசம்புப்புலவர் பாடியது

வெண்பா

ஒப்பிலாச் சைவமெங்கே உண்மை யறங்களெங்கே
கைப்பிலாத் தூயதமிழ்க் கல்வியெங்கே-தப்பிலாப்
பாவலரெங் கேசீமான் பாற்கரவேள் தேவைநகர்க்
காவலவன் மேவியிடாக் கால். 76

இராமேச்சுவரம் என்ற தேவை நகரை ஆளும் பாஸ்கரசேதுபதி மன்னன் இல்லையெனில் ஒப்பற்ற சைவ சமயத்தை ஆதரிப்பவர் வேறு எவருமில்லை. அவன் இல்லையென்றால் சைவ சமயம் எங்கே நிலைத்து விளங்கும்? நிலையாக விளங்கக் கூடிய தர்மங்கள் எங்கே விளங்கப் போகின்றன? கசப்பில்லாத இனிக்கவல்ல தூய்மையமைந்த கல்வி எங்கே நிலைக்கப் போகின்றது? தவறியும் தவறு தலைக் கூறுதலில்லாத புலவர் பெருமக்கள் எங்கே வாழப் போகின்றனர்? இவையனைத்தும் சிறந்து விளங்க வழியில்லை.

**தேவைநகர்** - இராமேசுவரத்தின் வேறு பெயர், தேவை யுலா என்று ஒரு பிரபந்தமும், தல புராணமும் உண்டு; இறைவன்-இராமநாதர்; இறைவி — பருவதவர்த்தனி; மலைவளர் காதலி. **தீர்த்தம்** - தனுஷ் கோடி முதலிய பல தீர்த்தங்கள்.

**சேதுக்கரை மூன்று** - ஆதி சேது – திருமறைக்காடு (வேதாரணியம்), அர்த்த ஸேது - மகாபலிபுரம்;- இராம சேது- இராமேச்வரம்.

**சிவசம்புப் புலவர்** - பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், யாழ்ப்பாணத்து உடுப்பிட்டி என்ற ஊரில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். சைவர். இராமநாதபுரம் பாஸ்கர சேதுபதி மீது கல்லாடச் சாரக் கலித்துறை என்ற நூலை இயற்றினர். மேலும் செந்தில் யமக அந்தாதி, புலோலி நான்மணி மாலை முதலான பல நூல்களை இயற்றியுள்ளார், யாப்பருங்கலக்காரிகைக்கு உரை வகுத்துள்ளார்,

## இராச ராசேச்வரி பேரில் வையைஇராமசாமி ஐயர் பாடிய பாடல்

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

ஒருகலையே யுடையளென வுரைப்போர்பல்
கலைக்குமிவ ளுரிய ளென்றே
கருகலைநீத் துணர்ந்திடப்பல் கலைக்குமுரியவளாம்வெண்
கலையாள் கோலம்
திருகலைநீப் பான்புனைந்து செழுமுக வைவாழ
மலைசிறியே னுய்ய
இருகலையா தருள்வ மெனுமிராச ராசேச்வரிதன்
இருதாள் போற்றி. 77

ஒப்பற்ற வெண்மையான ஆடையையுடையவள் என்று கூறுபவர். பல (64) கலைகளுக்கும் இவள் உரியவள் என்று, பிறவித் தோற்றத்திற்குக் காரணத்தை நீக்கி உணருமாறு எல்லாக் கலைகளுக்கும் ஆதாரமானவளாம். வெண்மையான ஆடை யுடைவள் அழகு, மோதிவரும் அலைகளையுடைய கடலிலிருந்து நீந்தி வந்து உதவும். (லக்ஷ்மி) நாம் இத்தகைய அழகு பெறவில்லை யென்று விலக, அழகுற அணிந்து வளம் பொருந்திய முகவையில் வாழ்கின்ற சிறியவனை நான் 'நற்கதிபெறவும் கலை எது வேண்டுமோ அதனை அருளவும் அமலையாகிய "இராஜராஜேச்வரியினது" இரு பாத கமலங்களைப் போற்றிப் பணிவேன்.

வையை—வையைச் சேரி. தஞ்சாவூருக்குக் கிழக்கே திட்டை யென்ற ஊருக்கு வடக்கே யுள்ளது. மிகவும் பழைய சிவஸ்தலம், சுவாமி பெயர் அகத்தீசுவரர். சங்கீதம் வல்லவ மகா வைத்திநா தய்யர் மூத்த சகோதரர். இவருடன் பிறந்தோர் மற்ற மூவருள் ஒருவர். தந்தையார் பெயர் துரைசாமி ஐயர்,

## ஞான சம்பந்தர் புகழ்

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

ஒருமடந்தை திருமுலைப்பா லமுதுண்டு
தமிழ்வேத மொருங்கு மிழ்ந்து
ஒருமடந்தைக் கருள்சுரந் தமண்களைந்
தொளிவெண்ணீ றுய்ப்ப நல்கி
ஒருமடந்தை துயர்தீர்த்து மவள்கணவன்
விடந்தவிர்த்து முலகம் போற்ற
ஒருமடந்தை தனையெழுப்பும்
திருஞான சம்பந்தர்...... ...... .. 78

ஒப்பற்ற மடந்தை பார்வதிதேவியார் சீகாழியில் குளக்கரையில் அளித்த அழகான திருமுலைப்பாலகிய அமுதைப் பருகித் தமிழ் வேதமான தேவாரத்தைச் சேர்ந்தாற்போலப் பாடி (உமிழ்தலாவது) உலகுக்கு அளித்து, ஒரு மடந்தையான மயிலாப்பூரில் இறந்த செட்டி மகளை உயிர் பெறப் பிழைப்பிக்கக் கருணை புரிந்து மண் பாண்டத்தில் குவித்து வைத்திருந்த எலும்புகளைச் சேர்த்து எலும்பைப் பெண்ணுருவாக்கி ஒளி பெற்ற வெண்மையான திருநீறளித்து, ஒரு மடந்தையின் கணவனைப் பாம்பு தீண்ட அவள் துயரம் தீரச் செய்தும் கணவனின் விடத்தை நீக்கி உயிர்பெறச் செய்தும் உலகமே கொண்டாடும்படி போற்ற ஒரு மடந்தையை யெழுப்பும் ஆற்றல் வாய்ந்தவர் திருஞான சம்பந்தர்.

### ஒரு மடந்தை திருமுலைப்பால் அமுதுண்ணல்

ஞானசம்பந்தர் தந்தையார் குழந்தையான சம்பந்தரைச் சீகாழிக் கோயில் குளக்கரையில் அமர்த்திவிட்டு, நீரில் மூழ்கி நீராடும்போது குழந்தையழ, இறைவி அருகில் வந்து பால் ஊட்டி அழுகையை நிறுத்தச் செய்து மறைந்து சென்றுவிட்டாள். நீராடி முடித்த தந்தை குழந்தை வாயில் பால் ஒழுகக் கண்டு கோபிக்கச், குழந்தை இறைவியின் கோயிலைக் காட்டியது. அதுமுதல் கோயில்களில் ஞானப்பால் கொடுக்கும் வழக்கம் அமைந்தது. அறுபத்து மூவர் திருவிழா நடைபெறும் கோவில்களில் அந்தந்தக் கோவில்களின் மரபுக் கேற்றபடி இன்றும் இவ்வழக்கம் நடக்கக் காணலாம்.

### ஒரு மடந்தைதனையெழுப்பல்

ஞானசம்பந்தருக்குத் தன் மகளை மணஞ் செய்துதர முடிவு செய்து மயிலாப்பூரில் வாழ்ந்துவந்த சிவநேசச் செட்டியார் தம் மகள் பாம்பு கடித்து இறக்க, எலும்புகளைப் பொறுக்கிச் மண்பானையில் எடுத்து வைத்துப் பாதுகாப்பாக வைத்திருந்து, சம்பந்தர் வந்ததும் அவ்வெலும்புகளையுடைய மண் பானையுடன் ஒப்படைக்க, சம்பந்தர் அப்பெண் உயிர்பெற் றெழப்பாட, அவள் உயிர் பெற்றெழ, அவளை மணந்து கொள்ளுமாறு தந்தை சிவநேசச் செட்டியார் வேண்ட, சம்பந்தப் பெருமான் அவளை உயிர் பெறச் செய்தமையால் தமக்கு மகள் முறையினள் என்று கூறிப் போயினர். அவ்வாறு உயிர் பெற்ற நிகழ்ச்சியே அறுபத்து மூவர் திருவிழாவில் அங்கம் பூம்பாவை திருவிழாவாகக் கொண்டாடப் படுகின்றது.

### ஒரு மடந்தைக் கருள் சுரத்தல்.

திருப்பாச்சிலாச் சிரமம் என்ற தலத்தில் கொல்லிமழவன் என்ற மன்னன் மகளுக்கு இருந்த முயலகன் என்ற குமரகண்டவலியை இறைவன் மேல் பாடித் தீர்த்தருளினுர்.

**அமணர் களைதல்**

கூன் பாண்டியன் சமணன். இவன் மனைவி மங்கையர்க்கரசி. சைவம். கணவனைச் சைவனுக்க முயன்ருள். சம்பந்தரை வருவித்தாள்.

1. அமணர் சம்பந்தர் இருந்த இடத்தில் தீயிட, அதனைப் பாண்டி மன்னனிடம் பாயப் பாடினுர். திருநீற்றுப் பதிகத்தால் மன்னன் உடலில் பரவிய தீ நோயை மாற்றி கூனையும் நிமிர்த்தியருளினுர்.

2. "போகமார்த்த பூண் முலையினுள்" எனும் திருநள்ளாற்றுப் பதிகத்தை யேட்டிலெழுதித் தீயிலிட வேகாதிருந்தது. இது அனல் வாதம்.

3. 'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கும் பதிகம் பாடி வைகையில் விட நீரை எதிர்த்துச் சென்றது. அது சேர்ந்த இடம் ஏடகம், இது புனல் வாதம்.

இவ்வாறு அற்புத நிகழ்ச்சிகளை நிகழ்த்தி மன்னனையுஞ் சமணரையும் சைவராக மாற்றினுர் சம்பந்தர்.

**ஒரு மடந்தை துயர் தீர்த்தும் அவள் கணவன் விடந் தவிர்த்தும்**

ஒரு செட்டியின் மகள், தனக்கென ஒரு செட்டியை மணக்க முடிவு செய்து அவனுடன் வரும் வழியில் இரவு திருமருகல் என்ற தலத்தில் தங்கி உறங்கும் போது அரவு தீண்ட, செட்டி இறந்ததும்; அப்பெண்!அழுது புலம்பக் கண்ட அவ்வூர் வழியே சென்ற சம்பந்தர், பதிகம் பாடி அச்செட்டியை உயிர்பெறச் செய்தார்:

இச்செய்யுளின் இறுதியில் இரு சீர்கள் விடுபட்டுள்ளன.

**அம்மானை**

ஒருமுனிவன் கொல்லியிலோ வுரைதெரிந்த தம்மானை
ஒப்பற்ற திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானை
கரைபுரண்ட காவிரியோ கலையெதிர்ந்த தம்மானை
கடிப்பகைக்குத் தாதுகையாங் கண்ணியோ வம்மானை
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானை
சிவன்முடி யிலணிவதுவுஞ் செங்கதிரோ வம்மானை
பரவைபடிந் ததுஞ்சோழன் பதந்தனிலோ வம்மானை
பராக்ரமபாண் டியன்பெருமை பகரெளிதோ வம்மானை 79

ஒப்பற்ற அகத்தியமுனிவன் இருந்து தமிழுக்கு உரைகண்டது பாண்டிய நாட்டிலுள்ள கொல்லி மலையிலா? ஒப்பு உவமையில்லாத சோம சுந்தரப் பெருமான் அருளிய திருவிளையாடல்கள் சோழ மன்னன் தலைநகரான உறந்தையிலா நடந்தது? 64 கலைகளையும் எதிர்த்துச் சென்றது (வைகையாற்றிலேயேயாதலால்) கரை புரண்டு வரும் வெள்ளம் அமைந்தது காவிரியாற்றிலா? (கலை - கலை யாராய்ச்சி, ஆடை எனச் சிலேடை).

மிகுந்த பகைமைக்கு மகரந்தங்களையுடைய வேப்ப மலர் மாலையோ?

அழகிய நீண்டுவளர்ந்த திருமால் அவதாரஞ் செய்தது. (சிறு புலியூர் என்ற பெயரையுடைய) சிதம்பரமோ? (வியாக்கிர பாதர் தோன்றியமையான் சிறுபுலியூர் என்பது, சிதம்பரம்) அரங்கநாதன் எழுந்தருளியிருப்பது. காவிரி நடுவேயாதலின் சிறுபுலியூரில் அன்று காவிரி பாயும் திருவரங்கத்திலேயேதான்.

சிவபெருமான் முடியில் சூடுவது பிறைச்சந்திரனையே அல்லாமல் சிவந்த கிரணங்களையுடைய சூரியனை அன்று. (பாண்டியர் சந்திர குலத்தவர், சோழர் சூரிய குலத்தவர் என்பது இங்குத் தொனிக்கும்). மதுரையை யழிக்க ஏவிய கடல் வந்து பாண்டியன் பாதத்தில் வணங்கியது ஆதலின்) கடல் படிந்துவந்ததும் சோழன் பாதத்திலோ? பராக்ரம பாண்டியன் பெருமை எடுத்துக் கூற எளிதாகுமோ. அரிது என மூன்று மகளிரில் ஒருத்தி சோழன் பெருமைகளைக் கூறவும், மற்றொருத்தி அவற்றை வினவவும் இன்னொருத்தி சாமர்த்தியமாக மாற்றிப் பாண்டியன் பெருமையை நிலைநாட்டவும் அம்மானை ஆடுவதாக அமைத்துப் பாடிய பாடல்.

சோழர், பாண்டியர் இவர்களுடைய பெருமையைக் கூறும் பாடல் இது.

## ஆயிரம் பொன் செலவு விளக்கம்

ஆசிரியம்

ஓரிர விருக்க வோரா யிரம்பொன்
வீரிய மாய்ப்பெறும் விதத்தைச் சொல்லெனக்
கனிவுட னுரைக்குங் கண்ணுதற் பெருமான்
புனிதக் கழலிணை போற்றுசங் கமரே
தினமா யிரம்பொன் தீரமாய் வாங்கும்
தனவிப ரத்தைச் சாற்றுவேன் கேளும்
மல்லிகை முல்லை மருக்கொழுந் துடனே
நல்லதாய் வாங்க நல்கும்பொன் னைம்பது
கந்த கதம்ப களபகஸ் தூரி
சந்தன வகையைச் சார்ந்தபொன் னைம்பது
பவமறுங் கோலம் பண்புடன் தாங்கும்
சிவனடி யார்க்குச் செலவு பொன் னைம்பது.

மாலயன் றேடு மாண்பொரு ளோன்றன்
ஆலயத் திருப்பணிக் காகும்பொன் னைம்பது
சாருமா துலர்க்குச் சத்திரத் தன்னம்
சீருட னளிக்கச் செலவுபொன் னைம்பது
வேணசங் கீதம் மேன்மையா யுரைக்கும்
வீணைவல் லோர்க்கு விதித்தபொன் னைம்பது
நேசமா யெனக்கும் நிர்த்தனம் பயிற்றும்
ஆசிரியருக்கு மளிக்கும்பொன் னைம்பது
குத்து விளக்கு குளோப்பலங் காரம்
சித்தப் படுத்தச் செலவுபொன் னைம்பது
தலையலங் காரம் தனித்தபொன் னைம்பது
கலையலங் காரம் கணக்குபொன் னைம்பது
மார்பலங் காரம் மதிக்கும்பொன் னைம்பது
சார்பவ ரோடு சதிருடன் பேசி
வாட்டமா யழைத்து வருபவ ராகும்
வீட்டுமா மற்கு விகிதம்பொன் னைம்பது
படுக்கையைப் புதுக்கிப் பலவலங் காரம்
தொடுப்பவர் தமக்குத் தொகையைம் பதுபொன்
காலையு மாலையுங் கருதியா மிட்ட
வேலைசெய் வோர்க்கு விதித்தபொன் னைம்பது
நண்ணிய வுடைகள் நலமுடன் வெளுக்கும்
வண்ணா னுக்கு வழங்குபொன் னைம்பது
விரைவொடு போனகம் விதம்வித மமைக்கும்
பரிசா ரகர்க்குப் பணித்தபொன் னைம்பது
வெத்திலை பாக்கு வேணது வாங்க
குத்தகை யாகக் கொடுக்கும்பொன் னைம்பது
வாய்த்தவர் தம்பால் மகிழ்ந்துரை யாட
தாய்க்கிழ விக்குத் தருகுபொன் னைம்பது
பால்பழம் சர்க்கரை பகருஞ்சிற் றுண்டி
நால்வகை களுக்கும் நல்கும்பொன் னைம்பது
கூறிய விதமே கொடுத்தவை போக
ஓரைம் பதுபொன் னுள்ளதே யதனைச்
செங்கோல் வேந்தன் சேடிய ரிவர்க்குப்
பங்கிட் டளித்துப் பாங்குடன் வாழ்வோம்

ஆதலால்,

சாற்றிய பொருள்தனைத் தருபவர் தம்பால்
மாற்றம தில்லா மகிழ்வொடு நாங்கள்
வீணையிற் பாடியும் விதவித நடனம்
நாணமில் லாமல் நடித்தவ ரோடு
உண்டி யருந்தியு முருவிலி புரியும்
சண்டையை நீக்கிச் சாந்தி செய்வோமே. 80

"ஓர் இரவு தங்கி இருக்க ஒரு ஆயிரம் பொன் கம்பீரமாகப் பெறும் வகையைச் சொல்க" என்று கேட்க, அன்புடன் கூறப் பெறுவன".

நெற்றிக் கண்ணுடைய சிவபெருமானது தூய (இணைத் தாள்) இரு பாதங்களைக் கொண்டாடிப் போற்றுகின்ற சங்கமரே. ஒவ்வொரு நாளும் ஆயிரம் பொன் தைரியமாகப் பெற்றுக் கொள்ளும் வகையைக் கூறுவேன் கேட்பீர்.

1) மல்லிகை முல்லை மருக்கொழுந்துடன் பலவகை மலர்களை நல்லதாகப் பார்த்துக் கவனித்து வாங்குவதற்காக ஐம்பது பொன் அளிப்பீர்.

2) நறுமணம் வீசும் கதம்பம் கஸ்தூரி களபம் சந்தனம் முதலான வகையை வாங்குவதற்காக ஐம்பது பொன் தாரும்.

3) பிறப்பை நீக்க வல்ல வடிவைப் பண்புடன் தாங்குகிற சிவனடியார்க்கென்று செலவிட ஐம்பது பொன் அளியும்.

4) திருமால், பிரமன் தேடும் ஒப்பற்ற சிவபெருமானது சிவாலயத்திருப்பணிக்காகும் ஐம்பது பொன்.

5) வந்தடைகின்ற வழிப்போக்கர்களுக்குச் சத்திரங்களில் சிறப்பாக அன்னதானம் செய்வதற்கு ஐம்பது பொன்.

6) விரும்பிக்கேட்பவர் இன்னிசை விரும்பிப் பெற மேலாக எடுத்து வாசிக்கும் வீணை வாசிக்கும் வித்துவான் கூட்டத்திற்கு என்று ஒதுக்கிவைக்கப்பட்ட பொன் ஐம்பது.

7) அன்பாய் எனக்கு நாட்டியம் கற்பிக்கும் ஆசிரியருக்கும் அளிக்கும் பொன் ஐம்பது.

8) குத்து விளக்கு, குளோப் விளக்கு முதலானவற்றல் அழகு படுத்தச் செலவுக்காக ஐம்பது பொன்.

9) தலை அலங்காரங்களுக்காகப் பொன் ஐம்பது.

10) ஆடையால் (கலை) யலங்காரஞ் செய்யப் பொன் ஐம்பது.

11) மார்பலங்காரம் மதிப்பிட பொன் ஐம்பது.

12) கூட வருபவருடன் சாமர்த்தியமாகப் பேசிப் பக்குவமா யழைத்து வருபவரான வீட்டுக்குரிய முறையுடைய மாமனுக்கு வரிசை செய்வதற்குப் பொன்னைம்பது

13) படுக்கையைப் புதுப்பித்துப் பலபடியாக அழகு செய்பவர் களுக்குத் தர பொன்னைம்பது

14) காலை, மாலைகளில் தினைத்து யாமிடும் வேலை செய்பவ ருக்குப் பொன் ஐம்பது.

15) நன்றுனவுடைகளை நன்கு வெளுக்கும் வண்ணானுக்கு வழங்குவதற்கு ஐம்பது பொன்,

16) வேகமாகச் சமையல்வகைகளை விதவிதமாகச் சமைக்க வல்ல சமையற்காரர்களுக்கு ஐம்பது பொன்.

17) வெற்றிலைப்பாக்கு வேண்டிய அளவு வாங்க மொத்தமாகக் கொடுக்கும் பொன் ஐம்பது.

18) தக்கவரிடம் மகிழ்ச்சியுடன் பேசத் தாய்க் கிழவிக்குத் தரகு ஐம்பது பொன்.

19) பால், பழம், சர்க்கரை எல்லாரும் புகழ்ந்துரைக்கும் சிற்றுண்டி பல வகைகளுக்கும் பொன் ஐம்பது.

20) (இங்குக்) கூறியவாறு அளித்தவை போக ஒரு ஐம்பது பொன் உள்ளதனைச் செங்கோல் செலுத்தும் தோழியரான இவர்களுக்குப் பங்கிட்டு அளித்துச் சிறப்புடன் வாழ்வோம்.

ஆகையால்,

கூறிய பொருள்களைத் தருபவரிடம் (வேறு) வார்த்தை பேசாமல் மகிழ்ச்சியுடன் வீணையில் பாடியும், பலவகை நடனங்களை வெட்கமின்றி நடித்தும், அவர்களுடன் உணவுண்டும் உருவமற்ற மன்மதன் செய்யும் சண்டையை நீக்கி அன்புடன் இன்புறுவோம்.

### இல்லை என்ற நான்கு

அறுசீர் விருத்தம்

கங்கைநன் னதியே யல்லால்
காசினி நதிவே றில்லை
செங்கதி ரொளியே யல்லால்
தேசத்தி லொளியே யில்லை
இங்கெனைப் பெற்ற தாய்போல்
யாவுமற் றுறவு மில்லை
மங்கையர் சுகத்தைப் போல
மற்றொரு சுகமு மில்லை 81

கங்கையாகிய நல்ல நதியை விட உலகில் வேறு சிறந்த நதி இல்லை. சிவந்த சூரியனின் ஒளியைவிட நாட்டில் பிரகாசமான ஒளி வேறு இல்லை. இவ்வுலகில் என்னைப் பெற்றெடுத்த தாயைப் போல் வேறு சிறந்த உறவினரும் இல்லை, சிற்றின்ப இன்பத்தைப் போன்று அனுபவிக்கும் மற்றொரு சுகம் வேறு எதுவும் இல்லை.

கங்கை - கங்கா கங்கேதி யோப்ரூயாத் யோஜனானாம் சதை ரபி/முச்யதே ஸர்வ பாபேப்யோ விஷ்ணு லோகம் ஸகச்சதி" என்று நீராடும் போது பெரியோர்கள் கங்கையை வேண்டிக் கொள்வர்.

செங்கதிர் - சூரியன். தாயிற் சிறந்த உறவு இல்லை : "தாயே யாகித் தாங்கு'' —புறம்.

## கச்சிச் செல்லப்பன்

வெண்பா

கச்சிச்செல் லப்பனுக்குக் காதலுட னேகலவி
மெச்சிச்செல் லப்பரத்தை வீடுண்டு – தச்சுக்குத்
தச்சாய மாம்பிடித்த தாமென்ன வேயதனுக்
குச்சாயம் பாணனு ருண்டு. 82

காஞ்சிபுரத்திலேயுள்ள செல்லப்பன் என்பவனுக்கு அன்புடன் கலந்து கூடி இன்புறப் பரத்தை வீடு உண்டு. தச்சனுக்கு, ஏற்ற ஆயக் கூட்டமே பிடித்ததுபோல அத்தன்மையுடையவனுக்கு ஆதரவு தர அழகிய தலைவியிடம் கொண்டு சேர்க்க ஏற்ற பாணன் உண்டு.

(கச்சி) காஞ்சிபுரத்தில் உள்ள செல்லப்பனுக்கு, அன்புடன் கலவியின் சிறப்பைப் பாராட்டி, செல்வதற்கு ஏற்ற பரத்தையின் வீடு உண்டு. தச்சுக்கு, தொடர்புடைய ஆயக் கூட்டம் பிடித்தது என்று அதற்கு ஏற்றபடி பரத்தை வீடு சென்று மீண்டு வந்த தலைவன், தலைவி இடையேயுள்ள ஊடல் நீங்கிக் கூடுமாறு செய்து வைக்க அழகிய பாணன் உண்டு.

ஊடல் தீர்த்து வைப்பவன் பாணன். பரத்தை - மனைவி போலக் கொண்டொழுகும் வேறு பெண்டிர். பழங்காலத்தில் இவ்வழக்க மிருந்தமையை இலக்கியங்கள் கூறும்.

## படிக்க வைக்காத பாதகர்

கட்டளைக்கலித்துறை

கடுக்கனிட் டாலென்ன பொன்னரை ஞாணிட்டுக்
கைக்குவெள்ளி
யடிக்குவட் டங்கணை யாழியிட் டாலென்ன வந்திபகல்
யிடுக்கி வளத்து முலைகொடுத் தாலென்னவென்னை
யுந்தான்
படிக்கவைத் தாரில்லை யேதந்தை யாகியபாதகரே 83

கடுக்கன் போட்டுக் கொண்டால் என்ன? பொன் அரைஞாண் கயிறு இடுப்பில் கட்டிக் கொண்டால் என்ன? வெள்ளியினால் கைக்குக் காப்பணிந்தாலென்ன? அழகான கைவிரலில் மோதிர மணிந்து கொண்டால் என்ன? இரவு பகல் வளர்த்து பாலுண்ண முலை கொடுத்தாலென்ன? என்னையும் படிக்கவைக்கவில்லையே தந்தையாகிய கொடியவர்.

காதில் கடுக்கன் அணிவது, இடுப்பில் பொன் அரை ஞாண் செய்து போட்டுக் கொள்வது, கையில் பொன் காப்பும் காலில் வெள்ளிக்காப்பு போட்டுக் கொள்வது, கைவிரல்களில் மோதிரங்கள் போட்டுக் கொள்வது இவை பழங்கால வழக்கங்கள். கையில் மோதிரமும், காதில் கடுக்கனும் இக்கால வழக்கில் ஆண்கள் அணிந்து கொள்வதை மட்டும் சிற்சில இடங்களில் காணலாம்.

கணையாழி – மோதிரம். அந்தி – மாலை. சந்தி – பகலும் இரவும் சந்திக்கும் நேரம். பொதுவாக, சந்தி – இரவு விடியும் நேரத்தையே காட்டும். சூரியன் அந்தம் (அன்றைய போது காய்ந்து மறையும் போது). பகல் இரவு என்று சொல்வது போல, அந்தி பகல் என்றும் கூறுவது வழக்கம்.

**இடுக்கி வளத்து** – இடுப்பில் எடுத்துக் கொண்டுவளர்த்து, வளர்த்து என்பது வளத்து என அமைந்தது.

"தந்தை மகற் காற்று முதவி யவையத்து
முந்தியிருப்பச் செயல்" எனத் திருவள்ளுவர் இதனையே இவ்வாறு கூறுவர்.

## பாவாலி ஜமீன் இராஜேந்திரன் மீது பாடியது

வெண்பா

கல்வி பயில்வதற்குக் கால வரையறைதான்
செல்வரா சேந்திரயான் செப்பக்கேள் — மெல்லக்
குடிக்குங் கடிக்குமிரு கொங்கைக ளினூடே
படித்தாற் படித்த படி. 84

செல்வச் சிறப்பால் நிரம்பிய இராஜேந்திரனே. யான் சொல்லக் கேட்பாயாக, கல்வி கற்பதற்கு ஏற்ற கால அளவு, மெதுவாகப் பால் குடிக்கும் பருவமும், இரு முலைகளுக்கும் நடுவே இருந்து கடிக்கும் பருவமும் ஆகிய இப்பருவத்திலேயே படித்தால்தான் படித்த படியாகும்.

## பத்து முதல் ஒன்று வரை

கட்டளைக் கலித்துறை

கற்பனை பத்து திருக்கூத் தொன்பது காட்சியெட்டுச்
சற்பனை ஏழுநற் சின்னங்க ளாறு சகாயமஞ்சு
உற்பனலு மண்டல மூன்று உபாயஞ்ரெண்டு
அற்புத மீன்ற பரமே சுரபத அனாதியொன்றே. 85

## பத்து முதல் ஒன்றுவரை இயங்கும் முறையில்

கற்பனை பத்து, அழகிய சிவபெருமான் நடனமாடுங் கூத்து ஒன்பது; காட்சி எட்டு, சற்பனை ஏழு, நல்ல சிவபெருமானுக்குரிய அடையாள மரியாதை ஆறு. உதவி சகாயம் ஐந்து. தோற்றம் நான்கு, மண்டலம் மூன்று, உபாயம் இரண்டு, அற்புதமாகப் பெற்றெடுத்த பரமேசுவரன் இருக்கும் இடம் ஒன்று.

கூத்து ஒன்பது :—1. சாந்தி 2. மெய் 3. அவிநயம் 4. நாடகக் கூத்து, 5. விநோதக்கூத்து. 6. குரவைக் கூத்து. 7. இடக்கூத்து 8. வசைச்கூத்து 9. சொக்கம்.

காட்சி எட்டு, 1 ஐயக் காட்சி, 2. வாயிற் காட்சி, 3; விகற்பக் காட்சி. 4. அநுவயக் காட்சி. 5. வெதிரேகக் காட்சி, 6. திருவுக் காட்சி.

சற்பனை 7—வஞ்சனை—கை, வழி, கருத்து, நா, மெய், செவி வெவ்வேறிடமிருக்கச் செய்யும் பூசை.

மண்டலம் மூன்று—சூரிய மண்டலம், சந்திர மண்டலம், அக்கினி மண்டலம் (அ).

சுவர்க்க மத்திய பாதாளம் என்னினும் அமையும். உபாயம் இரண்டு.

ஒன்று - அநாதி.

சற்பனை—வஞ்சனை.

"சாமங்கடோறு மிவர் செய்யும் பூசைகள் கற்பனையே" (பட்டினத் - பொது 44)

### கிளுநைவ சுவாமி மீது பாடியது

கட்டளைக் கலித்துறை

கரிய சுவாமி கடல்மேற் றுயின்றுன் கடவுளர்க்கு
பெரிய சுவாமியை யாரு மறிந்திலர்ப் பாமகட்கு
உரிய சுவாமிக் கொருபோ தொழிவிலை யுயர்கிளுநைவப்
பெரிய சுவாமியைக் கண்டேன் கண்டுசெல்வம் பெற்
றேனே 86

கரிய நிறமுடைய திருமால் கடல்மேல் கண் துயின்றுன் கடவுளர்களுக்குப் பெரிய சுவாமியான சிவபெருமானை எவரும் அறிந்திலர். கலைமகளான சரஸ்வதி தேவிக்குரிய கணவனை பிரமனுக்குப் படைக்குத் தொழிலில் எப்போதும் ஈடுபட்டிருப்பதனல் ஒழிவே இல்லை. உயர் கிளுநைவ பெரிய சுவாமியைக் கண்டேன்; கண்டு வேண்டிய செல்வம் பெற்றுக்கொண்டேன்.

ஊரிய சுவாமி – திருமால். கருப்பு, நீலம், பச்சை முதலான நிறங்களெல்லாம் கரு நிறத்தின் பால் பட்டதாகவே புலவர் சமயத்துக்கேற்றவாறு விவரித்துப் புகழ்வதுண்டு.

திருமால் கடல் மேல் துயிலல் – திருமால் பாற்கடலில் பள்ளிக் கொண்டிருப்பது.

கடவுளார்க்குப், பெரிய சுவாமி சிவபெருமான். இப்புலவர் அடைமொழி கொடுத்துக் கூறும் 'பெரிய சுவாமி' என்று கூறுவது கொண்டு, இப்பாடலைப் பாடிய புலவரின் சிவ பக்தி விளங்கும்.

## கரும்பும் வேம்பும்

### தமிழறியும் பெருமாள் கதை

வெண்பா

கல்லா தவன்றன்னைச் சேர்தலினுங் கற்றவனோ(டு)
அல்லற் படுவ தழகன்றோ — நல்லாய்
கரும்பிரதங் கைக்குமோ கல்வியறி கோதாய்
விரும்புவரோ வேம்பின் கனி 88

கல்விச் சிறப்பறிந்த நல்ல இயல்புடையாளே. மாலையணிந்தவனே, படிப்பறிவில்லாதவனுடன் நட்புகொள்வதினினும் கற்றறிந்தவனுடன் சேர்ந்து துன்பமுறுவது அழகல்லவா. கரும்பின் இனிய சாறு கசப்பாக இருக்குமோ. வேப்பம் பழத்தை விரும்புவார்களோ. விரும்பமாட்டார்கள் அல்லவா.

கரும்புச் சாறு இனிக்கும், வேம்பு கசக்கும், கரும்பில் சாறு எடுப்பது கடினம். வேப்பம் பழத்துள் கசப்பும் கொட்டையுமுண்டு. கரும்புச் சாறும் சூடு. வேம்பும் சூடே. கருப்பஞ்சாறு இனிக்கும். ஆனால் உடலைக் கெடுக்கும். வேம்பு கசக்கும். ஆனால் உடலுக்கு நலம் தரும். இப்பாடல் கருத்துப்படி சுவையளவோடு ஒப்புமையைக் கவனித்து நிறுத்திக் கொள்ளுதல் வேண்டும்.

"களரனையர் கல்லா தவர்", இன்னுதே, கல்லார் கண் பட்ட திரு", (406 குறள்) (குறள் 408) "கல்லாதவன் - கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும் இல்லாதாள் பெண்காமுற்றற்று" என்பது (குறள் 402)

**'கற்றவனோடு அல்லற் படுவது'**

'கற்றார் முன்' கல்வி உரைத்தல் முன் இனிது' (இனியவை நாற்பது. 17)

**அல்லல் படல்** - 'அல்லற் பட் டாற்று தழுத கண்ணீ ரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை' (குறள். 555)

வேந்தனும் அல்லவை செய்யான் தாக்கும்' —புறம், 191

**அழகு** - 'குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சளழகும் அழகல்ல (நாலடியார் 131)

கற்ருேர்க்குக் கல்வியழகே யழகு
யாரே, அழகுக் கழகு செய்வார் —(நீதிநெறி விளக்கம் 13)

## சிற்றம்பல நாடி சீடர் தத்துவப் பிரகாசர் பாடல்

அகவல்

கற்றவர் பரவும் சிற்றம்பல நாடி
கழல்புனை சீலன் காழியம் பதியோன்
கெழுமு பரசமயச் சனகோ டாரி
தருவைந்தெண வருதிரு வம்பலவன்
முத்தி நெறியருள் தத் துவப்பிர காசன்
மைதீர் வகையாற் செய்த மைத்தனனே. 89

கற்ருேர் புகழும் சிற்றம்பல நாடிகளின் பாதம் வணங்குவோன், சீகாழி என்ற ஊரினன். புற மதத்தார்க்குக் கோடாரி போல்வான். கற்பக மரம் முதலானவை போன்று வழங்கும் சிறந்த அம்பல வாண தேசிகன், முத்தி வழியைக் காட்டும் தத்துவப் பிரகாசன்; குற்றம் நீங்கி அறிவு வருமாறு நூல்களைக் கற்பித்து ஞானம் வரச் செய்தவன்.

## வீர மாறன் மேல் பாடியது

வெண்பா

கற்றுணர்ந்தோன் காசிக் கலியன் கவிராயன்
மற்றடந்தோள் வேல்வீர மாறனுக்குச்–சொற் புனைந்தா
ளுண்மங் கலமு நவிற்றுகுடை மங்கலமும்
வாண்மங் கலமும் வகுத்து 90

பல நூல்களையும் கற்றுணர்ந்தவன், தென் காசிக் கலியன்; கவிகளை இயற்றுவதில் வல்லோன்; மற்போர் புரிய வல்ல பரந்த தோள்களையுடைய வேலையுடைய மாறனுக்கு நாள் மங்கலமும், பலராலும் புகழ்ந்து சொல்லப்படும் குடை மங்கலமும், வாள் மங்கல மும் என்று வகை செய்து யாவரும் போற்றிக் கொண்டாடும்படியான பாடல்களை யமைத்தான்.

## கவியென்னும் கன்னி

விருத்தம்

கவியெனுங் கன்னி கைக்குக் கவிசொல்வோன் றதை நன்றாய்ச்
செவியுறப் படிப்போன் அன்னை தேர்ந்துரை சொல்வோ னம்மான்
சவைதனிற் புகழ்வோன் அண்ணன் தம்பிமற் றோர்க ளெல்லாம்
நவரச மறிந்து கொள்வோன் நாயக னுகுந் தானே 91

கவி என்ற பெண்ணுக்கு. கவியைச் சொல்பவன் தந்தையாவான். நன்கு காதில் வரும்படி கற்பிப்பவள் தாயாவாள். நன்கு ஆராய்ந்து பொருள் சொல்பவன் தாய் கூடப் பிறந்த அம்மானுவான் (மாமனுவான்). சபையில் புகழ்பவன் அண்ணன். மற்றவர் தம்பியராவர். ஒன்பது வகைச் சுவைகளை யுணர்ந்து கொள்பவன் கணவனுவான்.

ஒரு பெண்ணுக்குப் பெற்றோர், மாமன் (சகோதரர்) உடன் பிறந்தார் கணவன் என்ற உறவு, முறையினர் இவரிவர் என்ற உறவு முறை கூறியது நயம். கவி சொல்வது, படிப்பிப்பது, உரை கூறல்,

சவை - சபை என்பதன் திரிபு. நவரசம் - நகை, அழுகை இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை, சாந்தம். உற - 'உறு' என்ற உரிச் சொல் அடியாகப் பிறந்த வினையெச்சம். மற்று - இடைச் சொல் அடியாகப் பிறந்த வினையாலணையும் பெயர். மற்றவர் என்பதன் திரிபு. தான் - அசை. தாதை - தந்தை. கவியெனும் கன்னி - உருவகம்.

## அச்சுதானந்த கோவிந்தன் மீது பாடியது

கட்டளைக்கலித்துறை

கழுக்கட்டி யேற்றினுங் காசொன் றிலை யெனக்கை விரித்தே
மழுக்கட்டி யேந்தவல் லாரை யுத்யோகத்தில் மன்னர் வைத்தால்
மழுக்கட்டிப் பேர்த்துக் கிழங்குண்ணும் பன்றியின் மூஞ்சியிலே
கொழுக்கட்டி விட்டதன் றேவச்சுதா னந்தகோ விந்தனே 92.

அச்சுதானந்த கோவிந்தனே! கழுமரத்திலே கட்டியேற்றினுலும் ஒரு காசும் கையில் இல்லை என்று பொய் கூறி நெருப்பை

யேந்த வல்லவரை அரசாங்கப் பணியில் அரசர்கள் அமர்த்திஞல் மழுப்போல் மிகவும் உறுதியான (கெட்டியான) களிமண்ணைப் பேர்த்து, நிலத்துக்குள் உள்ள கிழங்கைத் தோண்டியுண்ணும் பன்றியின் முகத்தில் கொழுக் கட்டி விட்டதல்லவா?

மழுக்கட்டி யேந்த வல்லார் - மழுவடிவிலுள்ள தீப்பிழம்பைப் யேந்த வல்லான். சிவபெருமான் ஒருவனே. பன்றி யின் மூஞ்சியிலே கொழுக் கட்டி - பூமி போன்றிருத்தலால் வராகா வதாரம் எடுத்த திருமால். கைவிரித் திருப்போன் - எப்போதும் தவநிலையிலிருக்கும் பிரமன் என நயந் தோன்றல் அறிந்து மகிழத் தக்கது. அச்சுதானந்த கோவிந்தன் - நிலையானவன், பலவானவன். இதயமாம் குகையில் எப்போது மிருப்போன் என்று பெயர் களுக்குப் பொருள் இருப்பது கவனிக்கத் தக்கது.

இப்பாடலாசிரியர் வட ஆற்காட்டுப் போரூர், வைணவர். இவர் காலம் 1850 முதல் 1902. இவர் ஞானகுரு, இவருக்கு உப தேசம் செய்த போது இட்ட பெயர் அச்சுத தாசர் என்பது. இவரது மனைவியார் தாயம்மை. இவர் யோகப் பயிற்சியில் வல்ல, வெங்கம் மையாரிடம் யோகம் பயின்று பல சாதனைகளைச் செய்ய வல்லவ ராஞர். கடாமூரில் கயிலாய மலையிலிருந்த நிசானந்தரிடம் அத் வைதம் கேட்டவர் என்றும் தெரிகிறது.

## திருவேங்கடம் என்பவரைப் புகழ்ந்தது

### கட்டளைக் கலித்துறை

கறுப்பா விளைப்போ ரிடைவீ ரருகாமத் துக்கன்னியரும்
மறுப்பா டில்லாத கவிதைகற் றோருமவ் வாலிபத்தில்
உறுப்பான மைந்தரும் வாய்மதி யாம லுரைப்பர் சொல
வெறுப்பார் களோதிரு வேசெழி யாதிரு வேங்கடமே
93

கோபத்துடன் ஈடுபடும் போரில் வல்ல வீரர்களும், காமமுடைய கண்களையுடைய மகளிரும், (மறு-குற்றம்) பாட வல்லவர்களும், அவ்விளமையான வாலிபப் பருவத்தில் அஞ்சத்தக்க புதல்வர்களும் வாய்மதியமால் கூறுவார்கள். நீ கூறுகின்ற சொற்களை வெறுப்பார் களோ? வெறுக்க மாட்டார்கள். கற்பக தரு போன்ற வளமை பொருந்திய திருவேங்கடமே.

## வடமலையப்பப் பிள்ளை மீது பாடியது

கட்டளைக் கலித்துறை

காசுக்கு மாசைப் படான்விசு வாசி கனமதுரை
வாசற் பிரதானி வடமலை யப்பிள்ளை மற்றைப்பிள்ளை
பேசுங் கிளிப்பிள்ளை நாகண வாய்ப்பிள்ளை . . யென்னு
மாசைக் குயிற்பிள்ளை யப்பிள்ளை கீரி யணிற்பிள்ளையே
93

காசுக்கும்ஆசைப்படாதவன். நம்பிக்கைக்குரியவன். பெருமையுடைய மதுரை மாநகரின் வாயிற்காப்பவருள் முதல்வனை வடமலையப்பப் பிள்ளையே பிள்ளை. மற்ற பிள்ளைகள், பேசுகின்ற கிளிப்பிள்ளை, நாகணவாய்ப் பிள்ளை. (இக்காலத்தில் மைனு என வழங்கும்). தன் பெட்டையிடத்தில் மிகவும் ஆசையுடைய குயிற் பிள்ளை. அந்தப் பிள்ளை எது வென்ருல் கீரி அணிற் பிள்ளைகளே.

இப்பாடலில் வடமலையப்பப் பிள்ளை, என்றதற்கேற்ப, பிள்ளை யென வழங்குவனவற்றை; பிள்ளையென்றழைக்கப்படுவன இவை யெனக் குறித்தபடி. மற்ற பிள்ளைகள் பயனற்றன என்றபடி.

## மூல நோய் நீங்க வகை

கட்டளைக் கலித்துறை

காட்டுக்கருணை கறிக்கருணை காருக்கருணை புளியறணை
நாட்டுச் சுக்குடன்பிரண்டை நல்லவாழைமருட்கிழங்கு
ஆட்டுத் தயிரில் வேகவைத் தனில்தேனி லருந்து
விரேல்
கூட்டி விருந்த மூலமெலாங் குடிபோ மென்குவரே 94

காட்டுக் கருணை, கறிக்கருணை, காருக்கருணை, புளியறணை நாட்டுச் சுக்கு, பிரண்டை, நல்லவாழை, மருட்கிழங்கு, மரவள்ளிக் கிழங்கு இவற்றை நன்கு வேகவைத்து ஆட்டுப்பாலைத் தனியே காய்ச்சித் தயிராக்கி அதில் கலந்து தேனுடன் அருந்தினுல் உடம்பி லுள்ள மூல நோய் விலகி விடும் என்பர்.

உள் மூலம், வெளி மூலம் என மூலநோய் பலவகையாகும். கருணை என்பன கிழங்கு வகைகள். மூலநோய் விலகக் கூறப்படும் ஆயுள்வேத மருந்து முறை உணர்த்தும் பாடல் இது.

## பிறர் மனை நோக்காமை

### எண்சீர் விருத்தம்

காட்டுக் கீரைப் பறிக்கின்ற கன்னியைக்
    கேட்டுக் கேட்டுத் தினந்தினங் கெஞ்சினேன்
மாட்டு புத்தி வகையறி யாமலே
    வீட்டுக் காரனுக் கென்ன விளம்பினளோ ?
நாட்ட மாயவன் நாயகி தன்மொழி
    கேட்டு வந்தவர் பந்தல் கீழிருந்
தோட்ட மாய்த்தடி கொண்டோடி வந்தெனை
    மாட்டுமாட் டென்று மாட்டிவிட் டோடினன். 95

காட்டுக் கீரையைப் பறிக்கும் ஒருத்தியைப் பார்த்துத் தினமும் அவளை நெருங்கி, தனக்கு இணங்கும்படி கெஞ்சினேன். நான் மாட்டிச் கொள்ளும் புத்தியினுல் (அகப்பட்டுக் கொள்ளும்) வகையை யறிந்து கொள்ளாமல், தன் வீட்டுக்காரனிடம் என்னவோ கூறி விட்டாள். மிக்க அன்புடன் தன் மனைவியின் சொல்லைக் கேட்டு வந்து அவர் வீட்டுப்பந்தலின் கீழ் மறைந்து கொண்டிருந்து வேகமாகத் தடியைக் கொணர்ந்து வந்து என்னை அடிஅடி என்று அடித்துவிட்டு ஓடினன்.

கேட்டுக் கேட்டு, தினந்தினம், மாட்டுமாட்டு - இவை அடுக்குகள். மாட்டு புத்தி - மிருகம் போன்ற பல்லைக் காட்டிக் கொண்டு காம விருப்பால் பின் தொடரும் புத்தி. அகப்பட்டுக் கொள்ளும் அறிவு.

நாட்டமாயவன் - நாட்டம் குறிப்பு ஆயவன், இம்மாயவன் என்பது கீரை பறித்தவள் கணவன் பெயர் தொனிக்கும்படியு முள்ளது.

கேட்டு வந்தவர் - கேட்டு வந்தவர் எனவும், "கேட்டு வந்த அவர் கூட்டத்தார்" எனவும் பொருள் தோன்றல் காண்க.

சமயம் பார்த்துத் தாக்கப் பந்தல் கீழ் மறைந்து இருப்பது சகஜம். அவளைப் பின் தொடர்ந்து சென்று அடிபட்டுத் திரும்பினுன் என்பது வெளிப்படை. கன்னி - பெண். நாயகி - நாயகன், நாயகி, தலைவன், தலைவி என்பது போல. நாயகன் என்பது பிற்காலத்தில் ஒரு இனத்தாருக்கே பெயராக அமைந்து வழங்கப்பட்டு விட்டது. நாயகன் மார், நாட்டார், நாடார் என்றெல்லாம் பிரிந்தும் இன்றும் வழங்கக் காணலாம். தடி - மரக் கொம்பு, தண்டு, தடி என்றும் வழங்குவதுண்டு.

## கச்சித் தானப்பன்மீது பாடியது

கட்டளைக் கலித்துறை

காத்திர மாகப் பருத்துப் பணைத்த கடாக்களைப்போற்
பாத்திரஞ் சற்று மறியாத புல்லரைப் பாடியவர்
கோத்திர மூர்பெயர் கொண்டாட வெங்கள்குருக்
கள்சொன்ன
சாத்திரந் தானல்ல வேசீயை வாழ்கச்சித் தானப்பனே
96

சீயை நகரில் வாழும் கச்சித் தானப்பனே! பெருமையாகப் பருமனுடன் வளர்ந்த எருமைக் கடாக்களைப் போலத் 'தக்கவர் இவர்' என்பதைச் சிறிதுமறியாத அற்பரைப் புகழ்ந்து பாடி, அவரது கோத்திரம், ஊர், பெயர் முதலியவற்றைப் போற்றிக் கொண்டாடுவது குருக்கள் கூறிய சாத்திரங்களில் இல்லை!

காத்திரம் போன்று ஏனைய மூன்று சீர்களிலும் வரும் சொற்கள் வடசொற்கள். பணைத்த கடா - கொழுத்து வளர்ந்த கடா. பாத்திரம் -ஏற்றவர்; தகுந்தவர். 'கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு; பாத்திரம் அறிந்து பிச்சை யிடு' என்பது பழமொழி. இதில் பாத்திரம் என்பது இப்பொருளில் வந்தமை அறிக.

சாத்திரம் - இப்படிவாழவேண்டும் என்று விதி முறைகளை வகுத்துக் கூறும் நூல்கள். தர்க்க சாத்திரம், அர்த்த சாத்திரம், தர்ம சாத்திரம் என்பன போல. புல்லர் - புல் போன்ற அற்பமான கீழ்த்தரமான நடையுடை பாவனைகளையுடையவர், காரணப் பெயர்.

## இராமசாமி மீது பாடியது

வெண்பா

காலோட்ட மேலாகுங் கண்டவர்தம் பால்விடுத்தால்
வாலாட்டங் கொண்டு வருமேபார் – மேலேகண்
ணேறுபட்ட மாமதன்பே ரென்றகதை கூறுபுகழ்
மீறுதுரை ராமசுவா மீ. 97

உலகின்மேல் கண்பார்வை (திருஷ்டி)பட்ட சிறந்த மன்மதன் பேருடைய கதையைக் கூறும், புகழால்மிக்க துரையான இராமசுவாமியே! கண்டவரைத் தம்மிடம் அனுப்பி வைத்தால் வாலையாட்டிக் கொண்டு வரும் நாய் போல் பின் தொடர்வர் என்பதைக் கவனித்துப் பார்.

கால் - காற்று, கண்ணேறு - திருஷ்டி. மாமதன்பேர் - அழகன். இராமன் அழகன் எனக் கம்பன் தன் இராமாயணத்தில் அங்கங்குப் பாடுவது கொண்டுணர்க, இப்பாடலும் இராமவேளானைப் பாடிய தாக இருக்கலாம் என்று தோன்றுகிறது.

### பரத்தையையிகழ்தல்

கட்டளைக் கலித்துறை

காலோ வளைதடி கையோகற் ருழை கதித்தபெருஞ்
சாலோ, வயிறு யிடையோ தவில் நின்
தனங்கள்ரெண்டுந்
தோலோ பழஞ்செருப் போதுங்கல் நாயின் சொறிப்
பிடுக்கோ
மாலே யனையவிண் ணுன்கூடல் வாழும் வரையிடத்தே.
98

திருமால் போன்ற விண்ணுன் கூடல் என்ற மலையில் காலோ வளைதடி, கையோ கற்ருழையாம். வயிருே பெரிய சாலோ. போன்ற இடை (இடுப்பு), மேளம். தனங்கள் (முலைகள். இரண் டும் தோலோ. பழமையான செருப்போ தூங்கின நாயின் சொறிப் பிடித்த பீஜமோ?

தோழி பரத்தையைப் பழிக்கும்போது இவ்வாறு பலபடியாகப் பழிப்பது மரபு. ஒருவரை யொருவர் மனதிற்குப் பிடிக்காவிட்டால் வாய்க்கு வந்தபடி யெல்லாம் பழிப்பதை இன்றும் உலகில் காண் கின்ருேமன்ருே! அதுபோலத், தன் தலைவியின் உயிரான தலைவனைப் பரத்தைத் தன் வசப்படுத்திக் கொண்டமையால் இங்ஙனம் பழித் தாள் போலும்!

வளை தடி கற்ருழை சால் தவில் தோல் செருப்பு நாயின் சொறிப் பிடுக்கு என்றெல்லாம் அங்குள்ள சூழ்நிலைக்கு ஏற்றபடி பழித்தமையறிக.

கற்ருமழை - தாழைவகையுள்ள ஒன்று. சால் - உழவர்வயல்களுக்கு நீர் இறைக்கும் வாய சுன்ற அடிகுவிந்த இரும்புப் பாத்திரம். தவில் - மத்தளம்.

### சிவத்தொண்டின் பயன்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

கூறவே கலைமெய்ஞ் ஞானங் குருவரு லிங்க பூசை
மீறவே நீறு தானும் மிகுத்தனன் மணியுஞ் சாத்தி
ஆறவே அன்ன சொன்ன மறுசுவை யளிப்பரன்பால்
வீறவே விண்ணோ ராவர் விளம்பினன் விரும்பிப் பாரீர்99

எடுத்துக் கூறுங்கால் கலை, மெய்ஞ்ஞானம், குருவருளான் அமைந்த லிங்க பூசையியற்றி, அதிகமாகத் திருநீறு அடிக்கடி பூசி, நல்ல உருத்திராக்கம் முதலான மணிகளையும் அணிந்து, நன்றாக அறுசுவை உணவிட்டுப் பொன் முதலிய அளிப்பவர் மிகுந்த தேவராக ஆவார்.

## திருவானைக்காப் பொடிக்கடைச் சோமசுந்தரம் பிள்ளை மீது தியாகராச செட்டியாரும் சாமிநாதையரவர்களும் பாடிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

கொடியணி மாடமோங்கிக்
குலவுசீ ரானைக் காவில்
படியினி லுள்ளார் செய்த
பாக்கிய மனையான் செங்கைத்
தொடியினர் மதனன் சோம
சுந்தரன் கடையிற் செய்த
பொடியினைப் போடா மூக்குப்
புண்ணியஞ் செய்யா மூக்கே. 100

கொடிகள் பறக்கவிடப்பட்ட அழகிய மாடங்கள் ஓங்கிவிளங்கும் சிறப்பு மிகுந்த திருவானைக்காவில், உலகினர் செய்த பாக்கிய வசத்தால் அமைந்தவன், சிவந்த கையினையுடைய மகளிர்க்கு மன் மதன் போன்ற அழகனான சோமசுந்தரம் கடையில் செய்த மூக்குப் பொடியினைப் போடாத மூக்கு, புண்ணியஞ் செய்யாத மூக்கேயாம்.

கொடி மாடம் - கொடிகள் கட்டிப் பறக்க விடப்பட்ட மாடங்களையுடைய மனைகள், ஆனைக்கா - திருவானைக்கா, ஜம்புகேசுவரம் என்று கூறப்படும் பஞ்ச பூதத்தலங்களுள் ஒன்று. காவிரிக் கரையிலமைந்த தலம், சுவாமி ஜம்புகேசுவரர். அம்பிகை அகிலாண்டேசுவரி. ஆதிசங்கரரால் தாடங்கப் பிரதிஷ்டை செய்யப் பட்ட தலம். படி - நிலவுலகம். மதனன் -அழகன்

## திருவேங்கட முதலியாரைப் பாடியது

கட்டளைக் கலித்துறை

கொடுப்போ ரிளைக்கினுமிரப்போர் விடார்குளத்துத் தண்ணீர்
எடுப்பார் பருகி யினிதினி தென்பர தில்லையென்றுற்
கடப்பாரை கொண்டு கெல்லிதன் னப்பயன் காண்பதல்லாற்
விடுப்பார் களோதருவே செழியாதிரு வேங்கடமே 101

கொடுப்பவர் சலித்துப் போனுலும், யாசிக்கின்றவர் விடமாட்டார்கள். குளத்து நீரை எடுத்துப் பருகி "இனிதாக உளது; இனிதாக உளது" என்றே கூறுவார்கள். அந்த நீர் அங்கு இல்லையென்றுல் கடப்பாரையைக் கொண்டு தன்னுல் முடிந்த அளவு தோண்டியெடுத்து அதன்பயனைக் காண்பார்களேயல்லாமல் சும்மா விட்டு விடுவார்களோ, (பாண்டிய மரபின்) திருவேங்கடமே.

கொடுப்பவர் இளைத்துப் போவது உண்டு. இரப்போர் - "இரப்பார்க் கொன்றீவதே ஈகை" (குறள். ஈகை) இரப்பவரைப் பற்றித் திருவள்ளுவர் கூறும் போது அந்த நிலையை ஏற்படுத்திய 'படைக்கும் கடவுளான பிரமனே அழிக' என்ற பொருள் அமைந்த "பரந்து கெடுக உலகியற்றியான்" என்ற தொடர் நினைவு கூர்தற் குரியது. (குறள் 1062 வரை).

மனம் இரங்கு - இறங்கு என்பதற்கு வல்லின றகரமே பயன் படுத்தப்படும், மனம் அவ்வளவு கடுமையானது. அந்த நிலையிலிருந்து உண்ண உணவுமில்லாமல் கஷ்டப்படுவது பார்த்து மனம் இளகி மாறி வன்மை நிலையிலிருந்து மென்மையாக அமைய வேண்டும் என்பதற்காகவே பெரியோர்கள் வலிந்த எழுத்தை மாற்றி, அதற்கு அடுத்த நிலையிலுள்ள இடையின எழுத்தான ரகரத்தை அமைத்தார்களோ என்று எண்ண வேண்டியுளது. வலிமையிலிருந்து அடுத்தபடி மாறவேண்டியது இடையினமே. இந்த நிலை வருவதே சுலபமாக முடியாது. அதனை நினைவூட்டவே இடையினம் அமைத்திருப்பார்களோ என்னவோ! இது பெரியோர்கள் பக்குவ தசையை யுணர்த்த இவ்வாறு வரவேண்டு மெனக் காட்டும் குறிப்படையாளம் போலும்!

குளம் :— ஊரார் நீர் அருந்த உள்ள பொதுக் குளம். ஊருணி என்று சில பகுதிகளில் வழங்குவர். திருவள்ளுவரும் "பேரறிவாளன் திரு" "ஊருணி நீர் நிறைந்தற்றே" (குறள்315) என்பார். பழங்காலங்களில் ஊர்களில் குளம் வெட்டுதல் என்பது 32 வகை தருமங்களில் ஒன்று.

நீர் வறண்டு போகும் கோடைக்காலங்களில் கடப்பாரையினுல் தோண்டி நீர் எடுப்பார்கள். இங்ஙனம் தோண்டி நீர் எடுப்பது பற்றியும் திருவள்ளுவர் கல்வியைப் பற்றி விளக்கும் போது தோண் டத் தோண்ட நீர் மணலின்கண் ஊறும். அதுபோல் கல்வியும் கற்கக் கற்க ஊறும் என்ற கருத்தில் எடுத்தாள்வர்.

"தொட்டனைத் தூறும் மணற் கேணி." (குறள் 396) என்பதற்கு 'மணலின்-கட் தோண்டிய வளவிற்ருக ஹறும்" எனப் பரிமேலழகர் உரையெழுதுவர், இவற்ருல் குளம் ஆறு கிணறு இவைகளில் நீரில்லாவிடில் கடப்பாரையால் நிலத்தைத் தோண்டி நீரெடுக்கும் வழக்கமறிக.

இங்கு இக்கருத்து உவமையாக நின்றது. அதுபோல் கொடுப் பார் இளைத்தாலும் அவரை விடாமல் பற்றிக் கொண்டு சென்று அவரிடமிருந்து பெற்றுக் கொள்ளவே ஆசைப்படும் உலகம். இது உலக இயல்பு. மாதை திருவேங்கட முதலியார் மீது பாடிய தனிச் செய்யுள் இது.

**'கொப்பு' எனத் தொடங்கி கொப்பு என்றே**

**முடிக்கும் பாடல்**

வெண்பா

கொம்பி லிருக்குங் குரங்குக்கு வால்ரெண்டு
கம்பமத யானைக்குக் கால்எட்டு — செம்பவளப்
பூங்கொடி யாளுக் கோத னயில்லை
ஓங்கு முயலுக்குக் கொம்பு 102

மரத்தின் கொம்பிலே ஏறியிருக்கும் குரங்குக்கு வால் இரண்டு இல்லை.கம்பத்தில் கட்டப்பட்டுள்ள மத நீர்மிகுந்த யானைக்குக் கால் எட்டு இல்லை. செம்மை நிறமுடைய பவளம் போன்ற வாயினை யும், பூங்கொடி போன்ற இடையையுமுடையவளுக்கு (உணவில்லை) முலையில்லை. சிறந்த முயலுக்குக் கொம்பு இல்லை.

வால் இரண்டில்லை என இயைக்கப் பொருள் தெளிவாம். இல்லை என ஒவ்வொன்றிலும் சேர்த்துப் பொருள் கொள்க. தலைவிக்கு முலையுண்டு ஆனால் இங்கு (கொடியாளுக்குஓதனமில்லை யென்று பிரித்து, கொடிய குணமுடையவளுக்கு உண்ண உணவில்லை) யெனப் பொருள் காண நயம் தோன்றும். முயலுக்குக் கொம்பில்லை.

இப்பாடல் கொம்பெனத் தொடங்கி, கொம்பென முடிக்குமாறு கொடுத்த (சமஸ்யை) பாடல் இது. இவ்வாறு பாடச் சொல்வது பழைய புலவர்கள், தமிழறிவையளக்கக் கொடுப்பது வழக்கம்.

கம்பமத யானை - கம்பம் - கட்டுத் தறி. மதம் - கன்ன மதம், கபோல மதம், பீஜ மதம். என மூவகை. கொம்பு - மரத்தின் மேல் பக்கம் பக்கமாக வளரும் கவடு கோடு கொம்பு விளார் என்ற பகுதி களுள் ஒன்று.

வால் ரெண்டு - இரண்டு என்பது பேச்சு வழக்கில் இரட்டை வால் என்று விஷமம் செய்கின்ற பிள்ளைகளைப் பார்த்துச் சொல் வார்கள் அது போல் ரெண்டு எனவே பயன்படுத்தப் பட்டுள் ளது. செம்பவளம் - பண்புத் தொகை. பூங்கொடியாள் - அழகிய கொடி போலும் அசையும் இயல்புடைய இடையையுடை யாள் என்று பொருள். பண்புத் தொகையன் மொழி. கொடியாளுக் கோதனமில்லை. கொடியவளுக்கு உணவில்லை. கொடியாளுக்கோ தனமில்லையெனப் பிரிக்க நயம்போன்ற கொடியர்ளுக்கோ தன பில்லை எனவும் கொடியாளுக்கு, ஓதனம் எனவும் வகையுளியாகப் பிரிக்க.

## தலைவி பிரிந்தமைக் கிரங்கல்

### கட்டளைக் கலித்துறை

கோடாலி கொண்டு மரமே பிளந்துகொழு கொம்புநட்டு
வாடாம லேயுனை நான்வளர்த் தேன்முல்லை
யேன் நகைத்தாய்!
தாடாண்மை பேசியென் கணவன் போன தன்மை
கண்டும்
காடா னிளங்குஞ்சை கறையான் வளர்த்த கதையொக்கு
மே. 104

கோடாலியால் மரத்தைப் பிளந்து, அடுத்துக் கொழுகொம்பை நட்டு அது வாடிப்போகாமல் அரும்பாடுபட்டு வளர்த்தேன். இவ்வாறு வளர்க்கப்பட்ட முல்லை மலரே! முயற்சிகளைப் பற்றிப் பேசி எனது கணவன் சென்றமையை அறிந்தும் என்னைப் பார்த்து ஏன் சிரித்தனை? நீ சிரித்த நிலை எப்படியுள்ளது என்றால் காடான் இளமையான குஞ்சைக் கறையான் வளர்த்த கதை போலாகும்.

நகைத்தல் - அரும்பான நிலையிலிருந்து மலர்தல். அம்மலர்ச்சி சிரிப்பது போலாம். தாடாண்மை - பொருள் தேடும் முயற்சியில் சென்றநிலைபார்த்துச் சிரித்தல். பொருள் வயின் பிரிதல் பாற்படும் காடான் - பறவை. அது கறையானைத் தின்னும் குணமுடையது.

## சீயைக் கச்சித்தானன்

கட்டளைக் கலித்துறை

கோளிகை யேறியென்? குண்டேறி யென்ன குலாம
ரெல்லாஞ்
சோளிகை தூக்கியுஞ் சேதமுண் டோ?தமிழ் சொல்லி
வந்துன்
மாளிகை நோக்கி வருவார்க்கு நீசொல்லும் வார்த்தை
யொன்றுஞ்
சாளிகை போனபேறுங்காண்சீயைவாழ் கச்சித்தானப்
பனே. 104

சீயை என்ற நகரில் வாழும் கச்சித்தானப்பனே! பெண் குதிரை மீதோ ஆண் குதிரை மீதோ ஏறி வருவதால் என்ன பயன்? ஒன்று மில்லை. பிறர்க்கு ஈயாத உலோபிகள் எல்லாம் பிச்சைக்காரர் தூக்கும் பைபோன்று நீயும் தூக்கிச் செல்வதால் ஏதாவது நன்மை உண்டா? தமிழில் பாடி வந்து உனது மதிலுக்குள் அமைந்துள்ள அரண்மனையை நோக்கி வருபவர்க்கு நீ சொல்வது தான் என்ன? என் பணப்பையோடு உன்னிடம் பரிசு பெருமல் இருந்தது அதிர்ஷ்டமே.

கோளிகை – பெண் குதிரை ; குண்டு – ஆண்குதிரை; குலாமர் – உலோபிகள். சாளிகை – பணப்பை; வாழ் தானப்பன் – வினைத்தொகை. சோளிகை – பிச்சைக்காரன்பை; மாளிகை – அரண் மனை.

## சாமி ஐயங்கார்மேல் பாடியது

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

சந்தஞ்சேர் மறைநான்கும் உபநிடத மெண்ணான்கும்
தருக்க மாதி
மந்திரவியா கரணமுத லாறுசாஸ் திரமு மாரு தோதி
விந்தைதிகழ் விப்பிரகுல சிகாமணியா யெந்நாளும்
விளங்கப் பார்மேல்
இந்திரசெள பாக்கியர்பெற் றுயர்சாமி ஐயங்கார்க்
கிணைமா லாமே 105

சந்தங்களுடைய நான்கு வேதங்களும் முப்பத்திரண்டு உபநிடதங்களும் தருக்கம் ஐந்திரவியாகரணம் முதல் ஆறு சாத்திரங்களும் முறை மாருமல் ஓதி, வித்தையால் விளங்கிய அந்தண குலத்துதித்த முடிமணியாய் எப்போதும் விளங்க உலகில் இந்திரனைப் போல் எல்லாச் சுபபோக பாக்கியங்களும் பெற்று உயர்ந்த சாமி ஐயங்கார்க்கு ஒப்பு யாரெனில் திருமாலேயாம்.

சாமி ஐயங்சார் நால்வேதம் ஆறு சாஸ்திரம் கற்ற அந்தண சிகாமணி. இந்திரன் போல் சுக போக்கியங்களுடன் கூடியவர். இவருக்குச் சமம் திருமாலே என்பது கருத்து.

உபநிடதங்கள் அளவற்றன உள. அந்த அந்த வேதங்களிலும் உண்டு; அவற்றுள் 108 முக்கியமானவை. அவற்றுள்ளும் 32 மிக முக்கியமானவை. இவற்றுள்ளும் தைத்தரீய உபநிடதம் நான்கும் மிகவும் இன்றியமையாதன.

ஆறு சாத்திரங்கள் - வியாகரணம், தருக்கம், மீமாம்ஸை, நிருக்தம், சந்தஸ் சோதிடம், என்பனவாம். இந்திர சௌபாக்கியம்- போக போக்கியங்கள் ஒவ்வொரு தேவ உலகிலும் உண்டு. எல்லா உலக இன்பங்களிலும் சிறந்தது இந்திர உலக போகமேயாகும்.

## வெங்காயம் தன் நாற்றம் போகாதென்பது

வெண்பா

சந்தனத்தைச் சேறுசெய்து தண்பனிநீயைத் தானரைத்து
விந்தைசெறி கத்தூரி மேல்விசிறி - முந்தவே
பன்னா ளறிந்து பயிரிடினும் வெங்காயம்
தன்னாற்றம் போகுமோ தான். 108

சந்தனத்தை நன்றாகச் சேறாக்கி, குளிர்ந்த பன்னீரையும் கலந்து வியப்பமைந்த கஸ்தூரியையும் அதன் மேல் தெளித்து, விசிறி கொண்டு விசிறிப் பல நாள் கழித்துப் பயிரிட்டாலும் வெங்காயம் தனது நாற்றம் நீங்கப் பெறுமோ? பெறாது.

சந்தனம்,பன்னீர்,கஸ்தூரி இவைகளை மணத்திற்காகப் பூசியபோதி லும் உடம்பில் இயல்பாகவே தோன்றும் கற்றாழை நாற்றம் நீங்காதது போல, வெங்காயமும் தன் தன்மையிலிருந்து மாறாது. இயற்கை குணம் மாறாது (எவ்வளவு திருத்திய போதும், தன் இயல்பான குணம் மாறாது) என்பது கருத்து.

பல் + நாள் - பன்னாள். "பல சில" என்ற (நன். நூற்பா 170) பல+நாள் - பன்னாள் எனப் பிறவரின் அகரம் விகற்பமாயின," என்ற சங்கர நமச்சிவாயர் உரைப்படி முடிபு காண்க.

தன்+நாற்றம் - தன்னாற்றம்"னல முன் றனவும்" (நன். சூ.237) என்ற விதிப்படி அமையுமாறறிக. பன்னாள் என்பதற்தும் இதுவே அமைதி. வெங்காயம் - வைதிக முறைப்படி உண்ணத் தகாதது என விலக்கப் பட்ட பொருள். ஆனால் வைத்திய முறையில் பல வகையில் பயன்படும். "வெங்காயம் சுக்கானால்" (தனிப்பாடல்) அறிந்து பயிரிடினும் - தெரிந்து கொண்டு பயிரிட்டாலும். கத்தூரி கஸ்தூரி.

## தலைவன் இருப்பிடம் இதுவெனல்

கட்டளைக் கலித்துறை

*சம்பு நிழற்பர மற்கிபச் சோலை தயங்குபதிக்*
*கம்பர மேனி கடன்மடப் பள்ளி கருதரிய*
*செம்பொனி னம்பல நாடக சாலை திருவரங்க*
*மம்பொடு நாண்கிடக்கு மத்திரசாலை யவர்தமக்கே. 107*

நாவல் மரத்தின் கீழ் எழுந்தருளிய சிவபெருமானுக்கு ஆனைக்கா தங்கத்தக்க சோலையாக விளங்கும். ஆகாயமே உடல். கடலே சமையலறை. எண்ணிப் பார்க்கமுடியாத செம்பொன் வேய்ந்த பொன்னம்பலமே நடனமாடத் தக்க நாடக சாலை. திருவரங்கம் ஆற்றிடைக்குறை, (அம்போடு) தண்ணீரோடு கிடக்கும், அத்திரசாலை - கடல்மடப் பள்ளி - கடல் மடப் பள்ளி வில் அம்புகள் வைப்பிடம் (திருவிடை மருதூருலா 13-ஆம் கண்ணி).

## ஆங்கில மாதப் பெயர்கள்

வெண்பா

*சனவரியாம் பிப்ரவரி சேர்மார்ச்சு யேப்பரல்மே*
*யண்சூன்சூ லாகிய கொட்டுடனே - கசைவுட்ட*
*மாதேயக் டோபர்மா நவம்பர் டிசம்பர்*
*சாதிமத மீராறு தான். 108*

ஜனவரி பிப்ரவரியோடு அடுத்து வரும் மார்ச்சு ஏப்ரல் பொருந்திய மே, ஜுன் ஜுலை, ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர் சிறந்த நவம்பர் டிஸம்பர் ஆகமாதம் பன்னிரண்டே தான்.

இப்பாடலில் ஆங்கில மாதப் பெயர்களை வரிசையாகச் சொல்லி யிருப்பது ஒரு சிறப்பு. அதனோடுகூட எனப் பொருள்படும் அண்டு (And) என்ற ஆங்கிலச் சொல்லையும் அமைத்திருப்பது உணரத் தக்கது. சாதிமாத மீராறு தான் - பன்னிரண்டு என்பது பல என்ற பொருளில் வருகின்றது. மாதம் என்பது மதம் என வந்தது.

சூலாகிய கொட்டுடனே கசைவுட்ட மாதே விளி

ஈர்+ஆறு - ஈராறு - பத்து, பன்னிரண்டு என்று கூறுவது உலக வழக்கு. இதன்படி காணில் பல பல என்று கொண்டாலும் தவறாகாது. இரண்டாம் வரியில் எதுகை மோனைகள் சரிவர அமையாமை யுணர்க.

## பராக்கிரம மாறன் மீது பாடியது

கட்டளைக் கலித்துறை

சாத்திரம் பார்த்திங்ஙன் யான்கண்ட பூசைகள் தாம்நடத்தி
ஏத்தியன் பால்விசுவ நாதன்பொற் கோயிலென்றும் புரக்கப்
பார்த்திவன் கொற்கைப் பராக்கிரம மாறன் பரிவுடனங்
கோத்திரந் தன்னிலுள் ளார்க்கு மடைக்கலங் கூறினனே 109

பெரியோர்கள் எழுதி வைத்துள்ள விதிநூல் முறைப்படி நான் சொல்லிக் கொடுத்த பூசை முறைகளை நன்கு முறையாகத் தவறாமல் செய்வித்துப் புகழ்ந்து அன்புடன் விசுவநாதப்பெருமானது அழகான கோயிலை எப்போதும் அம்முறையிலேயே பூசை முறைகள் விட்டுப் போகாமல் ஒழுங்குடன் நடக்குமாறுபாதுகாக்க, அரசன் கொற்கைத் துறைமுகத்தையுடைய பராக்கிரம மாறன், மிக்க ஆதரவுடன் யான் தோன்றிய வழி வழியாய் என் வழியில் பிறந்தவர்கள் அனுப விப்பதற்கு, 'நான் அடைக்கலம் தந்தேன்' (நிவந்தம்) இனும் அளித் தேன்' என்று கூறினான்.

பராக்கிரம மாறன் 15 ஆம் நூற்றாண்டினன். சிவனடியான், கங்கைக் கரையில் உள்ள விசுவநாதர் ஆலயம் போல் விசுவநாதர் ஆலயத்தைச் சித்திரா நதிக்கரையில் அமைத்தான்.

## சாதுரியம்

வெண்பா

சாதுரிய ரானாலுந் தன்கையிற் புத்தகத்தை
மாதிரியா யீய வழக்குண்டோ – சாதுரியா
பார்த்தெழுத வேண்டுமென்றால் பத்தேடு மெட்டேடுங்
கோர்த்தெழுதிக் கொள்ள 'கொடும். 110

மிக்க புத்திசாலியானாலும் தன்கையிலுள்ள புத்தகத்தைக் கொடுக்கும் வழக்க முண்டோ? இல்லை. (சாமர்த்தியம்) சாதுரிய முடையவனே. நீ பார்த்துத் (தேர்வு) எழுத வேண்டுமென்றால் பத்தேடும் எட்டு ஏடுகளும் சேர்ந்தாற்போல் கோவையாக எழுதிக் கொடுக்கப் பெற்றுக்கொள்க. அப்படிப் பெற்று எழுதிக்கொண்டு திருப்பிக் கொடுப்பீர்.

பத்தெட்டு என்பது நாலைந்து என்பது போல, சில என்ற பொருளில் அமைந்தது.

இப்பாடல் சமீப காலப் பாடல்போல் தோன்றுகிறது. பார்த்தெழுதி வெற்றிபெற விரும்பியவரைப் பார்த்து வேடிக்கையாகப் பாடிய பாடலாக இருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

புஸ்தகம் வநிதா வித்தம் பரஹஸ்த கதங்கதம் / அதவா புனராகச்சேத் ஜீர்ணம் ப்ரஷ்டாச கண்டச :— புத்தகம், பெண், பணம் ஆகியன பிறர்கையில் சென்றால் திரும்பிவாரா. அப்படி வந்தாலும் கொஞ்சம் கொஞ்சமாகவே வரும். அதாவது பழுதுபட்டே வரும்.

கோர்த்தெழுதிக் கொள்க. ஒன்றோடொன்று சேர்த்து எழுதி இணைத்து அதிக மதிப்பெண் பெற வாய்ப்பாகப் பெற்றுக்கொள்க.

பார்த்தெழுத வேண்டுமென்றால், எல்லாக் காலங்களிலும் மேற்பார்வை செய்பவர் சாதாரணமானவராக இருந்தாலும், மாணவன் ஒழுங்காகப் படிக்காமலிருந்தாலும் மற்றவரையோ புத்தகத்தையோ ஆசிரியர் காணாதபடி தேர்வு எழுதுவோர் பார்த்தெழுத முயல்வார்கள்.

## பெற்றோரைப் பழித்தல்

வெண்பா

சாலப் பகையெனக்குத் தந்தைதா யேபலநூல்
ஏலப் பயிற்றா திருந்ததனால் - வாலறிவில்
மிக்குணர்வார் பாலிருந்தேன் வீறன்னக் கூட்டத்துக்
கொக்கிருந்த தென்னக் குனிந்து. 111

என்னைப் பெற்றெடுத்த தாய்தந்தையர் இருவருமே எனக்கு மிகவும் பகையாவார்கள். ஏன் என்றால், பலவகையான நூல்களை என்மனம் ஏற்றுக்கொள்ளும்படி கற்பிக்காமையினால், ஒளிவிடும் சிறந்த அறிவுடையார் நிரம்பிய கூட்டத்தின் நடுவில் கல்வி கற்றவனைப் போன்று கம்பீரமாகச் சென்று அமர்ந்திருந்தேன். எப்படி இருந்தேன் எனக் கேட்பீரானால் கொக்கு தனக்கு என்ற இரை கிடைக்கும் வரை எப்படிக் கண்ணை மூடிக்கொண்டு இறந்துவிட்டதுபோல் இருக்குமோ அதுபோல் ஒன்றும் தெரியாதவனாய் இருந்து கண்ணை மூடிக்கொண்டிருந்தேன்.

சால—"சால உறுதவ நனிகழி கூர்மிகல்' (நன். உரி. சூ. 15). தந்தை தாய்—"தந்தை தாய்ப் பேண்". வாலறிவு—"கற்றதனா-லாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்" (குறள், 2). வீறன்னக் கூட்டம்—கல்வியினால் அமைந்த பெருமிதத்துடன் கூடிய புலவர் கூட்டம். அன்ன-என்ன, உவம உருபுகள் "போல புரைய" (நன்னூல் சூத். நிரம்-367). "கொக்கிருந்த தென்ன" "கொக்கு ஒக்க கூம்பும்பருவத்து" (குறள் 490).

## வேம்பத்தூர் பிச்சுவையர் பாடல்
### வெண்பா

சிரக்கம்பஞ் செய்வர் சயமகுட வேந்தர்
மரக்கம்ப முங்கும்ப மாகு – முரைக்குள்ளே
வெல்விப் பிரசங்கமது வெண்பாப் புலிமைந்தன்
கல்விப்பிர சங்கமது கண்டு. 112

சிறப்பாக வெண்பாப் புலி என்ற பட்டம் பெற்றவரின் மைந்தன் சொற்பொழிவு செய்யும் போது கேட்டுத் தலையசைத்துக் கொண்டாடிப் போற்றுவர். வெற்றிக் கிரீட மணிந்த மன்னர் கம்பம் போல் அசையாமல் திகைத்துப் பிரமித்துப் போவார்கள்.

விப்பிர சங்கம் அந்தணர் குழுவில். கல்வி பிரசங்கம் - கல்வி பற்றிய சொற்பொழிவு. கும்பம் - குடம். வெண்பா - வெண்பா முதலிய நால்வகைப் பாடல்களில் ஒன்று.

## முத்து நாகப்பன்மீது பாடியது
### கட்டளைக் கலித்துறை

சிரைத்துப் பிழைக்கவு மாட்டான் திருவடி தேச மெல்லாம்
அரைத்துக் கரைத்துக் குடித்து விட்டா னல்லறிவுகளைக்
கரைத்துப் புகட்டினுங் கொள்ளான் கதிப்போடு கன்னமொட்டி
நரைத்துப் புலச்சை கெட்டான் கொழுமூர் முத்துநாகப்பனே, 113

முத்து நாகப்பன் க்ஷவரஞ்செய்து பிழைக்கவும் மாட்டான். உலகமெல்லாம் நன்கு சுற்றிக் கஷ்டப்பட்டுப் பாதத்தால் முழுதும் நடந்துவிட்டான். நல்லறிவுக்கு வேண்டிய அறிவுரைகளைக் கூறினாலும் ஏற்றுக் கொள்ளமாட்டான். கோபத்தோடு கன்னமொட்டி நரையேற்பட்டுத் தசைகள் தொங்கி வாழ்ந்து கெட்டுப்போனான்.

பிழைத்துக்கெட்டான் என்பது புலச்சைக்கெட்டான் என்று வந்ததுபோலும்.

## வேலப்ப காண்டிபன் மீது பாடியது

கட்டளைக் கலித்துறை

சிலைகொண்ட காமன் சினங்கொண்டு போர்செயச் சிந்தைநொந்து
மலைகொண்ட கொங்கை மதங்கொண்டு வாடி வருந்துவனோ
பஞ்சணை மேற்கொண்டு விலைவிதம்புரிவாய் கலைகொண்ட
விலைகொண்ட வாணர் கவிக்கருள் வேலப்ப காண்டிபனே 114

வில்லையுடைய மன்மதன் கோபங் கொண்டு போரிட மனம் வாடி மலைபோன்ற முலைகள் மதம்மிக்கு, வாட்டமுற்று, வருந்திக் கொண்டிருப்பேனோ ?

விலைமதிப்புடைய பஞ்சால் அமையப் பெற்ற பஞ்சணை மேல் பலபடி விளையாடுக. பற்பல நூல்களில் வல்ல புலவர்களுக்கு அருளும் வேலப்பனாகிய அருச்சுனனே.

அழகில் அருச்சுனன் மன்மதன் முருகன் சிறந்தவர்கள். இவருள் அருச்சுனனைக் கூறியவாறு.

வேலப்ப (காண்டிபன்) சிலை கொண்ட காமன்-கரும்பு வில்லை யுடைய மன்மதன். மலை கொண்ட கொங்கை-மலை-கொங்கைக்கு உவமை. மதம் கொண்டு - காம மயக்கங் கொண்டு. விலை கொண்ட பஞ்சணை - அதிக விலை மதிப்புடைய மெத்தை. கலை கொண்ட வாணர் - பல கலைகளிலும் வல்ல புலவர்.

வாணர் கவி - வாணரது கவியென்க. வாழ்நர் என்பது வாணர் என்றாயிற்று, மரூஉ.

## ஞானப் பிரகாசர் மீது

அறுசீர் விருத்தம்

சிவபுரம் செட்டி ஞானி சிதம்பர நாதன் மைந்தன்
பவஞானப் பிரகாசன்றன் பரவுசம் பந்தன் சீடன்
உவமையி னன்மை யாளர் மரபினைத் தன்குற் றம்போல்
குவலயத் தஞ்ஞா னப்பேய்க் குருடர்க்குக் குழறி னனே
115

சிவபுரம் என்ற தலத்தே விளங்கும் செட்டியார் மரபில் தோன்றிய ஞானியான சிதம்பரநாதன் என்பவனது மகனுய்த் தோன்றிய ஞானப்பிரகாசன் என்பானின் போற்றிக்கொண்டாடும் சம்பந்தன் என்கிற சீடன், தனக்கு ஒப்புமையில்லாத நன்மை செய்கின்றவர் வம்சத்தைத் தன்னுடைய அஞ்ஞானம் ஆகிய குற்றம் போல் மற்றவர்களுக்கும் இருக்குமென்று கருதி, அவை நீங்க அஞ்ஞானம் நிரம்பிய பேய் போலும் அலையும் மனமுடைய ஞானக் கண்ணற்ற குருடர்களுக்கு எடுத்துக் கூறினான்.

## நாயின் குணம்

வெண்பா

*சிறுதீனி சாக்கிரதை சீரறிவோ டன்பு*
*பெறுமுடையான் விசுவாசம் பீடு-செறிவீரம்*
*சொன்னபடி செய்தலெனுந் தூய்குணமோ ராறும்*
*துன்னுமிழி நாய்க்கெனவே சொல்.* 116

மிகவும் கொஞ்சமாகத் தீனி தின்னும். எப்போதும் பாதுகாப்புக்காக விழிப்புடன் இருக்கும். சிறந்த அறிவோடும், அன்பும் கொண்டு விளங்கும். தன்னை எஜமானனுகவுடையவனிடம் மாருத அன்பு கொண்டிருக்கும். பெருமையுடனும் வீரத்துடனும் தன் தலைவன் சொன்னபடி செய்தல் என்ற (தூய) நல்ல குணங்கள் ஆறும் மிகவும் (பிறப்பால்) தாழ்ந்த நாய்க்கு உண்டு என்றே சொல்க.

ஜாக்கிரதை -- கவனத்துடன் எச்சரிக்கையுடனிருத்தல், சீர் + அறிவு - சீரறிவு - சிறந்த அறிவு எனப் பொருள். சீறு + அறிவு - சீறறிவு என வருமாலுல் சீறுகின்ற கோபிக்கின்ற அறிவெனப் பொருள். இரண்டுக்கும் வேறுபாடறிக.

உடையான் விசுவாசம் இருத்தல். தன்னை எசமானனுகவுடைய நன்றியறிவு மறவாமல் இருத்தல்.

பீடு செறி வீரம் - பெருமை. பெருமிதம். கம்பீரம் இப் பொருளாவது திருத்தக்க தேவர்,

"பெண்ணெனப் படுவ கேண்மோ! பீடில பெருமை நோக்கா" "கனகமாலை" செய்யுள் 14 என்று குறிப்பதனுலும்,

புகழ் புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்.

"ஏறு போல் பீடு நடை" திருக்குறள், புகழ் 9. என வள்ளுவர் வாக்கானும்.

"பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மான்" என்ற தேவாரத்தானும் உணர்க.

"பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மானிவ னன்றே" என்பது சம்பந்த சுவாமிகளின் சீகாழித்தலத் தேவாரம் கொண்டு மறிக. விசுவாசம் - நன்றியுணர்வு, எதிராக நடக்காமல் கீழ்ப்படிந்து நடத்தல். இக்குணங்கள் நாயிடம் இருப்பது போற்றத் தக்கன, நாய் குணங்களால் உயர்ந்தது. இவ்வளவு சிறப்புக்களைப் பெற்றுள்ள போதிலும் பிறப்பால் தாழ்வாக மக்களால் எண்ணப்படுகிறது, அதனுல் "இழி நாய்" என நான்கா மடியில் கூறப்பட்டது. நாயிடமுள்ள குணங்களை மக்கள் பெற முயன்று வாழக் கற்று வாழ முற்பட்டால் மனிதனும் சிறந்து விளங்கலாம்.

## இடைச்சியார்

எண்சீராசிரியம்

சினத்தவடி வாள்வீர னொன்ப தூரன்
செகராசன் மகராசன் செஞ்சொல் வாண
ரினத்தரெலாங் கூட்டமிடும் பெஞ்சை நாட்டில்
இடைசிறுகி மருவிவரு மிடைச்சி யாரே
கனத்த கும்பக் குடப்பாலைக் குடிக்கவாசை
காமனெயிப் படியுருக விட்ட தாலே
பனத்து யர்ந்திருத் தயிரும் வரும் . . . 117

கோபத்தையுடைய வடித்தலையுடைய வாள் பொருந்திய வீரன். ஒன்பது ஊரினையுடையவன்; உலகை யாளுவோன். மகராஜன். நல்ல சொற்களைக் கொண்டு பாடும் புலவர் கூட்டத்தையெல்லாம் கூட்டமாகச் சேர்க்கும் பெஞ்சை நாட்டில் இடைசிறுத்துத் தெருவில் வரும் இடைக்குலத்து உதித்த வரே. பெரிய குடத் (குடம்போன்ற முலை)தின் பாலைக் குடிப்பதற்கு மிக ஆசைப்பட்டுக் காமமாகிய நெய்யை இப்படி உருகும்படி விட்டதனுல் பனைமரத்தின் உயரத்திலிருந்து தயிரும் வரும்.

பால் - குடத்திலிருக்கும். நெய் - (காமம்) நெய்யாக உருகும்; பனந்தயிர் - பனங்கள் புளித்தபோது தயிர் மாதிரி இருக்கும். புளிக்கும் பால் நெய் தயிர் சேர இப்பாடல் தோன்றப் பாடலமைத் திருப்பது சிறப்பு. காமத்தின் குணம் உடலை உருக்கும் என் பதை அறிய வைப்பது இப்பாடல். கும்பக் குடம் - ஒரு பொருட்பன் மொழி. இரு பெயரொட்டு.

செஞ்சொல்வாணர் - புலவர். காமநெய் - காமத்தை நெய் யாக உருவகம் செய்யப்பட்டது. நெய் பெறத் தயிரும் வரும் எனவும் தயிர் பெறப் பாலும் இப்பாடலில் கூறியதழகு.

## விசயரகுநாதன் மகன், விசய திருமலை ராயபாதர் உத்தொண்டைமான் துரைபேரில் சமூக விருத்தம்

சீர்கொண்ட தென்கபிலை ராசரா சேசுவரி
செயந்தர வளர்ந்த சமுகம்
தெட்சணா மூர்த்தியிரு பத்மபா தத்தியான
சேவைபெறு மீறு சமுகம்

ஊர்கொண்ட குமரகுரு பரமுருக தண்டா
யுதன்துதி விளங்கு சமுகம்
உயர்விசய லக்ஷ்மிசௌ பாக்கிய லக்ஷ்மி
யுயர்ந்தர சிருந்த சமுகம்

தார்கொண்ட கற்பக பரிமள சுகந்தவா
சனைகள்யோ சனைசெய் சமுகம்
தருராச பாதர்துரை ரெகுநாத நீததுரை
தனதுகொலு வளரு சமுகம்

தூர்கொண்ட விந்திரகுல ராசர்பதி னெண்மர்புகல்
துதிநிதி மிகுந்த சமுகம்
துரைராச விசையதிரு மலைராய பாதருத்
தொண்டை மான்துரை சமுகமே. 118

சிறப்பமைந்த தென்கபிலையிலுள்ள இராசராசேச்வரி வெற்றிதர வளர்ந்ததும், தென்முகக் கடவுளான தட்சிணாமூர்த்தியினது மேலான பாதத்தியான மூலம் அழகு பெறுவதால் மிகுந்து விளங்குவதும், ஊரார் புகழ்ந்து கொண்டாடுகிற குமரன், குருபரன் முருகன், தண்டாயுதன் துதி விளங்குகின்றதும், உயர்வாக வெற்றித் திருமகளும், சௌபாக்கிய லட்சுமியும் கூடிச் சேர்ந்தாற்போல் அரசாட்சி செய்வதும் கற்பகமலர் மாலைகளான் அழகுடன் விளங்குகின்ற ரகுநாதனே! நீயே துரையாய் உனது கொலுவில் வீற்றிருந்து தினமும் சிறப்பிக்கின்றதும். இந்திர குலத்து அரசே! பதினெட்டு மரபினர் துதிக்கின்ற செல்வமிக்கதும், துரையான ராஜவிசைய திருமலைராயனே ! தொண்டைமானாகிய தங்கள் இச்சிறப்புக்களுடையன தங்களுடைய சமூகம்.

சீர் - மங்கலச் சொற்களுள் ஒன்று. ஜயம் - வெற்றி.

தக்ஷிணாமூர்த்தி-தெட்சிணாமூர்த்தி என உலகில் வழங்குவதால் அப்படியே எடுத்தாளப்பட்டது.

பத்மபாதம் - இறைவனின் அழகான ஸ்ரீபாதம். பதினொரு வகையாக இறைவனுக்கு உபசாரம் செய்வதில் இதுவே முக்கியம். இதன் பெருமைகளை எவராலும் அளவிட்டுக்கூறமுடியாது.

ஸ்ரீ ஆதிசங்கரர் குருவைத் தேடிச் செல்கையில் அவரது குரு கோவிந்த பாதர் குகையிலிருந்து கொண்டு தமது பாதத்தையே அவருக்கு முதலில் தர்சனம் செய்ய அருளியதாகச் சொல்வார்கள்.

ஸ்ரீ காமகோடி பீடம் போன்ற இடங்களில் மரத்தாலான ஸ்ரீ பாதங்களை வைத்துப் பூஜிப்பதைக் கவனித்தால் புரியும். பாத பூஜை என்று அதற்குப் பெயர்.

பழைய காலங்களில் அரசர்களுடைய திருவடிகளை எடுத்துத் தாங்கிவரச் சிலசேவகர் உண்டு. அவர்களுக்கு ஸ்ரீ பாதந் தாங்கிகள் எனப்பெயர்.

இவ்வளவு சிறப்புடையது ஸ்ரீ பாதம். இது பற்றி வைஷ்ணவ குருவான ஸ்ரீ நிகமாந்த தேசிகர் ஸ்ரீரங்கநாதரின் பெருமைகளை விவரிக்க அவரது பாதுகைகளையே விவரித்து (1000) ஆயிரம் சுலோகங்கள் அடங்கிய நூல் ஒன்றைப் பாதுகாஸஹஸ்ரம் என்ற பெயராலேயே எழுதியுள்ளார். அதில் மணி மந்த்ர ஔஷதம் கார்யஸித்தி முதலான எல்லாப் பெருமைகளும் மிகவும் நுணுக்கமாக அடங்கக் கூறியுள்ளார்.

"ஸ்ரீ பாத சேவையும் மறவாத வேணும்" என்பது திருப்புகழ். தக்ஷிணாமூர்த்தி:-சிவன் கோவில்களில் சிவபெருமான் இருப்பதற்குப் பக்கமாகவப்பக்கத்தே சின்முத்திரையுடன் அமர்ந்து, ஸனகர், ஸநந்தனர், ஸனத்குமாரர், ஸனத்ஸுஜாதர் என்ற நால்வருக்கும் பரம் பொருளின் தத்துவத்தைத் தன் கைவிரல் சைகையால் காட்டி அருளும் யோக நிலை. இந்த இடத்தில்தான் அறிந்தவர்கள் ஜபம் செய்வார்கள். சோபை - அழகு. ஊர் கொண்ட - ஊர் தோறும் தங்கிய என்றுலும், அழகுடைய என்றுலும், ஊர்தியான மயிலை வாகனமாகவுடைய என்றுலும் பொருந்தும். குமரகுருபர, முருக தண்டாயுதன் - இவை முருகன் நாமங்கள். யோசனை - 10 மைல். வெகு தூரம், பரவும் என்பது கருத்து.

## சுக்கிலத்தின் தன்மை

மேதகு தன்மனை யன்றி வேறொரு
கோதையைப் புல்லினல் கூடுஞ் சுக்கிலம்
பாதகர் தீவினை பரிதல் பாத்திராய்
ஆதகா தென்றுபோ யலறி வீழுமால். 119

மேம்பட்ட தன் மனைவியைத் தவிரத் தீய வழியில் பிறர் மனைவியை விரும்பிச் சேர்ந்தால் வெளிப்படும் சுக்கிலம், 'கொடியவர் இவர் ; இத்தீவினை வீணேபாத்திராது, ஆ! இக்கொடுஞ் செயல் செய்யத் தகாதது' என்று அலறிப் போய் வெளியே விலகி வீழ்ந்து விடும். ஆல் அசை. கோதை – மாலை. இதனைச் சூடிய மகளுக்கு ஆகி வந்தமையால் ஆகு பெயர்.

## மகதனிடம் மீனவன் தோற்றல்

வெண்பா

மேருவின் மீன் பொறித்த வென்றியினும் வேல்வாங்கி
வாரி தனைத்தடிந்த வார்த்தையினு - மாரிதனை
மன்னிட்ட சேதியினு மகதற்கு மீனவர்கோன்
பின்னிட்ட சொல்லே பெரிது. 120

மேருமலை மீது மீன் வடிவை எழுதிப் பொருத்தி வைத்த வெற்றியைவிட வேலையெடுத்துக் கடலில் சென்று பகைவனை வெற்றி கொண்ட அத்தகையோன் வெற்றிப் பெருமையைப் புகழ்ந்து கூறும் பலருடைய வார்த்தைகளையும் விட, மழை மேகம் போன்று ஒன்றன்பின் ஒன்ருய் அடுத்தடுத்து வருகின்ற சேனையுடைய அரசன் நிலையாகக் கூறிய செய்தியை விட், மகத நாட்டு மன்னனுக்கு, மீனக் கொடியுடைய பாண்டிய மன்னன் போரில் எதிர்த்து நின்று போரிட முடியாமல் தோற்றுப் பின் வாங்கிய வார்த்தைகளே மிகவும் பெரிதாம்.

மீன் - பாண்டியருடைய கொடியில் எழுதப்படும் அடையாளம். பல பாண்டிய மன்னர்கள் இமயம்வரை சென்று தமது அடையாளமான மீனை, அங்குத் தாம் சென்று அங்கிருந்தாண்ட மன்னரை வென்றதன் அடையாளமாக மீன் வடிவைக் கல்லில் செதுக்கிவைத்து வந்தார்கள்.

வேல்வாங்கி வாரிதனைத் தடிந்தமை.

ஒருசமயம் இந்திரன் பாண்டிய மன்னன்மீது கொண்ட கோபத்தால் மதுரையை யழிக்கயெண்ணி மதுரைக்குள் சென்று அழிக்குமாறு இட்ட கட்டளைப்படி, கடல் மதுரையை யழிக்கத்தொடங்க, பாண்டிய மன்னன் கனவில் சிவபெருமான் இட்ட கட்டளைப்படி கடல்மீது வேலை வீசியெறிய, கடல் அடங்கி நின்றது. மன்னனுக்கு வெற்றியாக அமைந்த செய்தியே இங்கு இத்தொடரால் குறிக்கப்படுகிறது.

பாண்டிய மன்னன்மீது வெகுண்டு இந்திரன் ஏழு மேகங்களை ஏவி மதுரையை யழிக்க ஆணையிட்டபடி மேகம் மழை பொழிய, பாண்டியன் சோமசுந்தரரை அடைக்கலம் புக, அப்பெருமான் தம்மிடமிருந்த நான்கு மேகங்களை யேவி மதுரையுள் மழை விழாமல் மூட, இந்திரன் மன்னிப்பு வேண்டி விலகினான். அது முதல் மதுரை நான்மாடக்கூடல் எனப் பெயர் பெற்றது.

மகத நாடு - சோழநாட்டுக்கும் தொண்டை நாட்டுக்கும் இடைப்பட்ட நாடு. இது தமிழர் வடக்கில் மகத நாட்டிலிருந்து குடியேறின நாடாகிய தமிழ் நாட்டிற்கிட்டபெயர்.

இது தட்சிணமகதம் உத்தர மகதம் என இருவகை. உத்தர மகதம் - வங்கதேசத்தருகில் உள்ளது. சராசந்தன் வழியினர் ஆண்டது, பீகாருக்குத்தெற்கே இருப்பது. இமயத்தின் ஒரு பகுதி.

மேரு - நிடதத்திற்கு வடக்கு. 9000 யோசனைக்கு அப்பால் உள்ள மகாமலை, 3200 யோசனை பரப்புடையது. தேவர் இருப்பிடம், ஒரு சமயம் சிவன் வில்லாய்க் கொண்ட மலை. 1000 சிகரங்களுடையது. வாயு மோத அசைவற்று இருந்தது. நவக்கிரகங்களாலும் மற்ற நக்ஷத்திரங்களாலும் தினமும் வலம்வரப் பெறுவது. வாயு, ஆதிசேடன் இருவரும் பகைமையுடன் தாக்கியதில் வாயுவால் 3 சிகரமிழக்கப்பெற்றது. சாபத்தால் பருக்கைபோல் வாரி எறியப் பெற்றது. இதனுடன் மாருக வளர்ந்த விந்தியம் அகத்தியரால் அழுந்தியது, தெய்வ வடிவானது. உருவம் நான்கு, சிரம், எட்டுத் தோள் கொண்டது, பூமிக்கு அச்சு. உக்கிர குமாரனால் அடியுண்டது. அப்போது பாண்டியனுக்கு இவ்வுருவுடன் வெளிப்பட்டுப் பொன்னறை காட்டியது.

## சிந்தமேந்திரன் மகன் நாகமேந்திரன் மீது பாடிய குயத்தியார்

மைக்கருங்கண் மின்னார்வேள் சிந்தமேந்திரன்
வரபால னும்பெரிய நாகமேந்திரன்
இக்குரசம் பெருகிவரும் பெஞ்சை நாட்டில்
இசைத்தியா ரென்னவரு குசத்தியாரே
கைக்குடமும் பணியாரக் களியுந்தந்து
காதலையு மடக்கி யின்பங் காணேனல்ல
தக்கதிரி கையும்பூட் டிவனை வீராகில்
அத்தகன நகிலைவிலை தந்துகுத்தி வாங்குவேனே. 121

மைதீட்டிய கருமையான கண்ணுடைய மின்னல்போல் தோன்றி மறையும் இடையுடையவள் கேள்வன் மன்மதன்போன்ற சிந்தமேந்திரன் வரத்தால் தோன்றிய குமாரன் பெரியநாகமேந்திரன். கரும்புபோல் சுவைமிக வரும் பெஞ்சை நாட்டில் இசைபாடி வருவார்போல வரும் குசத்தியாரே! கையில்குடமும், பணியாரத்தின் களியும் கொடுத்துக் காதலையும் அதனுள் அடக்கி வைத்த இன்பத்தை நான் காண்பேன், நல்ல தகுந்த சக்கரமும் பூட்டிச் சுழற்றி வணைவீராகில் அதற்கு என்ற விலை தந்து வாங்கு வேன்.

மயக்கம் (காம) இன்பக் களிப்பு.

மைக்கருங்கண் - மையையெழுதிய கருங்கண் - இரண்டாம் வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்கதொகை. கைக்குடம்- கையின்கண் உள்ள குடம். கருங்கண் - பண்புத்தொகை. இக்கு ரசம்-கரும்புச் சாறு. கைக்குடம்-ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கதொகை. பணியாரக் களியுந் தந்து. பழங்காலங்களில் திருமணத்திற்கு வரிசைப் பொருள்கள் அளிக்கும் போது வெல்லப் பாகுவைத்துப் பொட்டுக் கடலையைக் கலந்து பணியாரம் பிடித்துச் சீர்வரிசைவைப்பர்.

பொட்டுக்கடலை இனிப்பற்றது. வெல்லப்பாகு இனிப்புடையது. இனிப்பற்ற (சாரமற்ற உலகில்) இனிப்புடன் இல்வாழ்வு நடத்தத் தொடங்கி ஒன்றுபட்ட மனத்துடன் கணவனும், மனைவியும் கூடி வாழ்ந்து மேம்பட வேண்டுமென்பதற்காக ஒரு பணியாரத்தைப் பெரியதாகவும், மற்றொன்றை முன்னதைவிடக் கொஞ்சம் சிறிய தாகவும் சேர்த்துக் குங்குமமிட்டு வரிசை வைப்பர். அதனைவைத்த உடனே வெல்லப்பாகைத் தின்பதில் ஆசையமைவதுபோல வாழ் விலும் குடும்பம் நடத்துவதிலும் ஆசைதோன்றி இன்பமளிக்கும்.

காதலையு மடக்கிக் காண்பேன் - வேறொருத்தியினிடம் செல்லும் மனதை அடங்கும்படி செய்து தலைவியினிடமே காதல் நிலைத்திருக் கும்படி செய்வேன் என்பது நயம்.

எனக்கு ஏற்பட்ட ஆசையை அடக்கிவைத்துக்கொள்வேன் என்பதும் ஒன்று.

அத்தகை நகிலை விலைதந்து குத்தி வாங்குவேன்—ஏற்றபடி முலை யால் மயங்கும்படிசெய்து விலை தரும்படியாகச் செய்துவிடுவேன். குத்திவாங்குதல் - காலில் முளபட்டால் வேறொரு முள்ளால் முள் ளிருக்குமிடத்தில் குத்தி அங்கிருக்கும் முள்ளைக் கிளறியெடுத்து அவ்விடத்திலிருந்து நீக்கிவிடுவது. அதுபோல் மறைந்துள்ள மனதை இதயத்திலிருந்து பிரித்து எடுத்து என்வசப் படுத்துவேன் என்பது பொருள்.

மேவலார் - பகைவர், மண்மறுக்கம் - மண்ணை ஆளுகின்றேனே என்ற மனப்பகை. கண் மறுக்கமாட்டாமை - தாட்சணியம், கூற்று - உடலிலிருந்து உயிரைப் பிரித்துக் கூறுபடுத்தலின் கூற்று. கூற்றுக்களித்தான் - கூற்றுக்கு அளித்தான் என்றும், கூற்றுகளித் தான் என்றும் பிரித்து ஏற்றபடி பொருள் காண்க.

## பெட்டி வண்டி அனுப்பி வைக்குமாறு வேலப்பனுக்குக் (கடிதப்) சீட்டுக் கவி

ஆசிரிய விருத்தம்

வட்டிணங்கு முலைமடவார் மடலெழுதும்
வேலப்ப மதனு கேண்மோ
தட்டியொன்றுஞ் சொல்லாமற் சடுதியிலென்
மனப்படிக்குச் சதங்கை மாலை
கட்டியெங்கு மதிக்கவல்ல கடின நடை
விடைகளொடு கவின்பெற் றோங்கும்
பெட்டிவண்டி முதல் வரிசை பெரிதருளி
யனுப்புவதுன் பெருமை தானே. 124

சூதாடுகருவி போன்ற முலைகளையுடைய மகளிர் (மடல் எழுதும்) கடிதமெழுதும் மன்மதன் போன்ற வேலப்பனே கேள். தடையொன்றும் கூறுமல் விரைவாக என்மனதுபோல் சதங்கை மலர்மாலையொன்றைக் கட்டி, எல்லாரும் மதிக்கும்படி வேகமாக நடக்கக்கூடிய காளைகள் பூட்டப்பெற்ற பெட்டி வண்டி முதன்மை யான வரிசைப் பொருளாய் அனுப்பிவைப்பது உனக்குப் பெருமையேயாம்.

வட்டிணங்கு முலை - முலைக்கு வட்டு உவமை. வட்டு-சூதாடு கருவி – "அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய - நூலின்றிக் கோட்டி கொளல்" (குறள் - கல்லாமை 1) வட்டன்ன மென்முலையாள்" மடல் - கடிதம். மதனு - மதனன் என்பதன் விளி, கேண்மோ-மோ முன்னிலையசை எனக்கொள்க. "மியா யிகமோ மதி அத்தை" (நன்-இடையி.21). தட்டி – தடை, சடுதி - விரைவில். கடின நடை விடைகள் - மிகவும் வேகமாகப் பாய்ந்து நடக்கவல்ல காளைகள். பெற்று + ஓங்கும் பெற்றோங்கும்.

"வரிசை பெரிதுதவி வரிசை யறிதலோ அரிதே".

## மலை வலை—சிலேடை

வெண்பா

வடமு மடுக்கும் மருவு முளையும்
உடையகுறிப் பன்றியுமே லோங்கும் - நெடிய
கலைபயில் வேலப்ப! கொடைக்கண்ணன் சபையில்
மலையை நிகர்க்கும் வலை, 125

பலகலைகளையும் பயில்கின்ற வேலப்பனே. கொடைக் கண்ணனது சபையில்,

வடமும் 1. வாசுகி என்ற பாம்பைக் கயிருகக் கொண்டு கடைய அடுக்கடுக்காகச் சுற்றப்பட்டிருக்கும். 2. செம்படவர் மீன் பிடிக்கும் வலையில் வெகு தொலைவிலிருந்து மீன் சிக்கிய வலையை யிழுக்க வடத்தோடு கூடியிருக்கும்.

அடுக்கும் 1. பக்கமலையுடையதாக இருக்கும். 2. வலை அடுக்கடுக்காக அல்லது கட்டங்கட்டமாகப் பின்னப்பட்டிருக்கும்.

மருவு முளையும் 1. மருது முதலான மரங்கள் முளைக்கும். 2, வலை வீசும்போது பக்கங்களிலெல்லாம் துழாவும்.

உடைய குறிப்பன்றியுமேலோங்கும் 1. தன்னளவில்லாமல் மேலே வளர்ந்துகொண்டே செல்லும். 2. வலையையுடைய செம்படவர் வீசும் குறிப்புக்கேற்றபடி மேலாக வீசுமளவுக்குச் சென்று விழும், அதனல் மலைக்கு வலை ஒப்பாம்.

மருவு - மரு மருக்கொழுந்து எனவும் கொள்க. குற்றம் எனக் கொண்டால் – ஆலகால விடம் தோன்றும் எனவும் படும். நெடிய கலைபயில் சபை - கலைகளைப் பற்றி எப்போதும் பேசிக் கொண்டேயிருக்கும் சபை. குறிப்பன்றி - வேடுவர் குறிவைத்து அம்பு எய்வதற்கு ஏற்ற காட்டுப் பன்றிகள் மலைகளில் வாழும்.

## இராகம்

### பெரிய இராகம் முப்பத்திரண்டு

வல்லகாம் போதியொடு சாவேரி கல்யாணி
மாஞ்சிநவ ரோசு கவுளம்
மத்தியமா வதிநாட்டை யாரபி வராளியாம்
வயிரவி முகாரி காபி
சொல்லும்சவு ராஷ்டகஞ் சாரங்க மாகிரி
தோடிபே கடைகு றிஞ்சி
சுருட்டிகம் பாவதி பிலாரி பூர்வியிசை
துசாவந்தி வான மளவி
யொல்லுநீ லாம்புரி சங்கரா பரணமுட
னுதய ராகம் மோகன
முகாரிமலை கிரிலளிசை பருசுதெட் டாசியுட
ஞேசை பெறுமே காஞ்சி
நல்லஸ்ரீ ராகமொடு கவுரிகண் டராகம்
நயமிகுந் துரையட் டாணு
நாடுகுண் டக்கிரிகை மங்கள செயம்பெரிய
ராகம்முப் பத்தி ரண்டே. 126

## கோழியின் குணம்

வெண்பா

யாம மறிதல் எதிர்த்தல் பகைவெல்லல்
காம நலமுண்ணல் காலமறிந் – தேமன்னு
வஞ்சித்த லிந்நான்கும் வாரணத்திற் குற்றகுணங்
கொஞ்சமெனத் தள்ளாமற் கொள். 122

ஒவ்வொரு சாமம் இதுவென்று அறிந்து கூவுவது, தன்னை யெதிர்த்த பகையைவெல்லுவது, காம இன்ப நலம் நுகர்வது, தக்க சமயமறிந்து வஞ்சித்தல் ஆகிய இந்த நான்கும் கோழிக்குப் பொருந்திய குணம். இவை கோழியினிடத்தில் உள்ள கொஞ்சமான குணம் என்று அலட்சியம் செய்யாமல் கொள்க.

யாமம் 3 மணி கால அளவு, ஒரு சாமம் எனப்படும். 3 மணிக்கு ஒருமுறை கூவிப்பொழுதை அறிவித்துக்கொண்டே யிருக்கும்.

பகைவெல்லல் : இரு கோழிகள் ஒன்றோடு ஒன்று சண்டை யிடத்தொடங்குமானால் விரைவில் தம் சண்டையை முடித்துக் கொள்ளா. கடைசிவரை தம் பகைமையை முடித்துத்தன் வெற்றியை நிலைநாட்டவே முயலும். இதனைப்பற்றித் தொல்காப்பியம், புறப் பொருள் வெண்பாமாலை ஆகிய நூல்களில் கோழிவென்றி என்ற தலைப்பில் பேசப்படுகின்றன.

போர்வீரர் படைவீடுகளில் தங்கிப் பொழுதுபோக்கும்போது கோழிகளை ஒன்றோடொன்று சண்டைக்குவிட்டு அவற்றைக்கண்டு இன்புறுவர். இம்முறை இக்காலத்திலும் கிராமப்பகுதிகளில் சிற்சில இடங்களில் நிகழ்வதாக அறியவருகிறது.

காமநலமுண்ணல் – கோழிகளுக்கு இன்பநுகர்வதில் விருப்பம் மிகுதியுண்டு என நூல்கள் கூறும்.

வாரணம் – பலபொருளொருசொல். (நன்னூல். உரிச்சொல்)

## மகதேசன் மீது இரங்கற்பா.

வெண்பா

யாவையும் யாவற்கு மீவதுபோற் றன்னுடைய
வாவியங் கூற்றுக் களித்தானே – மேவலார்
மண்மறுக் கங்கொண்ட மகதேசன் வொண்ணொரு
கண்மறுக்க மாட்டாமை கற்று. 123

பகைவர் கொண்ட மனப்புழுக்கத்தால் போரிடவர, மகதேசன் வாணனாகி ஒரு சிறிதும் மறுத்துக்கூற முடியாமையால், எல்லாம் கற்று வல்லவர் வந்து கேட்க அளிப்பதுபோல், தன் உயிரையும் இயமனுக்கு அளித்தான்.

1. காம்போதி - 28வது மேளகர்த்தா. ஹரிகாம்போதியில் ஜன்யம்.

2. சாவேரி - 15வது மேளகர்த்தா. மாயாமாளவ கௌளத்தில் ஜன்யம்.

3, கல்யாணி - இதன் முழுப்பெயர் மேஷகல்யாணி. 65வது மேளகர்த்தா.

4, மாஞ்சி - 20வது மேளகர்த்தா. நடபைரவியின் ஜன்யம்,

5. நவரோசு. 29வட மேளகர்த்தா. சங்கராபரணத்தின் ஜன்யம்

6. கவுளம் - 15வது மேளகர்த்தா. மாயாமாளவ கௌளம் ஜன்யம்.

7. கவுளம் • மாயாமாளவ கௌளம்.

8, மத்யமாவதி-22வது மேளகர்த்தா. கரஹரப்பிரியா ஜன்யம்.

9. நாட்டை-36வது மேளகர்த்தா. தீரசங்கராபரணம் ஜன்யம்.

10. ஆரபி - 29வது மேளகர்த்தா. தீரசங்கராபரணம் ஜன்யம்.

11. வைரவி - (பைரவி) 20வது மேளகர்த்தா. நடனபைரவி ஜன்யம்.

12, முகாரி-22வது மேளகர்த்தா, கரஹரப்பிரியாவின் ஜன்யம்.

13. காபி-22வ்து மேளகர்த்தா, கரஹரப்ரியாவின் ஜன்யம்.

14. சௌராஷ்டிரம் - 17வது மேளகர்த்தா. சூரிய காந்தம் ஜன்யம்.

15. சாரங்கம் - 65வது மேளகர்த்தா. மேஷ கல்யாணி ஜன்யம்.

16. தோடி - 8வது மேளகர்த்தா. மேஷ கல்யாணி ஜன்யம்.

17. பேகடா · 29வது மேளகர்த்தா, தீரசங்கராபரணம் ஜன்யம்.

18, குறிஞ்சி - 29வது மேளகர்த்தா. தீரசங்கராபரணம் ஜன்யம்.

19. சுருட்டி - 28வது மேளகர்த்தா. ஹரிகாம்போதி ஜன்யம்.

20. கம்பாவதி-காம்போதி 28வது மேளகர்த்தா. ஹரிகாம்போதி ஜன்யம்.

பேகடா, சுருட்டி - இரண்டும் ஹரிகாம்போதியின் ஜன்யம். ஆதலால் ஒரு தாய் வயிற்றுப் பிறந்த மக்கள் போல ஆகும்.

**குறிப்பு :**

(இந்த ராகங்களுக்கு மேளகர்த்தா ஜன்யராகங்களை எழுதியுதவி யவர். திருவாளர்- கரூர் நடேச பாகவதரவர்கள்).

21. பிலஹரி - 29வது மேளகர்த்தா - தீரசங்கராபரணம் ஜன்யம்.

22. பூரி -• பூர்வி) 15வது மேளகர்த்தா, மாயா மாளவ கௌளை ஜன்யம்.

23. துவிசாவந்தி-28வது மேளகர்த்தா ஹரிகாம்போதி ஜன்யம்

24. நீலாம்புரி-29வது மேளகர்த்தா. தீரசங்கராபரணம் ஜன்யம்.

25. சங்கராபரணம் - 29வது மேளகர்த்தா. தீரசங்கராபரணம் ஜன்யம்.

26. உதயராகம்-(பூபாளம்) 15வது மேளகர்த்தா, மாயாமாளவ கௌளை ஜன்யம்.

27. மோகனம்-28வது மேளகர்த்தா. ஹரிகாம்போதி ஜன்யம்,

28. ஸ்ரீராகம் - 22வது மேளகர்த்தா கரஹரப்ரியா ஜன்யம்.

29. கௌளி 15வது மேளகர்த்தா. மாயாமாளவ கௌளை ஜன்யம்.

30. கானடா - 22வது மேளகர்த்தா. கரஹரப்ரியா ஜன்யம்.

31. அடாணு - 29வது மேளகர்த்தா. தீரசங்கராபரணம் ஜன்யம்.

32. குண்டக்ரியா - 15வது மேளகர்த்தா. மாயாமாளவ கௌளை ஜன்யம்.

**குறிப்பு :**

இந்த இராகங்களுக்கு (20 - 32) மேளகர்த்தா, ஜன்யம் எழுதியுள்ளவர் திருமதி. ஆர். வஸந்தா அவர்கள். (ஆசிரியை P. S S. H. S. School, Madras-4.)

**கங்காகுலர் மீது பாடிய**

கட்டளைக் கலித்துறை

வருவோரைக் கண்டு தடுமாறி
 யுள்ள மலைந்துநித்தம்
வெருவோரைப் பாடிற் பயனிலை
 காண்வைய மேற்புகழை
மருவூர்கங் காகுலர் வாழ்கின்ற
 வூர்மணி மாளிகைசூழ்
திருவூரைப் பாடிற் புலவீர்
 மிடிப்பிணி தீர்ந்திடுமே 127

இவர் கொடுப்பார் என்று எண்ணி வருபவரைப் பார்த்து, இவர் வந்துவிட்டாரே என்ன செய்வது? என்று மனநிலை மாறிக் கவலைப் படுவோரைப் பாடினால் பயனில்லை என்பதை அறியுங்கள். உலகில் புகழ் விளங்கும் மருவூர் என்ற பெயருடைய ஊரில் கங்கா குலத்தில் தோன்றி வாழ்கின்ற (ஒப்பற்ற கதவுகளில் மணிகள் பதிக்கப் பெற்று, (அதை மூடித்திறக்கும்போது அசைந்து ஒலிக்கும்) மாளிகை சூழ்ந்துள்ள (இலக்குமி கடாக்ஷம் மிக்க) திருவூரைப் பாடினால், புலவர்களே! வறுமை நோய் நீங்கிவிடும்.

இவன் அள்ளி (வறுமை நீங்குமளவு அளிப்பான் என்பது கருத்து. கங்கா குலம் - பாடப்பெற்ற பிரபுவின் குடும்பப் பெயர். சில குடும்பங்களில் அக்குடும்பங்களுக்கு என்று தனிப்பெயர் வழங்கப்படும். தெலுங்கு நாட்டில் இன்றும் இம்முறை வழங்கக் காணலாம். அதனை இல்லு - இன்டி பேரு) என்பர்.

கோயில் கதவுகளில் மணிகள் பொருத்தப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம். அதுபோலவே செல்வம் மிக்கவர், அரசர், போன்றோர் அரண்மனைகளில் உள்ள கதவுகளில் மணிகளைப் பொருத்தியிருப்பர்.

மடிப்பிணி - உருவகம், மிடி - வறுமை. வெருவோர் - பயப்படுவோர்; வெருவுவோர் என்பது, இடைக்குறைந்து நின்றது.

## பிரிவுக்குடன் படாமை

### கட்டளைக் கலித்துறை

வழக்கன்று நீயெங்கண் மான்கன்றை
வாட்டுதன் மன்னரெல்லாந்
தொழக்கன் றியபதச் சோழேந்திர
ராசுரந் தாவசைக்க
முழக்கன்று கேட்டுச் செவிப்புகா
முன்மூரண் டேரிற்செற்ற
குழக்கன்றுக் காகக் குலக்கன்றை
யூர்ந்திட்ட கொற்றவனே. 128

அரசர்கள் அனைவரும் தொழுதலாற் சிவந்துபோன பாதங்களை யுடையவனே! சோழர்களுள் இந்திரன் போன்றவனே! பசு கண்ணீர் சுரந்து நாவினால் மணியின் ஓசை யெழுப்ப நடந்ததை யறிந்து இறந்துபின் கொட்டும் பறை அன்று காதால் கேட்பதற்கு முன்பே, வலிமையுடைய தேரில் கோபத்தால், இளமை யான கன்றுக்காகத் தேர்க்காலில் அகப்பட்டுக் கொண்டமைக் காக,தனது குலத்தில் தோன்றிய கன்று போன்ற மகனை,தேர்க்காலில் கிடத்தி வெற்றி பொருந்திய மநுநீதி மன்னன் வழிவந்தோய்! நீ எங்கள் குலத்தில் மான்போலும் பார்வையையுடைய துள்ளி விளையாடும் நடையுடைய பெண்ணை மனம் வாடச்செய்தல் சிறந்த வழக்கமாகாது.

தலைவி இறக்குமுன்னர் குறித்த காலத்தே வந்து தலைவி உயிர் போகாமல் காக்க என்றதனால் தோழி பிரிவுக்கு உடன்படாமை உணர்க.

**சீட்டுக்கவி**

விருத்தம்

துறட்டிலே வந்துவலி யச்சருவி னோர்களைத்
தூண்டியிற் போடு முரவோன்
துர்மார்க்க ராதிபதி வசக்கவிதை யாண்டான்
துரைச்சிங்க மெழுது நிருபம்
வறட்டியுங் கேழ்வரகுங் ரொட்டியும் போலவே
வற்றி யொட்டிய வல்குலாய்
வல்லைமா நகர்மேவு தம்பிக்கை யாளெனும்
வம்பியெதிர் கொண்டுகாண்க
முறட்டுப் பெருந்தடிச் சடகோபன் னுன்மீதில்
மோக லாகிரி மீறியே
மோடிசேர்ந் திடுநினது பாதமேக தியென்று
முற்றுமுனை நம்பிவந்தான்
பறட்டுப் பறட்டென் றடித்தவன் றண்டிலே
பழுதொன் றும்வா ராமலே
பையவே மேலேறி யிதமாக மைதுனம்
பண்ணி வரவிடல் வேண்டுமே. 129

சாணத்தால் தட்டிக் காயவைத்த வறண்டுபோன வறட்டியும், கேழ்வரகும், ரொட்டியும்போல் வற்றிச் சுருங்கி அடங்கிய நிதம்பத்தை உடையவள். வல்லைமாநகரின்கண் பொருந்திய வம்பி விடுத்துள்ள கடிதத்தை எதிர்கொண்டு காண்க. முரட்டுத்தனமுடைய சடகோபன் உன்மேல் ஆசைமீறி (மோடி வாசிக்கும்போது அடங்கிக் கிடக்கும் பாம்புபோல) சேர்ந்து உன் பாதமேகதியென முழுவதும் உன்னை நம்பி வந்துவிட்டான். பறட்டுபறட்டு என்று அடித்து அவனது ஆண்குறியில் எதுவும் துன்பம் நேரிடாதபடி பக்குவமாக மேலேயிருந்துகொண்டு கூடி இன்பமநுபவித்து வர விடுக.

இது இன்பமனுபவிக்க வேண்டிய வகை கூறுவதாக உள்ள பாடல். இது குறிப்பும் வெளிப்படையும்.

வறட்டி - சாணத்தால் தட்டப்படுவது; விரட்டி - எனவும் சொல்லப்படும். வெய்யிலில் ஈரம் வறண்டு போவதனால் வறட்டி எனக் காரணப் பெயர்.

**கண்டுஞ்சாமை**

வெண்பா

வாடை குளிர மகிழ்ந்தருள்வா ரில்லையோ
கூடல் இனியொருநாள் கூடாதோ - ஓடை
மதவா ரணத்துதயன் வத்தவர்கோன் வாசற்
கதவான தோதமியேன் கண் 130.

நெற்றிப்பட்டம்உள்ளதும் மதநீர் பெருகுவதுமான மத்தகத்தையுடையயானை மீது தோன்றும் வத்தவர் தலைவன் வாசற் கதவால் தனியாளவளான தலைவியின் கண், வாடைக்காற்றின் குளிர்ச்சியால் தவிக்கும் தலைவிக்கு மகிழ்ச்சியுடன் இரங்கி அருள்பவர் இல்லையா? தலைவனுடன் கூடுவது என்பது ஒருநாளும் ஏற்படமாட்டா.

ஏனெனில் பிரிந்த தலைவன் வருவதற்குள் அவன் பிரிவை ஆற்ருது இறந்து படுவாள்; தலைவன் அவளுடன் வந்து எப்படிக் கூட முடியும் என்பது குறிப்பு.

இறந்தவர் கண்கள் உடனே மூடப்படாவிடின் மூடிக் கொள்ள மாட்டா. தலைவியும் தனிமை தாங்காது இறந்து பட்டு விடுவதால் தலைவன் வந்தும் பயனில்லை என்றபடி,

கூடல் என்பது மகளிர் தாம் நினைத்த தலைவனை அடைய இயலுமா என்று சோதித்துத் தாமேயும் பார்ப்பார்கள். குறி சொல்ல வரும் குறத்தியரிடமும் கேட்டுப் பார்ப்பதும் உண்டு. வாடை — வடக்கிலிருந்து ஐப்பசி கார்த்திகை, மார்கழி தை மாதங்களில் வீசும் காற்றுக்குப் பெயர்.விரைவில் வருவேன் என்று கூறிச் சென்ற தலைவன் சொன்னபடி வராமல் காலம் தாழ்த்தும் போது, பிரிந் திருக்கும் தலைவியை வருத்தும் இயல்புடையது. தலைவனிடமிருந்து மாலை பெறுவதும் வழக்கமுண்டு, தூதுவர் மூலம் பெறக் கால தாமதமேற்படும் போதும் தலைவி வருந்தியிருப்பதும் உண்டு. கூடா தோர் – மனக் கருத்தால் ஒன்று கூடாத பகைவர், கல்வி, பொருள் தேடல் பிரிவு, தூதுக்காகப்பிரிவு என்றவற்றுள் இது பாகைவயின் பிரிவின் பாற்படும்.

தலைவன் வருவான் வருவான் என்று கதவு ஓரமாகக் காத்தி ருந்த தலைவி கதவாகவே ஆகிஅவன் வரவையேபார்த்துக் கொண்டி ருந்தமையால் 'கதவானதோதமியேன் கண்'என்ருர். தன் கண்வேறு கதவு வேறு என்கின்றநிலையின்றி இரண்டும் ஒன்ருகவே ஆகிவிட்ட தாகக் கூறுதல் நயம். மேற்கோள் – வாசற் கதவு. "கதவு திறந் திடுமின்" நன்னூல் மேற்கோள். (சூ. 415).

## தலைவியை யாற்றுவித்தல்

வெண்பா

வாடையென் ருல்வெம்பு மேமான பரனபயன்
கோடையென்ரு லுள்ளங் குளிருமே – நீடு
செழுந்தோட்டு வள்ளையின்மேற் செங்கழு நீர்வந்து
கொழுந்தோட்டு மெங்கள் கொடி. 131

நீண்ட வளமையான இதழ்கள் மிக்க வள்ளைக்கொடியின் மேல் செங்கழு நீர் வந்து (அல்லது) கொழுந்தினைப் போல் வளரும் எங்கள் கொடி போல்வாளான தலைவி, வாடைக் காற்று என்ருல் தலைவன் பிரிவால் உடல் வெதும்புவாள். பெருமையமைந்த சிறந்த அபயன் என்ருலே, கோடை வந்தது என்று உள்ளம் குளிரு வாள்.

இயல்பாக வாடை குளிரச் செய்வதும் கோடையில் வெதுப்புவதும் இயற்கை. ஆனால் அதற்கு நேர்மாறாகத் தலைவியின் இயல்பு அமைந்துள்ளமையால் எதிர் நிரல்நிறைஅணி. வள்ளை ஒரு கொடி. ஓடிப் படர்ந்து வளரும் இயல்புடையது. வள்ளையின் மேல் செங்கழுநீர் வந்துகொழுந்து ஓடுவது என்பது நயம். வள்ளை, செங்கழு நீர்-மருத நிலக் கருப்பொருள்கள். செழுமை + தோடு செழுந்தோடு. கொழுந்தோடு கொழுந்தோட்டு கொழுந்து+ஓட்டு. கொடி உவமையாகு பெயர்.

அயலைப் பிரிந்த போது வாடை வெதுப்பும், அயன் என்றதுமே கோடையாயினும் உள்ளம் குளிரும். வெம்புவது உடல், குளிர்வது உள்ளம் இது நயம். "கோடை" என்பதிலும், 'வள்ளை என்பதிலும் உள்ள ஐகாரங்களைக் குறுக்கங்களாகக் கொள்க.

### தலைவன் வாராமைக்கு இரங்கல்

வெண்பா

வாரமென்று சொல்லி வருகையிலே யுந்தனுக்குச்
சாரே குறுக்கே தடையாச்சோ - வேறே
பொன்னைக் குடுத்த புகழன் தடுத்தானோ
என்னைமறந் தாயோ இனி. 132

வருகிறோம் (அன்பால்) என்று கூறி வரும்போது உனக்குச் சாரைப் பாம்பு குறுக்கே தடையாக நின்று அமைந்ததோ? மற்ற பொன்னைத் தந்த புகழுடையான் 'என்னிடம் சொல்ல வேண்டா' எனத் தடுத்துக் குறுக்கே நிறுத்தினானோ? என்னிடம் வர மறந்து போய் விட்டனையோ? இனி என்னிடம் வரவே மாட்டாயோ?

ஆயிற்றோ என்பது ஆச்சோ - உலக நடையாக அமைந்தது. பாம்பு குறுக்கே செல்வது சகுனத் தடை என இப்பாடல் உணர்ந்தாதிற்கும். வருகிறோம் என்பதை வாரம் என்பர். வாறம் என்று மதுரை இராமநாதபுரம் பக்கத்தில் கூறுவது வழக்கம்.

### சூரியனுக்கும் - பேனுக்கும், சிலேடை

வெண்பா

வாருந் தலையுற்று வானகத்தி லேபொருந்திச்
சேருங் கரத்தாற் றிரியுமே - கானகத்தில்
ஆரும்வள்ளி யைச்சேரு மாறுமுகன் தன்னாட்டில்
சூரியனைப் பேனெனவே சொல். 133

காட்டில் பொருந்திய வள்ளியைக் கூடும் ஆறுமுகன் நாட்டில், பேன்:- சீப்பால் வாருபவர் (மிக மேலான இடமான தலையிலே இருந்து கைகளில் அகப்பட்டுக்) சொடுக்கப்பட்டு அழிந்து இறப் பெய்திச் சேர்தலால் நிலை மாறிவிடும். அழித்து விடும்.

சூரியன்:- கிழக்கே தோன்றி, உச்சி வந்து ஆகாயத்தே விளங்கி மாலைக்குப் பின், தன் கிரணங்களுடன் (இருள் வரத் தொடங்கியதும்) தான் ஒளி கொடுப்பதிலிருந்தும் மாறி விடும் அதனால் சூரியனைப் பேன் என்று சொல்க.

காட்டில் பொருந்திய வள்ளியம்மையைச் சேரும் ஆறுமுகன் நாட்டில் சூரியனைப் பேன் என்று கூறுக. கரம் - கை.

## ஏழுவகைத் தோற்றம்

வானவரே தவமுடைய ராகி வாழ்வார்
மனிதரே மனிதர்குண மாகி வாழ்வார்
ஆனகுல விலங்காகி லகந்தை யாவார்
அகலரிய பறவை யெய்யக் கன்றுபோவ
ரீனமிலாத் தாபரங்கள் அறியார் யாவு
மிடுவாரை யிகழ்ந்துரைப்போர் நீர்வாழ் சாதி
மானமின்றிக் கையேற்பர் ஊர்வா யாளர்
வகுத்ததொரு குலத்தொழிலின் வண்மைதானே
134

தேவரே தவ முடையவராய் வாழ்வார்கள். மனிதர்களே மனித குணமுடன் வாழ்வார்கள். குலத்திலே விலங்காக ஆவாரானால் கர்வமுடன் இருப்பர். அகல்வதற்கரிய பறவையை அம்பால் எய்யக் (கன்று) கோபித்துப் போவார்கள். தாழ்வில்லாத தாவரங்கள் போல் வார் ஒன்றும் அறியாதவர்கள். எல்லாம் பிறருக்கு இடுபவரை இகழ்ந்து கூறுபவர்கள், நீர் வாழ் சாதியைச் சார்ந்தவராவர். வெட்கமில்லாது பிறரிடம் கை நீட்டிப் பிச்சை கேட்பவர் ஊர்வன வாகிய சாதியைச் சார்ந்தவர் ஆவார். வகுத்துக் கூறப்பட்ட ஒரு குலத்தொழிலின் வன்மைத் தன்மையால் இவ்வாறெல்லாம் மாறு படுவார்கள்.

"தக்க வின்ன தகாத வின்னவென்று
ஒக்க வுன்னலராயி னுயர்ந்துள
மக்க ளும்விலங் கேமனு வின்னெறி
புக்க வேலவ் விலங்கும் புத்தேளிரே" (கம்ப. வாலிவதைப் 112).

## விதியின் பயன்

அறுசீர்விருத்தம்

விதியின் பயனை விலக்க வென்று
விரும்பி யொருவன் முன்னுளில்
கதியத் தலையைத்தான் சிரைத்த
கன்று பிழைத்துபோ வமென்று
சதிகள் வருவத றியாமல்
தாழை நிழலிற் போயிருந்தான்
விதிதான் மொட்டைத் தலைதனிலே
விழுமாம் பனையின் கனிதானே. 135

பழைய வினைப்பயனை நீக்கிக்கொள்ள வேண்டுமென்று விரும்பிய ஒருவன் முன்பு தலைச்சவரஞ் செய்துகொண்டு பிழைத்துக் கொள்ளலாம் என எண்ணிப் பின்னுல் விதியின் சூழ்ச்சிகள் வருவதனை அறிந்து கொள்ளாமல் தாழை மரநிழலில் சென்று நிழலுக்காகத் தங்கியிருந்தான். அப்போது பழவினைப்படி பனம்பழம் ஒன்று அவன் தலைமேல் விழுந்தது. அதனுல் அவன் ஆவி உடலிலிருந்து பிரியக் காரணமாக இருந்தது.

விதியின் பயனை விலக்க வென்று —
"இதுவோ விதித்த விதியே" (அரிச்சந்திர புராணம்)
"தெய்வத்தா ளுகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்" (குறள் 619).

சதி – பிறரறியாமல் செய்யும் சூழ்ச்சி. "தாழை நிழலில் போயிருந்தால். தலையில் பனையின் கனி விழும் என ஆதரவு தேடி நின்றது ஓரிடம், விதி சூழ்ந்தது பனையின் கனியை வீழ்த்தி." "நாமொன்று நினைக்கத் தெய்வ மொன்று நினைக்கும்" "ஊழிற் பெரு வலியாவுள மற்றென்று, சூழினும் தான்முந் துறும்" (குறள். ஊழியல்).

## பிள்ளையவர்கள் பாடிய

அறுசீர் விருத்தம்

சீர்பூத்த வெண் குணத்தா லைமுகத்தாற்
றிருவருள்சேர் திறத்தா லென்று
நீர்பூதத கங்கையினு லூறுமதியால்
மானிடத்தால் நிலவார் மன்றில்
நார்பூத்த அருமகிழப் பலதூக்கு
நடத்தலினுல் நடனத் தேவா
மேர்பூத்த மீனுட்சி சுந்தர . . . .
. . . . நா வலவ ரேறே. 136

தில்லைவிடங்கன் வேலுப் பிள்ளை என்பார்க்கு 'வெண்பாப் புலி' என்ற பட்டம் வழங்கும் பொழுது பாடியது.

அழகிய எட்டுவகைக் குணங்களால், அழகிய முகத்தால், லக்ஷ்மீ கடாக்ஷம் சேர்ந்திருக்கும் காரணத்தால், எப்போதும் நீர் நிறைந்த கங்கையைக்கொண்டு விளங்கலால், பொருந்திய சந்திரனை யுடைமையால், (அறிவுடைமையால்) மானிடத் தன்மை பெற்றமையால், ஒளிவிடும் சபையில் அன்புடன் மிகவும் மகிழுமாறு செய்யுட்களை இயற்றும் திறம் உடைமையால், நடராசப் பெருமா னுக்கு ஒப்பாவாய் என்று மீனாட்சிசுந்தரம் பிள்ளையாகிய யான் கூறுவேன்.

## நல்ல குரல் பெற மருத்துவம்

கலிவிருத்தம்

சுக்க டாகடுக் காயுடன் திப்பிலி
ஒக்க டாவா லுளுவை யரிசியும்
நக்க டாவொரு மண்டலந் தேனுடன்
அக்க டாகுர லாரியம் பாடுமே. 137

சுக்கு கடுக்காய் திப்பிலி மூன்றையும் ஒன்று சேர்த்து ஒளி வீசும் உளுவையரிசியும் ஒரு மண்டலம் (49 நாட்கள்) அல்லது 51 நாட்கள் தேனுடன் கூட்டிச் சேர்த்து நக்குக. குரல் ஆரியம் பாடும். அதனால் வேதாத்தியயனம் செய்யலாம். இது வைத்தியம் பற்றிய பாடல்.

## தொண்டை நாட்டுப் புதுமை பற்றிக்

கட்டளைக் கலித்துறை

செங்கழு நீர்நற் றிருத்தணிக் கேதினம் பூப்பதுவும்
நங்கழுக் குன்றத்திற் சம்பாதி கள்நித்தம் நாடுவதும்
பங்கய வாவி பழுவூர்க் கிணறுகள் பாற்கடல்போற்
பொங்கிப் பொழிவதுந் தொண்டை நாட்டுப் புதுமையிதே. 138

செங்கழுநீர் மலர் ஒவ்வொரு நாளும் நல்ல திருத்தணி முருகனுக்குச் சாத்துவதற்காகப் பூத்து மலர்வதும், திருக்கழுக் குன்றத்தில் சம்பாதி என்ற கழுகுகள் தினமும் தேடி வந்து உணவு உண்பதுவும், திருப்பழு வூரில் உள்ள பங்கயவாவி என்ற பெயருடைய குளத்திலுள்ள கிணறுகள் பாற்கடல் போல் மேலே வழிந்து நீர் பொங்குவதும் ஆகிய செயல்கள் தொண்டை நாட்டில் தோன்றும் புதுமையாம்.

தொண்டீர நாடு - தொண்டை நாடு. **திருத்தணி** - முருகன் ஆறுபடை வீடுகளுள் ஒன்று. **திருக்கழுக்குன்றம்** - செங்கல் பட்டு மாவட்டத்திலுள்ள சிவ க்ஷேத்ரம். மஹாபலிபுரத்திலிருந்தும் செங்கற்பட்டிலிருந்தும் செல்லலாம். மலை மேலும் மலையின் கீழும் ஆலயங்கள் உள்ளன.

மலைமேல் இன்றும் பண்டாரம் இறைவனுக்கு நிவேதனம் செய்த அன்னத்தை வைக்கும்போது தினமும் இரு கழுகுகள் வந்து உண்ணும் வழக்கம் இருப்பதை நேரில் சென்று தரிசிக்கலாம். 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை இவ்வூரிலுள்ள திருக்குளத்தில் சங்கு புறப்படுவதாக ஐதீகம். மலைமேல் இறைவன் வேதபுரீசர், இறைவி: மலைச்சொக்கநாயகி; தீர்த்தம்: சங்குதீர்த்தம்; தலவிருட்சம் - வாழை.

மலையடிவாரத்தில் இறைவன் - பக்தவத்சலர், இறைவி - திரிபுரசுந்தரி.

"கடலொலிய தான மறை தமிழ்க ளோடு
கதலிவன மேவு பெருமாளே" (திருப்புகழ்)

## விஜயரகுநாதன் மீது பாடியது

செங்கோல் செலுத்திச் செகம்புரக்கு முன்னுடனே
பங்கேர் மதனுன் படைப்போர் தனித்திலையே
எங்கோ னெனவந் திணங்காத வரைவெல்லும்
வெங்கோப முத்து விசயரெகு நாயகனே. 139

எம் தலைவன் என்று எண்ணி மனமொப்பாதவரை வெல்ல வல்லவன். கொடிய கோபமுடையவன்; முத்து விசயரகு நாயகன். செங்கோலுடன் நன்கு உலகாளும் உன்னுடன் அழகான மன்மதன் படைகளுடன் போரிடும் போர் தணியவில்லை.

தலைவி ஒருத்தி முத்து விசயரகுநாத நாயகன்மீது கொண்ட காதல் தணியவில்லையென்று பாடுவதாக உள்ளது இப்பாடல். பிரபுக்களைப் பாடும் வகையில் அமைந்த பாடல் இது.

முத்து விசயரகுநாத நாயகன்-சேதுஅணைக் காவலாளிகளாக இராமனால் நியமிக்கப்பட்ட வழியினருள், கிழவன் சேதுபதியின் இளைய மகன். மருமகன் என்பர் ஆராய்ச்சியாளர். இயற்பெயர்: உடைய தேவர், விஜயதசமியன்று முடிசூடியவர். இவரது தாய் பெயர் கோசலை என்பதுபோலும்!

இவர்மீது, சொக்கநாத கவிராயர், "பணவிடு தூது" என்ற நூல் இயற்றியுள்ளார். 1710–1720 வரை பத்து ஆண்டுகளே ஆண்டார். இராமேச்சுரம் கோவிலுக்குப் பல திருப்பணிகளைச் செய்த பெருமையுடையவர்.

சகம் என்பது செகம் எனப் பல இடங்களில் பயன்படுத்தப் பட்டுள்ளது. பிற்காலப் பாடல்களாதலின் இவ்வாறு காணப்படு கின்றன போலும்.

### உண்ண அசனம் வேண்டல்

வெண்பா

செந்நெ லரிசிச்சோறு சீராவி னெய்வார்த்துப்
பன்னி நிறையசனம் பண்ணவே – முன்னமே
யொட்டிட்டுச் சுட்டமா னுப்புக் கடைஞ்சுட்டு
தட்டிப்பிட் டிட்டுண்ணத் தா. 140

செந்நெல்லின் அரிசிச்சோற்றையும் சிறந்த பசுவின் நெய்யையும் ஊற்றிக் கலந்து உட்கார்ந்து நிரம்ப மிகுதியாக மக்கள் உண்ண, முன்பே ஓட்டிலே (மண் சட்டியிலே) இட்டுச் சுடவைத்த மானின் மாமிசத்தை உப்புச் சேர்த்துக் கடைந்து பிறகு, தட்டிப் புடைத்த பிட்டை உண்ணும்படி எனக்குத் தருக.

### சாமி ஐயங்கார் மீது பிச்சுவையர், பாடிய

வெண்பா

செந்தமிழோர் சூழுமிடம் செந்திருமின் வாழுமிடம்
அந்தணர்க ளன்ன மருந்துமிடம் - சுந்தரஞ்சேர்
நாந்தகமின் மேவுதிரு நாரா யணசாமி
ஏந்த லிருக்கு மிடம். 141

சிறந்த தமிழறிஞர் பரிசு பெறவந்து சூழும் இடம்; செந்தாமரை மலரில் வாழும் இலக்குமி இருப்பிடம்; பிராம்மணர்கள் வந்து கூடி உண்ணுமிடம்; அழகான பெருமையான மின்னல் போலும் இடையுடைய மகளிர் செல்வத்தால் சூழப்பட்ட சீமானுன நாராயணசாமி என்ற ஏந்தல் (ஆண் மகன்) இருப்பிடமாம்,

புலவர்களை ஆதரிப்பதும், பிராம்மண போஜனம் செய்விப்பதும் இவரியல்பு. இவர், ஆண்களில் சிறந்தவர்.

செந்தமிழ், பைந்தமிழ். ஒண்டமிழ், வண்டமிழ் எனப் பல வகையாகத் தமிழ் சிறப்பிக்கப்படும்.

''செந்தமிழ் நாடெனும் போதினிலே - இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே'' எனப் பாரதியார் தமிழைப் பாராட்டுகிறார்.

"செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்" எனத் திசைச் சொல்லை விளக்கும் நன்னூலாசிரியர் பவணந்தி முனிவர் (சூ. 273ல்) செந்தமிழ் நிலம் என்றும் நன்னூல் உரையாசிரியர் சங்கர நமச்சிவாயர் கொடுந்தமிழ் நிலம் பன்னிரண்டென விளக்கும் பகுதியில், (சூ. 272ன் உரையில், "தென்பாண்டி
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர், ஏதமில் பன்னிருநாட் டெண்"
என எடுத்தாளும் பகுதியில் செந்தமிழ் எனச் சிறப்பிப்பதனாலு முணரப்படும். இயற்சொல் பற்றி நன்னூல்.

"செந்தமி ழாகித் திரியா தியார்க்கும்
தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல்" (நன்.சூ. 271) சூத்திரத் தானும் செந்தமிழ் சிறப்பித்ததுணர்க. அந்தணர்கள் சூழுமிடம் - "அந்தண ரென்போர் அறவோர் - மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக லான்" (குறள். நீத். பெருமை. 10) "அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய் நின்றது மன்னவன் கோல்" (குறள், அரசியல், செங்கோ, 3)

சங்கர நமச்சிவாயர் - தம் உரையுள் (நன். சூ. 299ல்) ஐந்தாம் வேற்றுமை இன்னுருபு நீங்கற் பொருளில் வந்தமைக்குக் காட்டாக அமைந்தனுள் "அரசிற் பெரியர் அந்தணர். ஆவினிழிந்தது மேதி" என அந்தணரை எடுத்துக் காட்டுவதறிக. சுந்தரம் - அழகு என இப்பொருளாவதனை "சுந்தரம் புருஷம் த்ருஷ்ட்வா ப்ராதரம் பிதரம் ஸுதம் / யோனித்ரவதி நாரீணும்தத்யம்மே ப்ரூஹி கேசவ" என்பது நீதிசாரம் கூறுவதுங் கொண்டறிக. இராமாயணம் சுந்தரகாண்டம் என ஒரு பெரும் பகுதி பிரிக்கப்பட்டுள்ளமை கொண்டு முணர்க.

## சித்திரவேளைப் பாடியது

பதினான்குசீர் விருத்தம்

செய்ய குங்கும மார்பன் வண்டுசெ
றிந்தி லங்கிய தொங்கலான்
செழிய பூபதி வரையில் மேவிய
சித்ர வேள்சத பத்திரம்வாழ்
தையலன்புத ழைத்து வாழ்வருள்
சவரி வெற்பின்ம டந்தையார்
தழுவி வாழனு ராக போகச
மேள மானதி ருந்தவா
மையி லங்கிய கடல்சி வந்ததுள்
ளெதிர்பு குந்தது மலைகளு
மன்னு பேரணை துன்னு கின்றது
வெந்தெ ழுந்த தரிக்குல
மெய்யி லங்கைவ ளைந்து கொண்டது
களம திர்ந்தது தானைபோய்
மேலி ராவண னிலைகு லைந்தது
மீண்டு விட்டது மாலுமே. 142

சிவந்த குங்குமக் கலவை பூசப்பெற்ற மார்புடையவன்; வண்டுகள் நெருங்கிவிளங்கிய மலர்மாலை சூடுபவன் ; பாண்டிய மன்னன் நிலவுலக மன்னர்களின் தலைவன் ; இவன் மலையில் பொருந்தியவன் சித்ரவேள். இலக்குமியின் அன்பு ஓங்கி வாழ்வருளும் சவரி மலையில் விளங்கும் மகளிர் தழுவிக் கட்டி அணைத்துவாழ்கின்ற ஆசை இன்பம் இருந்தவாறு என்னே !

மைபோன்ற நிறமுடைய கடல் சிவந்தது; உள்ளே எதிர் புகுந்தது மலைகளும் ; மிகப் பெரிய அணை நெருங்கி, வந்து எழுந்தது. குரங்கின்குலம் தோன்றி உண்மையாக இலங்கையை வளைத்துக் கொண்டது. படைகள் சென்று போர்க்களம் அதிர்ச்சி யடைந்தது. அதற்கும் மேல் இராவணனது உயிர் நிலை குலைந்து நீங்கிப் போயிற்று. சீதையை மீட்க வேண்டுமென்ற மயக்கம் நீங்கி விட்டது.

திருமாலாகிய இராமனும், இராவணனை வென்று மீண்டு விட்டான். மால் - திருமாலின் அம்சமான இராமன் எனவும், மயக்கம் எனவும் பொருள். மால் அஃறிணை முடிவு ஏற்றது.

ஆண்கள் கலவைச் சந்தனத்தைத் தோள், கை, மார்பு, முதுகு ஆகிய பகுதிகளிலும், பெண்கள் வளையணியும் முன் கைகளிலும் கழுத்திலும் மார்பிலும் பூசிக் கொள்வதனை இன்றும் திருமணக் காலங்களில் நிகழ்வதைக் கொண்டு அறியலாம். தொன்று தொட்டு வரும் மங்கலப் பொருள்களுள் இதுவும் ஒன்று.

தொங்கல் - மலர் மாலை. மார்பில் தொங்க விடப்படுவதால் காரணப் பெயர். நன்மணம் மிக்க மலர் மாலைகளில் வண்டுகள் வந்து படியும். தேன், ஞிமிறு, வண்டு, சுரும்பு எனப் பலவகை வண்டுகளில் உண்டு.

அரி - பல பொருள் தரும் உரிச் சொல். குரங்கு என்று பொருள். அரிக்குலம் - காட்டில் வாழும் வேடர் மரபினர். தானை - சேனை - படைகள் நான்கு வகை. தேர், காலாள், யானை, குதிரை என; இவை முக்கியமான படைகள். நாட்டைக் காக்க அமைத்துக் கொள்ளப்பட்டவை. இப்படை நிலைப்படை யெனவும் தற்காலிகப் படையெனவும் இருவகைப்படும். நிலைப்படை எப்போதுமிருப்பது. போர்க்காலங்களுக்கென அவ்வப்போது சேர்த்துக் கொள்ளும் படை தற்காலிகப் படையாகும். மேலும் வில் படை, வாள் படை யெனவும் பல வகை உண்டு. மையிலங்கிய கடல் - கருங் கடல் என்க.

## சென்னைக்குச் சென்றவன் கதி

வெண்பா

சென்னைக்கு வந்து சிவமாயி னேனல்ல
வன்னமது காணு தவனுகி - மன்னுசிரங்
கைக்கொண் டரைச்சோமன் கட்டிச் சடைமுறுக்கி
மெய்க்கொண்ட நீறணிந்து மே. 143

சிறந்த உணவு கிடைக்கப் பெருதவனுய், நிலையான தலைமேல் கை வைத்துக் கொண்டு, இடுப்பில் (முழங்காலளவு) ஆடை கட்டி, சடையைவளர்த்து முறுக்கி, உடலில் திருநீறணிந்தும் சென்னை மாநகர் வந்து சிவமானேன்.

உணவின்றி வாடும்போது தலைமேல் கை வைத்திருப்பதும், முழு ஆடை இல்லாமையால் அரை (பாதி) உடை கொள்வதுமரபு. பண்டாரமாக இருந்து வாழ்பவர்கள் முழங்கால்வரை உடை கட்டுவர். சடையை முறுக்கி விட்டுக்கொள்வர். உடம்பில் நீறணிந்து கொள்வார்கள். வீடு தோறும் பிச்சையெடுப் பார்கள். சில சமயம் எங்கும் உணவு கிடைக்கப் பெற மாட்டா: அதனுல் தலைமேல் 'சிவனே' யென்று சொல்லிக் கொண்டு கையை வைத்துக் கொள்வர். நல்ல அன்னமது காணுதவன் ஆயினேன். நல்லுணவு நீறு - திருநீறு.

## வீரபாண்டியன் குடையைப் புகழும்

வெண்பா

சேணுலவு வெண்டிங்கட் செல்வனென்னத் தண்ணென்று
நீணிலமோ ரேழு நிழற்றுமே — பேணிவந்து
பூவேந்த ரேத்தும் புகழ்வீர பாண்டியனங்
கோவேந்தன் கொற்றக் குடை. 144

(தானகவே) விரும்பி வந்து பூவுலகாளும் மன்னர் போற்றிப் புகழினைக் கொண்டாடும், புகழ் மிகுந்த வீரபாண்டிய வேந்தனின் வெண்கொற்றக் குடை, (வான வீதியில்) வெகு தொலைவில் உலாவி வரும் வெண்ணிலவு ஆகிய செல்வன் என்று சொல்லும்படி குளிர்ச்சி யாய் ஏழுலகிலும் நிழலைச் செய்யும்.

## மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் கூறியது

வெண்பா

சைவம் விளங்குமிடஞ் சாத்திரமீ தோங்குமிடம்
தெய்வப் புலவர்குழாஞ் சேருமிடம் — கைவரைக்கோன்
துன்னலர்தாழ் பாண்டித் துரைராஜேந்த் ரன்மெச்சும்
கன்னிபுர மேவியசங் கம். 145

கைவரை என்ற மலைத் தலைவன், பகைவர் தாழ்ந்து பணியும் பாண்டித்துரை இராஜேந்திரன் கொண்டாடி நடத்தும் நான்காம் தமிழ்ச் சங்கம் மதுரையில் ஒரு பகுதியான கன்னிபுரம் என்ற இடத்தில் அமைக்கப்பட்டது. சைவசமயம் நன்றாக விளங்கும் இடமாகும். சிறந்த சைவ சித்தாந்த சாத்திரங்கள் ஓங்கி விளங்கும் இடமாம். தெய்வத் தன்மை மிகுந்த புலவர் அவ்வப்போது பல விடங்களிலிருந்தும் வரவழைக்கப் பெற்று ஒன்று கூடித் தமிழைப் பற்றிய இயல் இசை நாடகம் என்ற மூவகையான தமிழையும் ஆராய்ந்து பேசி எழுதித் தம்தம் திறமைகளை வெளிப்படுத்துகின்ற இடமாம்.

புலவர்கள் - தெய்வப் புலவர் என்றது பொய் சொல்லாதவர் - ஒரு சொல் கூறின் அது அவ்வாறே நடைபெறும். 'பொய்யா நாவின் கபிலன்' என்றதும், திருவள்ளுவர், பொய்யிற் புலவர் என்றே அழைக்கப் பெறுவதும், காளமேகம் கம்பன் போன்றோர், பொய்யா மொழிப் புலவர் எனப்படுவதும், பொய்யாமொழிப் புலவர் என ஒரு புலவருக்கே பெயரமைந்ததும் கொண்டு புலவர் தெய்வத் தன்மை அறியப்படும்.

**பாண்டித்துரை தேவர்** - இவர் இராமநாதபுரத்தைச் சார்ந்த பாலவநத்தம் ஜமீன்தார். இலக்கிய இலக்கணம் வல்ல தமிழன்பர். மதுரையில் தமிழ்ச்சங்கம் நிறுவித் தமிழை வளர்த்தவர். புலவர்களை ஊக்கப்படுத்தியவர். சைவப் பற்றுடையவர். அபிதான சிந்தாமணியைப் பதிப்பித்தவர்.

இரட்டைமணிமாலை - இராஜராஜேசுவரி பதிகம், சிவஞான சுவாமிகள் இரட்டைமணிமாலை, சைவ மஞ்சரித் திரட்டு, பன்னூற்றிரட்டு ஆகியவை இவரியற்றியன.

### சோமனைப் பாடிய

வெண்பா

சோமா திரிபுவனத் தோன்றலே நின்கவன
வாமா வழிமறந்து வந்ததோ — தாமம்
புனைவார் குழலார் பொதுவிழிக் கெங்கள்
மனைவாச லன்றே வழி 146

மூவுலகையும் ஆள்கின்ற ஆண்களுள் சிறந்த சோமனே! பலதிக்கிகளிலும் செல்லவல்ல குதிரை வழியை மறந்து விட்டு வந்து விட்டதோ? மாலை சூடிய நீண்ட கூந்தலையுடைய மகளிரின் பொதுவாகப் பார்க்கும் பார்வைக்கு எங்களுடைய வீட்டு வாசல் வழியல்லவே.

சோமன் என்பவன்மீது காதல் கொண்டாள் ஒருத்தி, தன் தெருவழியே என்றும் வாராத குதிரை, வழி தவறி வந்து விட்டதா என வினவுவதாகக் கொள்க. தினமும் செல்கின்ற வழக்கமான வழி வேறுயிருக்க இன்று மட்டும் உனது குதிரை இவ்வழி வரக்காரண மென்ன என வினவியதாகவும் அமையும்.

தினமும் வாராத குதிரை வந்ததால் நான் உய்ந்தேன் என்பது குறிப்பு. இவ்வாறு வந்தது அதிசயம் எனப் பொருள் கொள்கையில் **அதிசய அணி**, தலைவியை மறந்த தலைவன், தலைவி இருக்கும் வீதி வழியே வரக் கண்ட தோழி, தலைவன் வருகையைப் பார்த்துக் கூறுவதாகவும் கொள்ள அமையும். அகத்துறைப் பாடலாகவும் கொள்ளலாம். மணி வாசல் - மணியினது வாசல்;- வாயில் என்பதன் மரூஉ. வாயில் - இல்வாய், இலக்கணப் போலி.

### குப்பச்சி குணம் பற்றிய

வெண்பா

சோற்றை யரசிலைமேற் றூவி வழுதுணங்காய்க்
கீற்றை யதன்மேற் கிடத்தியே — ஆற்றியுண்ணு
அப்பச்சி யென்பா ளருமையர சேயென்பாள்
குப்பச்சி யாயி குணம். 147

சோற்றை அரசமரத்து இலைமேல் தூவி, வழுதுணங்காயைப் பிளந்து, கறியாக்கித் தயாரித்த ஒரு துண்டுப் பகுதியை அதன் மேல் வைத்து ஆறவைத்து உண்ணுக. அப்பாடா அருமை என்பாள்; ராஜா என்பாள்; குப்பச்சி என்ற பெயருடைய தாயின் குணம் இது.

அப்பாடாஎன்பதை இராமநாதபுரத்து நகரத்தார் முதலானோர் அப்பச்சி என்பர். ராஜா - குழந்தைகளை என் ராஜா, செல்லக் குட்டி என்று குலாவிக் கொஞ்சும் போது கூறுவது. இலைமேல் உணவைப் பரப்பி ஆறவைப்பது வழக்கம். வழுதுணங்காய் - கத்திரிக்காய். அப்பச்சி, அரசே விளிகள்.

### ஞானத்தின் நிலை பற்றி

கலி நிலைத்துறை

ஞானங்கள் தேடித் திரிவது வையகம்
ஞான மிருப்பது நாழி யரிசிக்குள்
வானமுஞ் சுருங்கச் சிறுமைவந் துற்றக்கால்
ஞானம் படும்பாடு நாமறி யோமே. 148

ஞானங்களை (அறிவை)த் தேடி அலைகின்றது உலகம். ஞானம் எங்கேயுள்ளது என்று கவனித்துப் பார்த்தால் நாழி அளவு அரிசியைப் பக்குவப்படுத்தி உணவாக்கி உண்பதிலேயே அமைந்துள்ளது. மழைமேகம், மழை பெய்யாது வறுமை வந்தபோது, ஞானம் படுகின்ற பாட்டை நாம் அறியோம்.

ஞானம் நிலைத்திராது. இதனாலேயே "பசிவந்திடப் பத்தும் பறந்து போம்" என்றனர். அவற்றுள் ஞானமும் ஒன்று என்றறிக.

ஞானம் என்பது பற்றி ஔவை, "ஞானம் என்பது மோன வரம்பு" என்று ஆத்திசூடியுள் கூறியதும் அறிக.

நாழி - சிறு அளவு, "ஆழ முகந்து அளப்பினும் ஆழ்கடல் நீர், **நாழி** முகவாது நானாழி." —நன்னெறி. சிவப்பிரகாசர்.

"இரு **நாழி** நெற் கொண்டு முப்பத்திரண் டறமும்" செய்தாள் காமாட்சியம்மை - காஞ்சிப்புராணம். வறுமை - "**வறுமையிற்** செம்மை" - ஔவை. "கொடிது கொடிது **வறுமை** கொடிது",

## பெண் அலட்சியம் செய்யப்பட்டால் என்பது பற்றிக்

கலிவிருத்தம்

**தக்ககண** வன்சீறத் தன்னைக்கை விட்டகன்ற
புக்ககத்தார் கைவிடுவர் பிறந்தகத்தார் போற்றார்கள்
அக்கணமே பழியிடுவ ரன்னியர்க ளருவினையேன்
மிக்கொரிடங் **காண்**கிலேன் விதியேயோ விதியேயோ.

149

தன்னைத் தன்னந்தனியாக விட்டுப் பிரிந்தகன்ற கணவன் கோபித்துச் சீறியெழ, புகுந்த மாமியார் வீட்டார் காப்பாற்றாமல் கை நழுவ விட்டுவிடுவர். பிறந்த வீட்டார் கொண்டாட மாட்டார்கள். அப்போதே மற்றவர் வீண் பழிசுமத்து வார்கள். கொடிய வினையுடையோளான நான் ஏற்ற இடந் தங்கி வாழக் காண்கிலேன். இது விதியா, இது விதியா.

உற்றார் உறவினரால் ஆதரவு காட்டப்படாமல் கைவிட்டு, ஒதுக்கி விடப்பட்ட ஒரு பெண்ணின் அவல நிலையைப் புலப்படுத்து வதாக அமைந்துள்ளது. "விதியேயோ விதியேயோ" "விதி விதி மகனே"—அரிச்சந்திர புராணம் — அன்யம் - வடசொல் - அன்னி யர் - பிறர்.

## சகுனத் தடை

வெண்பா

தட்டானைச் செக்கானைச் சக்கிலியை வள்ளுவனைப்
பட்டோலைக் காரனும் பார்ப்பானை - முட்டத்
திருநாம மிட்டானைச் சென்றெதிரே கண்டா
லொருநாளும் போகாதே யூர். 150

**சகுனம்** (முன்னெச்சரிக்கை)

(பொன் நகை வேலை செய்யும்)தட்டார். (எண்ணெய் ஆட்டும்) வாணியர், (செருப்பு தைக்கும்) சக்கிலியர், சோதிடங் கூறுவதும், டமாரமடித்துச் செய்தியறிவிப்பதும் உடைய வள்ளுவர், (அரசன்முன் நின்று வந்த, எழுதும் கடிதங்களைப் படித்துக் காட்டும்) அந்தணர், நெற்றி முழுவதும் நாமமிட்டவர் ஆகிய இவர்களை ஒரு காரியங் கருதிச் செல்லும் போது எதிரில் வரக் கண்டால் எப்போதும் வெளி யூர் செல்லாதே. இவர்கள்வரின் சகுனத் தடை ; செல்லுங் காரியம் நிறைவேருது; வழியில் ஏதேனும் தீங்கு நேரும் என்பது எச்சரிக்கை.

வள்ளுவன் - ஸ்ரீ வல்லபன் என்பதே இப்பெயராக உள்ள தென் பது ஒரு சாரார் கருத்து. ஆதித் திராவிடர் என்றழைக்கப்படு வோருள் ஒரு சிலர் இன்றும் தமது முன்னோர்கள் செய்து வந்த தொழிலான சோதிடங் கூறுதலை மேற்கொண்டு நடத்துவதனை இன்றும் கிராமப்புறங்களில் காணலாம். அவர்களை வள்ளுவர் என்று கூறுவது வழக்கம்.

அது போலவே அரசர் கூறும் செய்திகளை ஊர் மக்களுக்கு யானை மேல் டமாரம் வைத்துக் கொண்டு டமாரத்தை அடித்து ஊராரின் கவனத்தை இழுத்துக் கேட்குமாறு வாயால் அரசச் செய்திகளை யறிவிப்பவர். இன்றும் இவ்வழக்க முண்டு.

கோவில் விஷயங்களாகவோ, ஊர்ப்பொது விஷயங்களாகவோ வயல்கள் வீடுகள் முதலானவற்றிற்கு வரி அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டுமென்றுலோ தண்டோரா, தமுக்கு போட்டோ, பறை கொட்டியோ இன்றும் செய்திகளை முதலில் தெரிவிப்பதனை இக்காலங்களிலும்கிராமங்களில் காண்கின்றோம். இதுமுறை.செய்தித் தாள்களில் மக்கள் அறிய, படித்துணரும்படி செய்தி தருவது, வானொலி மூலம் செய்தி பரப்புவது,தொலைக் காட்சிவாயிலாகவிளங்க வைப்பது என்றவையெல்லாம் பிற்காலச் செய்தி பரப்பும் முறைகளின் வளர்ச்சிகள். பழைய முறைகளுள் டமார மடித்தல் தொழிலை மேற் கொண்டோரை வள்ளுவர் என்றனர் அக்கால மக்கள்.

பட்டோலை - காரணப் பெயர். பட்ட + ஓலை - உலர்ந்த ஓலை. எனப் பிரிக்க. காகிதங்கள் தோன்றுவதற்கு முன் நன்கு காயவைத்த பனையோலைகளையே எழுதப் பயன் படுத்தி வந்தனர். அவ்வாறு எழுதப்பட்டு வரும் ஓலையில் வரும் செய்திகளைப் படிப்ப தற்காக அரசர் தனியாக ஆட்களை நியமித்திருந்தனர். அவர்கள் பட்டோலைக்காரர் என்றழைக்கப்பட்டனர்.

ஆயிரம் பொன் செலவு விளக்கம் என்ற தனிப்பாடலில் 'பட் டோலைக் காரனுங் காயிரம் பொன்' என்றார் அவ்வாசிரியர். "நீட் டோலை வாசியா நின்றான்...மாட்டா தவன்நன் மரம்". என்று முடியும் பாடலுள் சபை நடுவே நீட்டிய ஓலையை உடனே படித்தல் வேண் டும். இருப்பதை இருக்கின்ற படியே படித்தல் வேண்டும், இல்லை யேல் அரசு தண்டனை அமையும். குறைத்தோ, அதிகப்படுத்தியோ படித்தல் கூடாது என்பது அரச விதி. இங்கு ஓலை வந்தமை யறிக.

முட்ட - முடிய, மூக்கு நுனியிலிருந்து முன் மண்டை முடிய நாமமிடுவோர் என்று பொருள். இப்பாடல் கருத்துக்கள் சாஸ்த்ர ரீதியாகவும் முன்னோர் கண்டுணர்ந்த முறையிலும் அனுபவ வழியி லும் அமைந்த பாடலென்றுணரத்தக்கது. அந்தணர் ஒருவராக எதிரே வரின் ஆகாது. இருவர் எதிர் வரின் மிகவும் நல்லது. காரியம் இனிது நிறைவேறும்.

## மகளிர் கொள்கை அழிதல்

### வெண்பா

தலைமகனைத் தீர்ந்தொழுகல் தான்பிறரில் சேர்தல்
நிலைமையில்தீப் பெண்டிரைச் சேர்தல் — கலனணிந்து
வேற்றூர்ப் புகுதல் விழாக்காண்டல் நோன்பெடுத்தல்
பொற்றொடியார் கோளழியு மாறு. 151

தான் கொண்ட கணவனிடமிருந்து விலகி வாழ்வது, தான் அயலார் மனையில் சென்று அடிக்கடி பழகுதல், ஒழுங்கு முறை யற்ற தீய பெண்டிரைச் சேர்வது, ஆபரணங்களை அணிந்து கொண்டு அயலூர்களுக்குச் செல்லுதல், விழாக்களைக் காணச் செல்லுதல், கணவனது உத்தரவின்றி நோன்பு மேற்கொள்ளுதல் என்பன பொன்றாலான வளையல்களை அணிந்த மகளிர் (கொள்கை) கற்பு மனநிலை அழியும் வழி என்பர்.

வேறு + ஊர் - வேற்றூர். பொன் + தொடி - பொற்றொடி. கொள் - கோள் என்று அமைந்தது, வெல் - வேல் என்றது போல முதனிலை திரிந்த தொழிற் பெயர் என்பர். தீப்பெண்டிர், தீமை+ பெண்டிர்-தீமை-பண்பு. தலை மகனைத் தீர்ந்தொழுகல்— கணவனிட மிருந்து வாழ விரும்பாமல் விலகிச் சென்று உலகில் வாழ்தல்.

**நோன்பெடுத்தல்** - மகளிர் கணவனது அனுமதியின்றி நோன்பெடுப்பது கூடாது. கணவனுக்குப் பணிவிடை புரிவதே சீரிய நோன்பு எனப் பெரியோர் வகுத்தனர். "நோன்பெனப்படுவது கொன்று தின்னாமை" (கலித்தொகை) என வேறு பொருள் படலு மறிக.

**விழாக் காண்டல்** - விழாவைக் காணச் சென்றால் அங்குப் பலவகை மக்களும் வருவர். மனம் மாற ஏதுவாகும் ஆதலின், விலக்கப்பட்டது. கலன் - அணிவகை.

## செவிமடு அறிவுறுத்தல்

கட்டளைக் கலித்துறை

தரையைப் புகழ்நிறை பொய்யா
 மொழியுரை தள்ளினையென்
உரையைத்தள் ளாது செவிமடுப்
 பாய்விண் ணளா வோங்கியரன்
வரையைக் கிழித்துத்தெம் மார்வைக்
 கிழித்தடர் மாக்கிழித்துத்
திரையைக் குடித்தசெவ் வேலோ
 யமர சிகாமணியே. 152

தரையில் புகழப்பெறும் நிறைவையுடைய தப்பாத மொழியாகிய உரையைத் தள்ளி விட்டாய். எனது வார்த்தைகளை விலக்காமல் காதில் கேட்டுக் கொள்வாய். வானளாவி ஓங்கிய மலையைக் கிழித்து, எமது மார்பைக் கிழித்து, மாமரத்தையழித்து அலையைக் குடித்தசிவந்த வேலையுடையவனே. தேவர்களும் தலையில் சூடிக் கொள்ளும் மணிபோன்று உயர்ந்த தலைவனே.

பொய்யாமொழி-திருவள்ளுவருக்குரிய பெயர்களுள் இப்பெயரும் ஒன்று. பொய்யா மொழிப் புலவர் என்ற தனிப்பாடல் பாடியவராக ஒருவர் உள்ளமை யறிக. தப்பாத சொல் பெரியவர் சொல். செவிமடுத்தல் - கேட்டல். மார்பை என்பது மார்வை என அமைந்தது, எமது மார்பினுள் இருக்கும் இதயத்துயர புகுந்து கொண்டு என்பது கருத்து. திரை - அலை.

## தலைவி நிலவு கண்டிரங்கல்

விருத்தம்

தாய்வா யெழுந்து மிகுந்தலையை
மோதி மோதிச் சலித்தலறக்
காய்வாய் நிலவே யுடன்பிறந்தாள்
இருந்து வாழுங் கடிமனையை
நீவா னெழுந்து வந்தழிப்பாய்
என்று லந்தோ நிலையின்றித்
தேய்வாய் நின்னோ டியல்பில்லா
வென்னை யென்ன செய்யாயோ. 153

கடலாகிய தாயிடமிருந்து தோன்றி மிகுதியாக அலைகளை மோதிமோதி வெறுப்பு ஏற்படும்படி ஒலிக்கும்படி காய்கின்றாய். நிலவே! உன்னுடன் பிறந்தவளான இலக்குமி இருந்து வாழும் காவலையுடைய மனையாகிய கடலைவிட்டு நீ ஆகாயத்தில் தோன்றி அழிப்பாய் என்றால், ஐயோ!, ஒரு நிலையாகவில்லாமல் தேய்ந்து கொண்டேபோவாய். உன்னோடு பொருத்தமில்லாத தன்மையையுடைய என்னை என்னதான் செய்யமாட்டாய், எது வேண்டுமானாலும் செய்வாய் என்பது கருத்து.

நிலவின் ஒளி, தலைவனைப் பிரிந்த தலைவிக்குத் துயர் மிகுக்கும். என்னை என்னதான் செய்ய மாட்டாய்? எல்லாம் செய்வாய். நிலவு, இலக்குமி இரண்டும் அமுதம் கடைந்தபோது தோன்றிய பொருள்கள். ஆதலின் நிலவுக்கு இலக்குமி, உடன் பிறந்தாள். ஐயோ - இரங்கற் குறிப்பு. நிலவே! விளி. கடிமனை - உரிச்சொல். காவல் என்பது பொருள். நிலையின்றித் தேய்வாய் - சந்திரன் வளர் பிறையில் வளர்வதும், தேய் பிறையில் தேய்வதும் இயற்கையாதலின் நிலையின்றித் தேய்வாய் என்றாள். மோதிமோதி - அடுக்கு. பிறந்தாள் இருந்து வாழும் கடிமனை - தாய், தலைவனைச் சந்திக்க விடாது இற்செறித்தலால், காவலால் தலைவனைக் காண இயலவில்லை யெனத் தலைவியைக் காண இயலாது, இற்செறிவு (காவல்) அதிகம் எனத் தலைவியைச் சந்திக்க வந்த தலைவனுக்குத் தோழி அறிவுறுத்தியதாகவும் அமையுமெனக.

## ஈயாதார் இழிவு

வெண்பா

தாயா கியகள்ளித் தாழிகத வும்பிறர்க்கொன்
றீயாத மாந்தர் இருக்கதவும் — தேயா
கடைப்பூண் குடுமியுந் தாளுங் கடையும்
அடைப்புந் திறப்பு மயர்த்து. 154

தாயான கள்ள மனத்தையுடையவள் மூடும் தாழ்ப்பாளை யுடையகதவும், மற்றவர்களுக்குக் கொடுக்காதமக்கள் மூடும்கதவும், ஓரத்தில் பொருத்தப்பட்டுள்ள பூண் உடைய குடுமியுடன் கூடிய கதவும், தாளும், ஓரமும், அடைப்பதும் திறப்பதும் சோர்ந்து தேய்வு பெறமாட்டா.

பழங்காலங்களில் கீல் பூட்டுவதற்குப் பதில் கதவு நிற்பதற்தாக மேலும் கீழும் சாண் அளவு நீளத்தில் கட்டை நீட்டி விட்டிருப்பர். அதனை மேலே பொருத்தும்போதும் அதுசென்று மூடவும் திறக்கவும் ஏற்றவாறு தொளை இட்டிருப்பதற்குள் பொருத்தியிருப்பார்கள். அந்த முனையின் ஆதரவில் தான் கதவு சாற்றவும் மூடவும் செய்வார்கள். அந்த முனைக்குக் குடுமி என்று பெயர். பெரிய கோவில்களில் கிராமங்களில் சில இடங்களில் இம்முறை கவனித்துக் காணப் புரிந்துகொள்ளமுடியும். மரம் தேயாதபடி இந்த முனைக்கு இரும்பால் பூண் அமைப்பதும் உண்டு.

பூண், குடுமி, தாள், கடை தேயா என ஒவ்வொன்றோடும் இயைக்க. கொடை பெற வருவோர்க்காக அடிக்கடி மூடித் திறத்தலே சிறப்பு. அவ்வாறு செய்தால் தான் பூண் முதலிய தேய்வுறும். இவன் கொடுக்கும் இயல்பிலன் ஆதலின் கதவு அடைத்தே கிடக்கும். இது அவனது ஈயாத்தன்மையைக் குறிப்பாக வெளிப்படுத்தலால் இத்தலைப்பில் அமைந்தது.

## எழுமாத்தூர்

வெண்பா

*தாழைவனம் பூகவனம் சந்தனப்பூங் காவனமும்*
*வாழைவனம் சூழ்எழு மாத்தூரே — தாழை*
*நகர்மே யடைந்த நகர்மே யடைத்த*
*நகர்மே யடைத்த நகர்.* 155

தாழை மரத்தைத் தலவிருட்சமாக வுடைய ஊர். அடைத்து நெருக்கி வைத்தாற் போல மிகவும் நெருக்கமாக விளங்கும் ஊர். மேற்குப் புறத்தை அடைத்துக் கொண்டிருக்கும் நகர் தான் தாழை, பாக்கு, சந்தனம், புங்கு, வாழை ஆகிய மரங்களைத் தலவிருட்சங்களாகவுடைய ஊர்களால் சூழப் பட்டு விளங்கும் ஊர் தான் எழுமாத்தூர் என்ற சிறப்புடைய ஊராகும். • இவ்வூரில் 7 மாற்றுள்ள பொன் கிடைக்கப் பெற்றதனால் இப்பெயர் பெற்றது.

## சகுனத் தடை

### வெண்பா

தும்ம லிருமல் தொடர்ந்தழுதல் கூப்பிடுதல்
கும்பமுலை மாதர் குறுக்கிடுதல் — தம்பமென
வெங்கைப்போ வெங்கைப்போ வென்பாரே யாமாயின்
அங்கைப்போ தன்று தவிர். 156

தும்முதல், இருமுதல், சேர்ந்தாற்போல் அழுகையொலி கேட்டல், புறப்படும்போது கூப்பிடுதல், குடம்போலும் முலை மாதர் குறுக்கே வருதல், தூண் போல் நின்று கொண்டு 'எங்கே போகிருய் எங்கே போகிருய்' என்று கூறுவார்களானுல், அன்று, குறித்துப் புறப்பட்டுச் செல்லும் செயலை விலக்கிவிடுக. இவை சகுனத் தடை யென்க.

தும்மினுலும் இருமினுலும் ஒரு காரியத்துக்காகக் கிளம்புகையில் எந்த வகையில் கைதட்டியோ பெயரிட்டோ சைகை செய்தோ கூப்பிட்டாலும், எங்கே போகிருய்? என்று சொன்னுலும் நானும் வருகிறேன், நானும் கூட வருகிறேன் என்ருலும், அழுதால் கேட்டாலும் அனைத்தும் சகுனத் தடையென்றறிக. அந்த நேரங் களில் புறப்பட்டுச் சென்ருல். 1. காரியமாகாது. 2. யாரை நோக்கிச் செல்கிருேமோ அங்கு அவரைப்பார்க்க முடியாமல் தடையேற்படும், அல்லது அவர் இருக்க மாட்டார். அல்லது நடந்து சென்ருலும் வழியில் இடறிவிழ நேரும். அல்லது தொடர்ந்து செல்ல முடியாத படி முள் குத்துவது போன்ற நிகழ்ச்சிகள் அமையும். வாகனங்களில் சென்ருல் விபத்துக்கள் நிகழ வாய்ப்புண்டு. புறப்படும் போது கால் தடுக்கினுலும் அபசகுனமேயாம். அது இப்பாடலில் கூறப்பட வில்லை. 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்ற நன்னூ லாசிரியர் கூறும் முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்ருன் இங்கு ஏற்று முடித்துக் காண்க.

கார்க்கியர் என்ற முனிவர் சூரியோதயத்தின் முன்னுலும், பிரு கஸ்பதி என்பவர் சகுனம் பார்த்துக் கொண்டு செல்லென்றும், மாண்டவியர் என்பவர் மனோஜெயம் இருந்தால் புறப்படு என்றும், ஜநார்த்தனர் என்பவர் பிராம்மணன் புறப்படு என்று சொன்னுல் கிளம்பலாம் என்றும் கூறப்படும் கருத்துக்களடங்கிய "உஷச்ச சம்லெ கார்க்கியஸ்து சகுனந்து ப்ருஹஸ்பதி: / மனோஜெயந்து மாண்டவ்யோ விப்ரவாக்யோ ஜனூர்த்தன:" // என நீதிசார சுலோகம் புறப்படுதற்குரிய வேளைகளையும் குறிப்பதறிக.

இங்கு இது நேர் மாருன செய்தியானலும் சகுனத் தடைகளைக் குறித்த விடத்தில் சகுனம்பற்றிய பிறகருத்தும் கூறலாமென வெண்ணியெழுதப்பட்டது.

"புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை யுள்ளிச் சென்ருேர் பழியலர்" என்ற(புறம். 204.10,11.) கருத்தும் சகுனத்தைக் காட்ட வந்த தொடர்களென்க, விரிப்பிற்பெருகும்.

"துஸ் ஸ்வப்ன துஸ் சகுன துர்கதிர் துர்மனஸ்ய துர்பிக்ஷ துர்வ்யஸன துஸ்ஸஹ துர்யசாம்ஸி, உத்பாத தாப விஷபீதி மஸத்க்ர ஹார்த்தம் வ்யாதீம்ச்ச நாசயதுமே ஜகதா மதீ ச:" என்ற சுலோகமும் கெட்ட சகுனங்களைப் பற்றிய விவரங்களைப் பற்றியும், உலகே அவன தீனம் என்றும், அவன் துணையாலேயே அவை நீங்க வேண்டு மென்றும் அவற்றிடமிருந்து அவனே காத்தருள வேண்டு மென்ற குறிப்புணர வைக்கும் சுலோகமும் உண்டு என்பதும் இங்கறிக.

### தலைவன் சொல் தப்பான் எனல்

கட்டளைக் கலித்துறை

*தொலையா விருஞ்சுடர் நாடொறுஞ்*
*சூழ்வதுஞ் சூழ்ந்தமுன்னீர்*
*நிலையா நிலைப்பது நீர்வான்*
*சுரப்பது நீண்டசெம்பொற்*
*சிலையான் மேரு வசையா*
*திருப்பதுஞ் சேடனுச்சி*
*யலையா திருப்பது மம்பல*
*வாணர்தம் மாணையிலே.* 157

நீங்கப் பெருத பெரிய ஒளிகளையுடைய சூரிய சந்திரர் சுற்றிக் கொண்டு இயங்குவதும், உலகையே சுற்றிலும் சூழ்ந்து கொண்டிருக்கும் கடல் நிலையாகப் பொங்காமல் அமைந்திருப்பதும், தண்ணீரை மேகம் சுரந்து பொழிவதும், நீண்ட செம்பொன் நிறமுடைய மேருமலை அசையாமலிருப்பதும். ஆதிசேடனது தலை நடுக்கம் கொள்ளாதிருப்பதும், பொன்னம்பலத்தில் எழுந்தருளியிருக்கும் நடராசப் பெருமானின் கட்டளையினலேயே தான்.

தொலையா என்பது துலையா என வந்தது உலக வழக்கு. இருஞ்சுடர் - சந்திர சூரியர். முன்னீர் - படைப்புக் காலந் தொடங்கியே உலகுக்குப் பாதுகாப்பாக அமைக்கப்பட்ட கடல் என்று பொருள். முந்நீர் - ஆற்றுநீர் ஊற்றுநீர் மழைநீர் மூன்றும் கலக்கும் கடல்.

சுடர்கள் தினமும் தோன்றிச் சுற்றி வருதல், கடல் எல்லை மீருதிருப்பது, மழை நீர் பொழிவது, மேருமலை அசையாதிருப்பது, ஆதி சேடன் தலையசைக்காமல் இருப்பது இவை நிகழ்வதன் காரணம், சிவபெருமான் கட்டளைக்கு அஞ்சியே, சிவனுணையில்லையேல் இவை நிலை மாறும். நிலைமாறின் உலகம் நிலைக்க மாட்டா. யாவும் அழியும்.

அம்பலம் - (பஞ்ச)சபை. பொன்னம்பலம் என்பது முதற் பொருள். இறைவன் நடனமாடிய பிற நான்கு அம்பலங்கள் வெள்ளி மதுரை), தாமிரம் (திருநெல்வேலி), இரத்னம் (ஆலங்காடு) சித்திர சபை (குற்றாலம்).

செம்பொற் சிலை - சிவந்த பொன் நிறம் போன்ற நிறமுடைய மலை. இது மேரு. செம்பொன் - பண்புத்தொகை. இப்பாடலில் நீர் வான் அம்பலம் சேர அமைத்திருப்பது நயம். செம்பொன் சிவந்த நிறத்தையுடைய பொன். நால்வகைப் பொன் வகைகளுள் ஒன்று. வான் - மேகம், வான் சிறப்பு என வள்ளுவர் வகுத்ததும் காண்க. சுரத்தல் - மேலும்மேலும் வளர்ந்து கொண்டே இருத்தல். ஏழைக் குடும்பங்களில் பேசிக்கொள்ளும் போது "என்ன சுரந்து கொண்டே இருக்குமா?" என்று சாதாரணமாக மகளிர் கேட்பர். கன்றைக் கண்டதும் தாய்ப் பசுவுக்குப் பால் சுரக்கும். அழும் குழந்தையைக் கண்டதும் தாய்க்குப் பால் சுரக்கும். சேடன்-ஆதி சேடன் என்பதன் முதற்குறை. ஆணை - கட்டளை, சத்தியம் என்பன பொருள்கள். இறைவன் ஆணைப்படி சுடர் முதலியன தப் பாமை போல் தலைவனும் சொல் தவருமல் குறித்த காலத்தே வந்து விடுவான் என்பது எச்சம். இச்செய்யுள் பிறிதுமொழிதலணி,

## இரவு பொழுது போக்கப் பணம் இல்லையென வருந்தல்

### கட்டளைக் கலித்துறை

தெருவெங்கும் பாடல் புரிகின்ற
தாசிகள் சித்திரத்தின்
உருவங்கள் போலச் சுளிகைப்
பதியினி லொவ்வொருத்தி
புருவங்களோ கொங்கைகளோ கண்களோ
மன்மதன் பூசைசெய்யும்
பருவங்களோ கொடுத்துப் போக்கக்
கையிற் பணமில் லையே 158

தெருத்தெருவாக சுவாமி வீதியில் வரும் போது பாடி, ஆடும் தாசிகள் சுவரில் தீட்டிய ஓவியங்கள் போலச் சுளிகைப்பதி என்ற ஊரில் ஒவ்வொருத்தியின் புருவங்களோ, முலைகளோ, கண்களோ மன்மதன் பூசிக்கும் கருவிகளாக (சாதனப் பொருள்களாக) உள்ள இவர்களுக்குத் தக்கபடி கொடுத் தனுப்புமளவு கையில் பணம் இல்லையே? என்ன செய்வது ?

இப்பாடலில் ஒரு வழக்கம் புலப்படுத்தப் பட்டுள்ளது. சுவாமி வீதியில் வரும்போது தாசிகள் முன்னால் வந்து அங்கங்குப் பாடி ஆடுவர். இப்பழக்கம் அடியோடு மாறி விட்டது. பொய்க்கால் குதிரை, காவடியாட்டங்கள் இப்போது நடைபெறுவதை நாம் காண் கிறோம். தாசிகள் ஆடுவது முன்காலமரபு. இதற்காக அரசர்கள் தாசிகளுக்காக நிலம் இறும் வழங்கியிருந்தார்கள் எனக் கல்வெட்டுக் களாலுணரலாம்.

### தென்திருப்பேரை வைணவரூர்ப் பற்றிக் கோவிந்தையங்கார் பாடியது

வெண்பா

திட்டக்குடி அன்பில் திருநண்ணூர் ஆதனூர்
மட்டவிழ்ந் தோஹூர் வயலாலி - சிட்டர்திருக்
குன்றமரு தூர்குறை தீர்த்தா ராப்பனூர்
என்றுவட கரையில் எட்டு. 159

1. திட்டக்குடி, 2. திருஅன்பில், 3. செல்வம் சேரும் ஆதனூர், 4. ஓஹூர், 5. வயலாலி, 6. திருக்குன்றம், 7. மருதூர், 8. ஆப்பனூர் என்பன வட கரையில் அமைந்துள்ளவை எட்டு.

இடையாற் றினங்குடிசீர் எப்போதும் வாழூர்
விடர்மணலூர் ஈரைந்தாம் வேலி - தடம்பண்ணை
நாணமங்கை பூத்தமங்கை நல்லபெரு மாள்மங்கை
பாணமங்கை தென்கரையிற் பத்து. 160

1. இடையாறு, 2. இனங்குடி, 3. வாழூர், 4. மணலூர், 5. இரண்டு ஐந்தாகிய பத்து வேலி, 6. பண்ணை, 7. நாணமங்கை, 8. பூத்த மங்கை, 9. நல்ல பெருமாள் மங்கலம், 10. பாணமங்கை.

பாணமங்கை எனத் தென் கரையில் அமைந்துள்ள ஊர்கள் பத்தாம். பூத்தமங்கை - பிள்ளைமங்கலம் எனவும் பாடம்.

### வேம்பத்தூர் பிச்சுவையர் பாடிய

வெண்பா

தேங்குபுகழ் மாமுகவைத் தீரமுத்து ராமலிங்க
வீங்குலகி லோங்கிடப் பொன் ஈகுவையே—வாங்கு
புவிராசர் போற்றும் புகழ்சேர்வேம் பத்தூர்க்
கவிராசர் செந்தமிழ்ச்சங் கம். 161

அரசர் போற்றிப் புகழும் வேம்பத்தூர் புலவர்கள் நடத்தும் செந்தமிழ்ச் சங்கத்திற்கு அளவற்ற புகழுடைய முகவையி லுள்ள தீரரான முத்துராமலிங்க வள்ளலே! இப்பேருலகில் சிறப்புடன் ஓங்கப் பொன் அளிப்பீராக.

## கட்டழகன் மீது பாடிய

வெண்பா

தொட்டி லிருந்தே துதைந்துவிளை யாடுமுன்னே
அட்டதிக்கு நின்குடைக்கீ ழானதே - கட்டழகா!
தன்குமரி யல்லால் தனிக்குமரி தீண்டாயே
தென்குமரி வேண்டிலன்ன செப்பு. 162

கட்டழகனே! நீ தொட்டிலில் படுத்து நெருங்கி விளையாடத் தொடங்கு முன்பே எட்டுத் திக்குகளிலுமுள்ள தேசங்கள் அனைத்தும் உன் வெண்கொற்றக் குடையின்கீழ் ஆகிவிட்டது. தன் மனைவியையன்றி வேறு பெண்களை நீ தீண்டாதவனாயிற்றே. தென்திசையில் விளங்கும் கன்னியாகுமரி உன்னை அடைய வேண்டுமென்று விரும்பினால் என்ன செய்வாய் என நீயே அதற்கு பதில் கூறு.

கட்டழகா - சொக்கனே - மதுரைச் சொக்கநாதன். விளி. சொக்கநாதப்பெருமான் மனைவி மீனாட்சி. சொக்கநாதன் மீனாட்சியை மட்டும் விரும்புவானேயல்லாமல் வேறு எப் பெண்ணையும் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டான். அப்படிப் பட்டவனைத் தென்குமரியின்கண் தவமிருக்கும் கன்னியாகுமரி அடைய விரும்பினால் அதற்குப் பதில் சொல்ல இயலுமா? தென் குமரி தவமிருக்கின்றாளே தவிரச் சொக்கனையடைய நினைத்தால் அது முடியாத செயல் என்பது கருத்து.

அட்டதிக்கு - எட்டுத் திசைகள். அஷ்ட என்னும் வடசொல் தமிழில் வரும் போது (ஷகரம் டகரமாக மாறும் (நன்னூல். பதவி யல் சூ. 20). தன்குமரி - தான் ஆளும் பூமியாகிய நில மடந்தை. நில மடந்தையை யடைந்தவன் தனியே நின்று தவம் புரியும் பெண்ணைத் தொடமாட்டான். பெண்களுக்கு மட்டும் கற்பு என்பது இல்லை. ஆண்களுக்கும் கற்பு உண்டு என்பதை இங்கு நயம்படக் கூறுகின்றார். தன் குமரி - 6 ம் வே. தொகை. தென் குமரி தெற்கின் கண் உள்ள குமரி. ஏழாம் வேற்றுமை யுருபும் பயனும் உடன் தொக்க தொகை.

## ஏழுவகைத் தோற்றம்

எண்சீர் விருத்தம்

நலந்திகழுந் தேவர்களு மனித ராவர்
நாடறிய மனிதர்களுந் தேவ ராவர்
விலங்கினொடு பறவைகளு மனித ராவர்
மிக்கபல தாவரமும் மனித ராவர்
நிலந்தனிலே யூர்வனவு மனித ராவர்
நீர்வாழுஞ் சாதிகளு மனித ராவர்
குலந்தனிலே யிதானதென்று அறியும் பேர்க்கு
குணத்தாலே அவர்குலத்தைக் கூற லாமே 163

நன்மை விளங்கும் தேவர்களும் மனிதராகவும், உலகறிய மனிதர்களும் தேவராகவும் ஆவார்கள். விலங்கும் பறவைகளும் மனிதராகப் பிறக்கும். மிகுதியான பலவகைத் தாவரங்களும் மனிதராகப் பிறக்கும். பூமியில் ஊர்ந்து செல்லும் உயிர்களும் மனிதராக அமையும். நீர் வாழ்கின்ற உயிர்களும் மனிதத் தன்மை பெறும். குலத்தால் இத்தகையவர் என்று அறிந்தால், அவரது குணத்தைக் கொண்டே முடிவு செய்யலாம்.

இப்பாடல் குணத்தைக் கொண்டு குலத்தை உறுதி செய்தல் வேண்டும். அல்லாமல் மனித வடிவை மட்டும் பெற்றிருக்கின்றார் என்று கருதி அவரை மனிதர் எனல் இயலாது என்பதை விளக்குகிறது இதன் உட்பொருள். "குலத்தளவேயாகும் குணம்" (மூதுரை. செய். 7,) என்பதனையு முணர்க.

### வலைச்சியார்

எண்சீர் விருத்தம்

தாமகளு பூமகளு மிருக்கு மார்பன்
நாவலர்கள் கொடியகலி யிருளை நீக்கு
மாமதியை முகம்பெரிய நாக மேந்திரன்
மருவுபெஞ்சை நாட்டில்வரும் வலைச்சி யாரே
காமனுக்குப் பெருங்கவலை கொடுத்தீர் சொந்தக்
காரனையுங் கைவசமுங் கண்ட தில்லை
தாமரையின் வளையமதைக் காட்டி யென்கை
தனக்கு ரெண்டு பிடிகிழங்கு தந்திடீரே 164

கல்வியும் செல்வமும் அமைந்த மார்பினன். நாவில் வல்ல புலவர்களுடைய கொடுமை மிகுந்த வறுமைத் துன்பமாகிய இருளை நீக்கும் சிறந்த சந்திரன் போன்று முகம் விளங்கும் பெரிய நாகமேந்திரன் வாழும் பெஞ்சை நாட்டில் வீதி வழியே வரும் வலைச்சியாரே! மன்மதனுக்கு மிகவும் கவலையை உண்டாக்கி விட்டீர், உறவினனைக் கையிட்டுத்தே காணவில்லை. தாமரைப் பூப் போன்ற அழகான வட்டமான மார்பகங்களைக் காட்டி, என் கைக்கு இரண்டு பிடி அளவு கிழங்கு தருக - என்று கூறுவதாகஉள்ளது இப்பாடல்.

தில்லை - சிதம்பரத்தின் பெயர். இது பாட்டின் போக்கில் தொனிப்பது உணர்க. வலைச்சி - வலைஞன் என்றதற்கு ஏற்ற பெண்பாற் பெயர். தாமரை மன்மதன் தொடுக்கும் ஐந்து வகை மலர் அம்புகளுள் ஒன்று. இதனை மன்மதன் எடுத்து விடும் போது காமமுற்றவன் செத்தே போய் விடுவான் என்பர். மிகுந்த காமத்தால் அவதிப்பட்டு வருந்துவான்.

பிடி கிழங்கு என்பது ஒரு கையால் எடுத்துப் போடுமளவு கிழங்கு. இரண்டு பிடி - இரண்டு கைகளாலும் பிடித்துக் கொள்ள அழகிய தனங்களைத் தர மாட்டீரோ என்பது குறிப்பும் நயமுமாம். கல்வியும், செல்வமும் இருத்தல் பெரும்பாலும் ஓரிடத்தில் அமைவதில்லை. நாகமேந்திரனிடம் இரண்டும் ஒருங்கிருத்தல் சிறப்பு.

கொடிய கலியிருளை நீக்கும் மாமதிமுகம் - மிகவும் துன்பந் தருவதான இருளை விலக்கும் சிறந்த சந்திரன் ஆகிய முகம். பெரும்பாலும் கதிரவனுக்குத் தான் இருள் போக்கும் குணம் உண்டு. சந்திரனுக்கும் கூறப்பட்டது. மாமதி முகம் - உருவகம். மாமதி - உரிச்சொற்றொடர். கலியிருள் - உருவகம்.

வலைச்சி - வலை மூலம்மீன் பிடிக்கும் தொழில் நடத்துபவரின் மனைவி. கலம்பகத்தின் 18 வகை உறுப்புக்களுள் வலைச்சியார் என்பதும் ஒன்று. சொந்தக்காரனை கைவசமுங் கண்டதில்லை, உறவினனை தலைவனை (கைவசமாக) தன் இஷ்டப்படி நடத்தச் செய்யத் தக்கவனைக் காணவில்லை. தாமரையின் வளையமைதைக் காட்டி - அடியில் பருத்தும் நுனியில் குவிந்தும் இருப்பது காண்பதற்குத் தாமரையின் அடிப்பாகம் வளைந்தும் நுனி குவிந்தும் காட்சி தரும். அதனால் தலைவனை வசப்படுத்தத் தக்க முலையைக் காட்டித் தன் வசப்படுத்தி விடுவதாகச்செம்படவச்சி கூறுவதாக அமைகிறது.

ரெண்டு பிடி - கடன் வாங்கச் செல்பவர் கேட்கும் போது சாதாரணமாக 'ஒரு இரண்டு படி', என்று கேட்பது வழக்கம். அதுபோல் மரவள்ளிக் கிழங்கு, வள்ளிக்கிழங்கு இவற்றை வாங்கித் தின்று கொண்டே செல்வார்கள். இது இன்றும் வயற்காடுகளிலும் கிராமங்களிலும் நடக்கும் வழக்கம். வலைச்சியாரும் தனக்கு இரண்டு பிடி கேட்கின்றாள். பிடிகிழங்கு - கையினால் பிடிக்குமளவு வளர்ச்சி பெற்ற வள்ளிக் கிழங்கு.

## தித்திப்பதும் ருசிப்பதும்

வெண்பா

நாமாகத் தேடி வெகு நாளாக வைத்திருந்து
தேமாங் கனியுடைய சித்திரங்கேள் — பூமாதே!
காறுமல் தித்திக்குங் கற்கண்டு போல்ருசிக்கும்
ஆறுறு நாற்பத்தொன் றும். 165

நாமே தேடி நீண்ட நாளாகப் பாதுகாத்து வைத்திருந்து தேமாங்கனி போன்ற இன் சொல் பேசுபவளே! ஓவியத்தில் எழுதப் பட்ட சித்திரம் போல்வாளே! தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமி போல்வாளே! கேட்பாயாக, கார்ப்புச் சுவையில்லாமல் இனிக்கும் கற்கண்டினைப் போல் சுவையுடையதாயிருக்கும். பொறுத்திரு; பொறுத்திரு. தொங்குகின்ற பத்திரமான ஒன்று உன்னைத் தப்பாமல் வந்தடையும்.

ஆறுாறு - முப்பத்தாறு. இவை தத்துவங்கள். முப்பத்தாறு தத்துவங்களுடன் பஞ்ச பூதங்களையும் தத்துவங்களாகக் கொள்ள நாற்பத் தொன்று அமையும் **தேமாங்கனி** - மாங்கனி வகை களுள் ஒன்று. யாப்பிலக்கணத்துள் அமிதசாகரர் நேர்நேர்நேர் என்பதற்குத் தேமாங்காய் எனவும், நேர்நேர்நிரை என்பதற்குத் தேமாங்கனி எனவும் வாய்பாடு கூறுவர்.

இப்பாடலை இவ்வாறு கொள்வதும் பொருந்தும் போல் தோன்று கிறது. ஆறும் ஆறும் நான்கும் பத்தும் ஒன்றும் என எண்ணும் மையாகக் கொண்டு பொருள் காண 27 இருபத்தேழு என அமை யும். இது மகளிருடைய வயதாகக் கணக்கிடும் போது இன்ப மனுபவிக்க ஏற்ற நிலையாதலினாலும், காருமல் தித்திக்கும் கற்கண்டு போல் ருசிக்கும் என்று கூறுவது அகப்பொருள் பாடலாகக் கொள்ள வும் அமையும். மகளிரின் ஏழு பருவங்களுள் அரிவைப் பருவ மென்பது பொருள். சித்திரம் போல்வாளைச் சித்திரம் என்பது உவமையாகு பெயர். பூமாது- இலக்ஷ்மி போன்ற அழகுடையவளே! நீ இன்பத்தைத் தரத்தக்கவள் என்பது கருத்து.

### தற்காலப் புலவர்க்குத் தேவை

#### கட்டளைக் கலித்துறை

நாற்காலி வேண்டும் நலமேசை வேண்டும் நனுகுபல
நூற்காத லோடும் அடுக்கிவைக் கப்பீரோ-நோக்கவரும்
தாற்கா லிகநாக ரிகத்தர்தங் கட்குத்தாம் பூலமன்று
ஏற்காப்பி வேண்டும் இவர்தாம் புலவர்கள் என்பவரே.
**166**

இக்காலத்திலுள்ள புலவர்கள் என்பவர்களுக்கு வசதிக்காக நாற்காலி, நன்குஉதவும் மேசை, ஆவலுடன் படிக்கத்தக்க நூல்களை அடுக்கி வைக்க பீரோ, அவ்வப்போது பார்க்க வருகின்றவர்களுக்கு அளிக்க நாகரிகமுடையவர்களுக்குத் தாம்பூலத்துடன் (இக் காலத் தில் பருகுவதற்கேற்ற பானமான காப்பியும் தேவை என்று சொல் வார்கள்.

நாகரிகத்தர் - "நஞ்சு முண்பர் நனி நாகரிகர்".
"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர், நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். (குறள் 580)
தாம்பூலம் - வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு புகையிலை என்ற மணம் நிறைமங்கலப் பொருள்.

### நடராசப் பெருமானைப் பற்றிய

வெண்பா

நானே யடிமையெனி னானே குடிமையெனி
னானேயுன் பாவல னாமென்னின் — ஞானத்
திசையான பாகம் பிரியாள் நடேசா
வசையா மணிநாக் கற 167

நானே அடிமை; நானே குடிமை; நானே உனது பாவினைப் பாடும் புலவனும் என்றால், ஞானத்தின் இசையான, பாகம் விட்டுப் பிரியாதவனான ஆறு எழுத்துக்களாலான நடேசனே! அருள்க. நாவினின்றும் ஞானமே வடிவானவள் நாவினை விட்டு எப்போதும் பிரியமாட்டாள் பாகம் பிரியாள் என்பது இறைவியின் பெயர், நடேசன் என்பது இறைவன் பெயர்,
அசையா-ஈறுகட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

### அபய குலோத்துங்கனைப் பற்றி சித்தியார்

கட்டளைக் கலித்துறை

நின்றார் வியப்பக் கடன்மலை யாக்குவன் நீள்கடலைக்
குன்றாய்க் குவிப்ப னிவையல்ல வித்தைக்
கொடுங்கலியை
வென்ற னபயன் புரக்கின்ற நாட்டில் வெறுமையுற்றோ
னென்ற லொருவனைக் காட்டுவ னேகொணர்ந்திப்
பொழுதே 168

நின்றவர் கண்டு ஆச்சரியப்படும்படி கடலை மலையாகஆக்கு வேன். (கடன் மல்லை யான மாமல்லபுரம்) நீண்ட கடலைக் குன்று போல் குவிப்பேன். இவை மட்டும் வித்தைகள் அல்ல. கொடிய துன்பத்தை வென்ற அபயன் காக்கும் நாட்டில் வறுமையுற்றான் ஒருவனை இப்பொழுதே கொண்டு வந்து காட்டுவேன்.

மாமல்லபுரத்தில் திருமால் கிடந்த திருக்கோலத்தில் விளங்குகின்றார். பெருமாள் பெயர் தலசயனப் பெருமாள். தாயார் - நில மங்கைத் தாயார். கடலை மலையாகவும், கடலைக் குன்றாகவும் என்பதில், கடலை மலையாக்குதலும், குன்றாக ஆக்குதலும் சித்து விளையாடல்களுள் ஒன்று. கடலை ஒரு வகை தானியம். நவ தானியங்களுள் ஒன்று. கடலையை ஒன்று சேர்த்துக் குன்று போல் குவிப்பேன் என்பது நயம். கொடுங்கலியை வென்றனபயன்- வறுமைத் துன்பத்தைப் போக்கினான் என்றபடி.

கொடுங்கலி! பண்புத்தொகை, கொடுமையைத் தருங்கலி என்று என்றால் இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனுமுடன் தொக்க தொகை.

## மெய் தொட்டுப்பயிறல்

வெண்பா

நினைப்பேன் திடுக்கிடுவேன் நித்திரையி லுன்தனையும்
அணைப்பேன் சுகத்தை யறியேனே — மனப்பால்
குடித்தால் தீருமோ உன்னதரந் தன்னைக்
கடித்தாலும் தீருமோ தான். 169

உன்னை நினைப்பேன், திடுக்கிட்டுப் போவேன்; இரவில் உன்னையும் அணைப்பேன்; அதற்குரிய இன்பத்தை உணரேன். மனப்பால் குடித்தால் வயிறும் உள்ளமும் குளிர்ந்து நிரம்பி விடுமா? உனது உதட்டைக் கடித்தாலும் அவா நீங்குமோ? நீங்கா. உன்னை என்னால் பிரிய இயலவில்லை.

மனப்பால் குடித்தல், அதிகப்படியாக எண்ணமிட்டுக் கொண்டே யிருத்தல். வீண்கற்பனைகளை மனப்பால் குடித்தல் என்பது வழக்கம். மனதிற்கு எதிர்பாராத செய்தி கேட்டாலோ, நிகழ்ச்சி நடைபெறுமெனத் தோன்றினாலோ, ஏற்பட்டாலோ அதிர்ச்சியான அந்நிகழ்ச்சி உண்டாக்கும் உணர்வே திடுக்கிடல் ஏற்படக் காரணமாகும்.

## நெஞ்சுக்கு

நினைவது வாய்மை மொழிவது மல்லால்
கனைகழ லீசனைக் காண வருதல்
கனைதழ லீசனைக் காண்குற வல்லார்
புனைமலர் நீர்கொண்டு போற்ற வல்லார்க்கே 170

நினைப்பது மல்லாமல் ஒலிக்கின்ற கழலையுடைய இறைவனைக் காண வருதலும். அவ்வாறு ஈசனைக் காண்பதல்லாமல் சூட்டுகின்ற மலர்களையும் தண்ணீரையும் கொண்டு நீராட்டிப்போற்ற வல்லவர்களும் நினைப்பதும் சொல்வதும் வாய்மையே யாம்.

நினைவது மொழிவதும் வாய்மை - "எங்கோமான், வாய்மையே கண்டாய் வலி" (நள வெண்பா) கர்மண்யேகம் வசஸ்யேகம் மனஸ்யேகம் மகாத்மனும், கர்மண்யன்யத் வசஸ்யன்யத் மனஸ்யன்யத் துராத்மனும்" (பகவத் கீதை). கனைகழல் - வினைத்தொகை. நீர் கொண்டு போற்றதலாவது-நீரால் இறைவனுக்கு அபிடேகம் செய்தல். புனை மலர் கொண்டு போற்றல் எனவும் இயைத்து, அழகான மலர்களால் இறைவனை அர்ச்சித்துத் துதிக்க எனவும் பொருள் காண்க.

ஈசன் - (ஈசாவஸ்ய உபநிஷத்) என்றும், ஈசானஸ்ஸர்வவித் யானும், ஈச்வரஸ் ஸர்வ பூதானும், ப்ரம்மாதிபதிர், ப்ரம்மணோதி பதிர் ப்ரம்மா சிவோமே அஸ்து ஸதாசிவோம்!" (உபநிடதம்) வேதம் ஈசுவரனின் ஐந்து வகை முகங்களான ஸத்யோஜாதம்,வாம தேவம் அகோரம் தத்புருஷம் ஈசானம் என்பவற்றுள் ஒன்றான ஈசன் என்ற பெயர்ப்ரல் காண்க.

## அமுதசாகரர் மீது பாடியது

கட்டளைக் கலித்துறை

நீகர வாதுநெஞ் சேதொழு வாழி நிகரில்பன் னூற்
காகர மாய்நின்ற வாதியன் னனருள் சேரமிர்த
சாகர மாமுனி தண்டா ரரசவண் டார்மகுட
சேகரஞ்சேரச்சிறை வண்டு சேருந் திருந்தடியே. 171

ஓ மனமே! ஒப்பற்ற பல நூல்களுக்கு இருப்பிடமானவன். அருளுடையான். அமுத சாகரன் எனும் பெயரினன். முதல்வன் போல்வான். தலைமையான வண்டு படியும் வளம் பொருந்திய குளிர்ந்த மலர்மாலையைத் தலையில் சூடியவன். அவன் அடிகளையே சேர்ந்து தொழுதிரு. அதனால் நன்கு வாழ்வாய்.

## பொய் முதலியன பிறப்பிடம்

நெய்யி ருப்பது நீண்ட வுறியினில்
மையி ருப்பது மாதர்கள் விழியினிற்
தைபி றப்பது மார்கழி சாய்ந்தபின்
பொய்பி றப்பது புலையர்தம் வாயிலே. 172

நீண்ட வுறியில் நெய்யிருக்கும்; மகளிர் கண்களில் மை தீட்டப் பட்டிருக்கும்; மார்கழி சென்ற பின் தை பிறக்கும்; கீழோர் வாயில் பொய் வரும்.

"புலவர்கள் வாயிலே" என்பது வேறு பாடம்.

## போலி ஞானி

வெண்பா

பகலெல்லாம் ஞானிகளாய்ப் பாதிரவின் மோகம்
மிகுதலாற் காமிகளாய் மேனி - அகவிளக்கம்
இல்லதனுற் சையோகத் தின்பநுகர் ஞானிகளே
நல்லவர்போற் காண் பதெவ னன்கு. 173

பகல் முழுவதும் ஞானிகள் போன்று, நடு இரவுக்கு மேல் காம இச்சை மிகுந்து விளங்குவதால், காமமுடைய காமிகளாகப் பொருந்தி, உள்ளத்தில் தெளிவில்லாததால் இன்பந்துய்க்கும் (அனுபவிக்கும்) ஞானிகளை, நல்லவர்களைப் போல் காண்பதெப்படி? காண முடியாது. அவர்களை ஞானிகளாக நம்பமுடியாது என்பது பொருள்.

ஞானம் - "துறவும் தயவும்" "அரிதரிது மானிட ராதலரிது" எனத் தொடங்கும் ஔவை பாடலுள்,

"ஞானமும் கல்வியும் நயத்த லரிது
ஞானமும் கல்வியும் நயந்த காலையும்
தானமும் தவமும் தான்செய லரிது"

என வருவதறிக.

## சிங்கத்தின் குணம்

வெண்பா

பசியா லிளைப்பாற் பருவத்தா னோயால்
நசையாற் பகையா னழிவி - நசிய
இடுக்கண் டலைவந்தக் கண்ணுறு மரிமா
கொடிப்புற் றறிக்குமோ கூறு. 174

சிங்கம், பசியாக இருந்தாலும், இளைப்பாக இருந்தாலும், இளமை அல்லது முதுமை என்ற எப்பருவமாக இருந்தாலும், நோய் வாய்ப்பட்டிருந்தாலும், ஆசையுடன் இருந்தாலும், பகைமையுடனிருந்தாலும், தவறியும் அழிவு தரும் துன்பம் வந்தாலும், கொடிகளையும், புற்களையும் கடித்துத் தின்னுமோ? தின்னாது என்க.

நசிய - நச்சிய என்று இடைக் குறையாக வைத்தும் பொருள் கொள்ளலாம். நசிய - அழிய என்றும் பொருள் உண்டு. பசி - "பசி வந்திடப் பத்தும் பறந்து போம்". 'ஈன்றாள் பசிகாண்பா ளாயினும் செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை' —(குறள்). "புசித்துப் புசி" என்பது ஔவை வாக்கு. 'பசித்தோர் முகம் பார்' என்பது இராமலிங்க அடிகளார் கூற்று. நசை - 'நம்பும் மேவும் நசையாகும் மே' (தொல்—உரியியல்). "நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள் நச்சு மரம்பழுத் தற்று"—குறள் 1008. நச்சினார்க் கினியர் நச்சர் எனப்படுவர். இடுக்கண் தலைவருதல் — "இடுக்கண் வருங்கால் நகுக அதனை, யடுத்தூர்வ தஃதொப்ப தில்" (குறள் 621 கண் - ஏழனுருபு. கண்ணும் - உம்மை இறந்தது தழுவிய எச்ச வும்மை. அரிமா - சிங்கம். "அரிமா நோக்கு தவளைப் பாய்த்து" —நன்னூல். அரி - பல பொருள் தரும் ஒரு உரிச்சொல். கொடிப் புல் கறிக்குமோ - "புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது" என்ற பழமொழி இங்கு நினைவுகொள்ளத் தக்கது. கொடிப் புல் - கொடி யையும் புல்லையும், என்று பொருள்; உம்மைத் தொகை. கறித்தல் - பல்லால் கடித்துத் தின்னல்.

## சான்றோர்

### வெண்பா

பசுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர்
முசுப்போல் முள்காந் திருப்பர்-பசுத்தான்
வெருளினு மெல்லாம் வெருளுமஃ தன்றி
மருளினு மெல்லா மருண்ம் 175

பசுப்போன்ற தன்மையுடையவர் முன்னர் அகப்பட்டால் நற்குணமமைந்த அறிவு கல்வி ஒழுக்கங்கள் மிகுந்த மேலோர் வாடியிருப்பர். பசு தான் அஞ்சிப் பயந்தாலும் பயப்படும். அதுவன்றி மயக்கத்தால் மயக்கமுற்றிருப்பினும் இருக்கும்.

பசு - சாதுத் தன்மைக்கு ஏற்ற ஒரு விலங்கு. சான்றோர்- சான்றோர் சான்றோர் பால ராப, சாலார் சாலார் பால ராகுபவே" —புறம் 218. முசு—குரங்கு, மானெனினும் ஆம். முசுக்கலை. மருண்ம்- மகரக் குறுக்கம்.

## இதனைச் செய்தால் இது இல்லையெனல்

அறுசீர் விருத்தம்

பஞ்சமோர் நாளு மில்லை பயிர்த்தொழில் செய்வோர் கட்கு
மிஞ்சிய பயமு மில்லை வீறுசாக் கிரதையோர் கட்கு
வஞ்சமுங் கலகமில்லை மவுனமா யிருப்போர் கட்கு
கொஞ்சமும் பயமு மில்லை குறைவிலா ஜபஞ்செய்
வோர்க்கே 176

பயிர்த்தொழில் செய்வார்க்கு ஒருநாளும் பஞ்சம் ஏற்படாது. மிகவும் முன் எச்சரிக்கையுடையவர்களுக்கு எவ்விதப் பயமுமில்லை. பேசாமல் மவுனம் மேற்கொண்டவர்க்கு வஞ்சனையும் கலகமுமில்லை. குறைவிலாத (நிறைவு தரும்) ஜபம் செய்வோர்க்கு என்றுமே பயமில்லை. மோனம் - மவுனம்.

## (வழங்கும் பிரபு) இறந்தமைக் கிரங்கல்

விருத்தம்

பண்டுநான் பறித்தெறிந்த மணமலர்க ளேதினி
பானுலே சேவித்து விட்ட மந்திரங்க ளேதினி
முண்டராய்த் திரிந்தபோ தெறிந்தநீர்க ளேதினி
மூளவுஞ் சிவாலயங்கள் சூழவந்த தேதினி
அண்டர்கோ னிருப்பிடத் தறிந்துணர்ந்த ஞானிகள்
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்ப தில்லையே.
177

முன்பு நான் பறித்து எறிந்த மணம்வீசும் மலர்கள் எங்கே இனி உள்ளன? விடியற்காலையில் புகழ்ந்துகூறிய மந்திரம்போன்ற புகழ்மொழிகள் இனி எங்கே உள்ளன? மொட்டையடித்துக்கொண்டு அங்குமிங்கும் திரிந்தபோது வீசியெறிந்த நீர் எங்கே உளது? திரும்பவும் சிவாலயங்கள் சுற்றி வருதலெங்கே? அண்டங்களுக்குத் தலைவனான இறைவன் இருப்பிடத்தை அறிந்து உணர்ந்த ஞானிகள் ஆராய்ந்து கண்ட கோயில் தெய்வம் என்று (கைகூப்பக்) கையெடுப்பது இல்லவே இல்லை. புரிந்த வள்ளல் மறைந்ததால் இவை நிகழ வழியில்லை.

புரவலன் இறந்து போனமையால் இனி இவை நிகழவழியில்லை அவனைப்போல் இச்செயல்களுக்கு உதவுபவர் இனி எங்கே யார் இருக்கின்றார் என்று இரங்கிக் கூறியபடி.

மூலப்பிரதியிலுள்ளபடி அச்சிடப்பட்டுள்ளது. இருவரிகள் இல்லை.

## சண்பக நல்லூர் பெரியசாமி மீது வண்டு விடு தூது

அறுசீர் விருத்தம்

பண்பயிலும் புலவீர்கா ளெமைப்போல
வல்லவரார் பாரின் மீதே
கண்பயில்பொன் னம்பலத்தைக் காவிரி
சூழ்வட கரையிற் கண்டே
திண்புவியில் மானிடம் பெரிய
சாமியும் புகழ்ந்துதெரி சித்தோம்பின்
சண்பகநல் லூரதனில் வண்டுவிடு
தூதினையும் செலுத்தி னோமே 178

இசைபாடும் புலவர்களே! எங்களைப்போல் வல்லமையுடையவர் எவர் உளர்? உலகில் கண்ணால் தரிசிக்கும் பொன்னம்பலத்தைக் காவிரியாறு சூழ்ந்துவரும் வடக்குக் கரைப்பக்கத்தே சண்பக நல்லூர் இருக்கக் கண்டோம். வலிமையான உலகில் பெரிய சுவாமி என்ற தலைவனைப் புகழ்ந்து பாடி வண்டையும் தூதுசெலுத்துவோம்.

இப்பாடலில் பெரிய மனிதரான பெரியசாமி சண்பகநல்லூரில் இருந்து காப்பாராகுல் அவரது உதவிக்காக அவர்மீது "பெரியசாமி வண்டுவிடு தூது" என்ற நூலையும் எழுதுவோம் என்பது பொருள். காவிரியின் வடகரையில் உள்ளது (பொன்னம்பலம்) சிதம்பரம். அதன் பக்கத்தே உள்ளது சண்பக நல்லூர். பொன்னம்பலம் - சிதம்பரத்திலுள்ள சிற்சபை. இது காவிரியின் வடப்பக்கத்தே இருப்பது, பெரியசாமி வண்டுவிடுதூது என்ற நூல் இப்பாடலெழுதியபுலவரால் எழுதப்படிருக்கவேண்டும் என்றுதோன்றுகிறது. ஒப்புதல் - "ஓம்பா ஈகை உவகை உள்ளமொடு" (புறம்). "ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன்" (குறள் 1155).

## உபதேசம் பெறுமுன் எவையெவை இழுக்கின்றன என்பன

விருத்தம்

பணப்பே யொருபுற மிழுக்கவென் னுடையசிறு
பாலரொரு புறமிழுக்கப்
பணியென்று மணியென்று துணியென்று சொல்லுமென்
பாவையொரு புறமிழுக்கக்
கணப்பொழு தடங்கா திருக்கின்ற கோபமென்
னெஞ்சினைப் பிடித்திழுக்கத்
தெரிவையர்கள் முகவலையி லெவ்வாயிழுக் கப்பொருள்
செங்கைதந் தோரிழுக்கக்
கணப்பேய்க்க ளித்தெனை யிழுக்கவென் நெஞ்சினைக்
கவலையா னதுமிழுக்கக்
கங்குகரை யில்லாக் கடற்கரையி லேமனங்
கட்டுண் டிருந் தலைன்றன்
குணப்பேயகற் றியுன் சிவஞான வுபதேசக்
குறிதனை யுரைத்தருளுவாய்
கொங்குமா மலர்தூவி தூங்கமா தவர்தாழுங்
கொங்கணேச் சுரதேவனே. 179

கோங்கமலர் தூவித் தூய்மையானவர் பணியும் கொங்கணேச்வர தேவனே! பணம் என்ற பேய் ஒருபுறம் இழுக்க, சிறிய குழந்தைகள் ஒரு புறமிழுக்கப் பணி, மணி, துணி என்று மனைவி ஒருபுறம் இழுக்க, சிறிதும் அடங்காத கோபம் ஒருபக்கம் எனது நெஞ்சை யிழுக்க, மகளிர் முகமாகிய வலை என்னை இழுக்க, பொருள்தரும் சிவந்த கையைத் தந்தவர் இழுக்க, கூட்டமான பேய்கள் இவ்வளவும் இழுக்க, என் நெஞ்சைக் கவலையிழுக்க அளவு காண முடியாத கடற்கரையிலே மனம் கட்டுப்பட்டு இருந்த எனது குணமாகிய பேயை நீக்கி, உனது சிவஞானமான உபதேச அடையாளத்தை உரைத்து ஆட்கொள்வாய். கொங்கு தேன். கொங்கணேச்வரர்-கொங்கண நாடு. பணி-ஆபரணம். பணப்பேய்-உருவகம்.

### தோழி பசப்பறிவுறுத்தல்

கட்டளைக் கலித்துறை

பணியேன் சுரும்பைப் பகையே னயிலைப் பயப்பினிஞ
னணியே னணிந்தமையுஞ் செங்கோன்மை
பருளுநமென்று
துணியே னபயன் திருக்கொற்ற வாயிலிற் றூங்குகின்ற
மணியே மருந்தினி யன்றிமற் றேது மருந்திலையே 180

வணங்கேன். வேலைப் பகைத்துக்கொள்ளமாட்டேன். பசப்பை இனி நான் அணியமாட்டேன். உமது செங்கோன்மையை எனக்கு அருளுமென்று துணியமாட்டேன். அபயனது அழகிய வெற்றிமிக்க அரண்மனை வாயிலுள் தொங்குகின்ற மணியே மருந்து. வேறு தேவையில்லை. அதுவே பசலை தீர்க்கும் தக்க மருந்து,

பயப்பு-பசலை. "பசலை தணிவாமே வங்கத்துச் சென்றோர் வரின்" (யாப்பருங்கலம்). கொற்றம் - வெற்றி. அபயன் - குலோத்துங்கன் - சோழமன்னன் வழிவந்தோன். மனுநீதி யாண்ட பரம்பரையினன், மனுநீதி மன்னன் ஆண்ட காலத்தில் நியாயம் வழங்க எப்போதும் அவனை யழைக்கத் தனது வாயில் முன், ஆராய்ச்சிமணி கட்டித் தொங்கவிட்டிருந்தான். நீதி வேண்டுவோர் அம்மணியை யசைத்து, ஒலிப்பர். ஒலி கேட்டு வந்து நீதி வழங்கினன் மநு. தன் கன்று அரசகுமாரனால் இறந்ததை மன்னனுக்குணர்த்த, வாயில் மணியை வந்து அசைத்தது தாய்ப் பசு. ஒலி கேட்டு வந்து உண்மையறிந்து, அதுபட்ட துன்பம் போல் தானும் பெறத் தன் மகனையே தேர்க் காலில் இட்டுத் தேரைச் செலுத்தி நீதியை நிலை நாட்டினான் மன்னன். அவன் செய்த செயலை உபசார வழக்காக இவனுக்கும் ஏற்றிக் கூறப்பட்டது. இவ்வாறு முன்னோர் பெருமையான செயலைத் தனக்கும் கூறுவதைப் பெருமையாய் எண்ணினர் முற்கால அரசர்கள் என்பதற்குப் பல ஆதாரங்களுள்ளன.

தூங்குதல் - தொங்குதல் என்ற பொருள். "தூங்கு கையான் ஓங்கு நடைய" (புறம்) என்ற தொடரால் விளங்கும். தலே வாயில் கதவுகளில் மணிகள் பொருத்தியிருப்பதும் இக்காலத்தே கோவில் கதவுகளில் அமைத்திருப்பதைப் பார்த்தும் அறியலாம். கொற்ற வாயில் - பகைவரைக் கொன்று வென்று நுழையும் வாயில். கொலே செய்து ஏற்படும் ஜயத்தால் அமைந்தது. கொல் - பகுதி. கொற்றம் - தொழிற் பெயர்.

## மானுவேல் மீது பாடியது

கட்டளைக் கலித்துறை

பந்தைப் பழித்துப் பருத்துப் பசும்பொற் பணியணிந்த
விந்தைப் பரிமள மென்முலே மான்மயல் மீறினள்சேர்
முந்தைப் பலகலே யுந்தேர்ந் தறிவின் முதிர்புலவோர்
சிந்தைப் படியருள் செய்மானு வேலெழில் சித்தப்பனே.
181

பந்தைப் பரிகாசம் செய்து, பருமனையுடையதாய்ப் பசும் பொன்னுல் செய்த ஆபரணங்களேயணிந்த ஆச்சரியத்தை யுடைய நன்மணம் வீசும் மென்மை வாய்ந்த முலேயையுடைய மான்போன்றவள் மயக்கம் மிகுந்துளாள்; சேர்ந்து விளங்கும் பழமையான பலகலேகளேயும் கற்றுத் தேர்ந்து, அறிவினுல் நிரம்பிய புலவர்கள் மனக்கருத்துப்படி (எண்ணம் போல் அருள் செய்வாய்). மானுவேல் ஆகிய அழகிய சித்தத்தில் அமைந்திருக்கும் தந்தை போல்வானே; கொடுக்க வேண்டுமென்று நல்ல எண்ணங் கொண்டவனே!

மான் - மான் போன்ற மருண்ட பார்வையும், துள்ளி ஓடும் இயல்புமுடைய பெண்ணுக்கு ஆகி வந்ததால் உவமை யாகு பெயர். பசும் பொன்- சாத ரூபம் கிளிச்சிறை ஆடகம் சாம்பூநதமென நால் வகைப்படும். சாதகும்ப மென்ற மலேயில் தோன்றியதால் சாத கும்பம் சாத ரூபமென்றும், சற்றுப் பசுமை நிறமுடையது கிளிச்சிறை யென்றும், மிக்க ஒளியுடையது ஆடகம் என்றும், மேருவின் அருகில் நாவற் பழ ரஸத்தால் உண்டான நதியிற் தோன்றியதால் சாம்பூநதம் என்றும் பொன் 4 வகைப்பெயர் பெற்றது. சிவ மூர்த்தியின் வீரியம் மேல் நோக்கியபோது சிறிது பூமியில் விழுந்தது. அது அக்கினியில் சென்றது. ஒளியுடன் ஒளி கூடிப் பொன் ஆகியது. அக்கினியும் சந்திரனும் கூடியதே பொன், என்று பாரதம் அநுசாஸன பருவம் கூறும் எனவும், சிவ வீரியத்தை வாயு அக்கினி இருவரும் கங்கையில் விட்டதால் பொன்; பிறந்தது காங்கேயமெனவும் பெயர் என்று பலவகையாகக் கூறுவர்.

## களந்தைச்சாலி பயல்மீது பாடிய

வெண்பா

பரவி யடிபணிந்து பற்காட்டிக் கெஞ்சி
புரவி தனைக்கொணர்ந்து போனான் - தரவா
படிக்கா சுயஞ்சா லிடையல் களந்தை
மடிக்காசு வாங்கி மகன் 182

களந்தையிலுள்ள அழகிய (சாலியன்) வண்ணான் மகன், புகழ்ந்து காலைவணங்கிப் பல்லைக்காட்டிச் சிரித்துக் கெஞ்சிக் குதிரையைக் கொடுத்து விட்டுச் சென்றான். அவனுக்குக் கொடுக்க வேண்டிய படியான, மாதா மாதம் தரும் அளவு கூலி கொடுக்க லாமா?

பையல் என்பது (அந்தப்பய) என்று இந்தக் காலத்திலும் தஞ்சாவூர் மக்கள் வழங்கும் சாதாரணமான சொல். அலட்சியமாக வும், சிலசமயம், சினத்தில்கூறும்சொல். மாதாமாதம் வீட்டுப் பண்ணையில் வேலை செய்பவருக்குத் தரும் கூலிக்கு, படி என்று பெயர். இந்தக் காலத்தில் லிட்டர் என்பதைத் தலை தட்டி அளப்பது போல் அக்காலத்தில் முன்பு குவியலாக (லிட்டர்) பாத்திரம்போல் படியென்று வைத்துக் கொண்டிருந்தார்கள். கிராமங்களில் சிற்சில இடங்களில் படி இப்போதும் உண்டு. பழைய அளவுப் பெயர்களுள் ஒன்று,

குதிரை - (குறிப்பு மொழி) சாராயத்திற்குப் பெயர் என்று கொள்ளும் போது மரமேறி என்றும், சாலியர் என்றும், தென்னை மரம் ஏறிக் கள் இறக்குவோர் என்றும் பொருள்.

## வண்ணாத்தியார்

விருத்தம்

பருதிபகை படக்கிழிக்கும் விருது வேந்தன்
பாகசாதனன் பெரிய நாக மேந்திர
னிருதரசர் திறையளக்கும் பெஞ்சை நாட்டில்
நேர்த்தியா ரென்றுவரும் வண்ணாத்தி யாரே
கருவறிந்து மயலழுக் கைவாங்கி யெங்கள்
கணவனுக்குக் கைமாற்றுக் காரனாக
வருச மொப்பிச் சேலையெடுத் திடுவீ ரானால்
மாரனுக்கு மாராப்புப போட லாமே. 183

சூரியன்போலும் பகைவரை அழித்துப் பலவிருதுகள் பெற்ற அருச்சுனன்.

அருச்சுனன் — பாகசாதனன் போல் அழகிய பெரிய நாகமேந்திரன்முன் பகையரசர் திறை கொண்டுவந்து அளக்கும் பெஞ்சைநாட்டில் அழகரென வருகிற வண்ணாத்தியாரே! கர்ப்பத்தைத் தெரிந்து மயக்கந்தரும் அழுக்கைநீக்கி, எங்கள் புருடனுக்குக் கைம்மாற்றிக்கொடுப்பவளாக ஒரு வருடம் மனமிசைந்து தினமும் சேலையெடுத்துக்கொண்டு போய்த் துணி வெளுத்துக் கொடுத்தால் மன்மதன் போன்ற காதலனுக்கு மேலாடை போடலாம்.

பழங்காலங்களிலும் இக்காலங்களிலும் வண்ணாத்திகளுக்கு நாடி பிடித்துப் பார்த்து உடம்பிலுள்ள கூறுகளைச் சொல்லத் தெரியும். அதனால் கை பிடித்துப் பார்க்கும் போது கர்ப்பந்தரித்துள்ள நாடி ஓடுவது தெரியும். அதனால் 'கருவறிந்து' என்றார்.

மாராப்பு - மேலாடை; முந்தானை - முந்தாணி என்று இக் காலத்தில் வழங்கப்படும். நிருதர் - அரசர். திறையளித்தல் - போரில் வென்ற மன்னனுக்குத் தோற்றவன், ஆண்டுதோறும் இவ்வளவு என்று மரியாதையுடன் செலுத்தப்படும் யானை, தேர், குதிரை, காலாள், பொன், மணி முதலியன செலுத்துவதே திறைப் பொருள் எனவும், கப்பங்கட்டுதல் எனவும் படும்.

வண்ணான் மனைவி, நாவிதன் மனைவி ஆகியோர் குழந்தை பிரசவமாகும் போது மருத்துவம் பார்ப்பது வழக்கமாக இருந்தது. "மயலழுக்கை வாங்கி" குழந்தை பிரசவமானதும் உடலில் எந்த அழுக்குகளுமில்லாமல் மருந்து கொடுத்துப் பிரசவித்தவர் உடலைச் சுத்தப்படுத்தி 10 நாட்களும் துணி துவைத்துப் போடுவர். "எங்கள் கணவனுக்குக் கைமாற்றுக்காரனாக வருச மொப்பிச் சேலையெடுத் திடுவீரானால்" வருடமுழுவதும் கணவனுக்கு உதவியாய்த் தினமும்வந்து துணியெடுத்துப்போய்த் துவைத்து வந்து கொடுப்பது கிராம வழக்கம். இன்னொரு செய்தியுமுண்டு. வண்ணான் துணியெடுக்க வர முடியாத அன்று வண்ணாத்தி அவ னுக்காக வந்து துணியெடுப்பதுமுண்டு. இதுவும் கைம்மாற்றே.

வெண்பா

பற்றலர்மண் கொள்ளும் பணிந்தார்க் கரசளிக்குங்
கொற்ற முயர்க்குமறங் கூருமே - விற்றுவசம்
வில்லவனை வென்றுகொண்ட வீரமாறன் செழியன்
வல்லமெறிந் தானேந்து வாள் 184

வில்லும் கொடியும் இரண்டுமுடைய வில்லேந்தியவனை சேரனை வெற்றி கொண்ட, வீரம் பொருந்திய மாறன் என்ற சிறப்புப் பெயர் பெற்ற பாண்டியன் வாளை வீசிப் போர்க்களத்தில் பகை வீரர்களை வல்லம் என்ற இடத்தில் போரில் வென்று, பகைவரது மண்ணைக் கவர்ந்து கொள்ளும் இயல்பினையும், தன் அடிபணிந் தார்க்குத் தனது ஆட்சியையே யளிக்க வல்ல இயல்பினையும், கொண்டு வெற்றியை மிகுதியாக எடுத்துக் கூறும் அவனது வாள்,

## பரஞ்சோதி யடிகள் மீது பாடிய

எண்சீர் ஆசிரிய விருத்தம்

பன்னுசிவ சமயநெறி பரவ வேண்டிப்
பரஞ்சோதி யடிகளிந்தப் பதியின் மேவி
மன்னுபுகழ்ச் சுவேதவனப் பெருமா னிங்கே
வருகவென விளம்புதலு மவுன நீங்கத்
தன்னிகரி லவனதருள் பெற்று நாளுஞ்
சைவநெறி தழைத்தோங்கத் தமிழ்நூல் செய்தான்
அன்னையிலன் புடையவன்மெய் கண்ட தேவன்
அடியவருக் கடியவர்தா ளகத்துட் சேர்ப்பாம் 185

மதிக்கப்படும் சைவசமய வழிகளைப் பின்பற்றும் பரஞ்ஜோதி அடிகள் இவ்வூருக்கு வந்து பொருந்தியிருந்து "நிலைத்த புகழுடைய சுவேதவனப் பெருமானே, இங்கு வருக" என்றும், மேற்கொண்ட மவுனத்தைவிட்டுத் தனக்கு ஒப்புமையில்லாத அவனருளால் தினமும் சைவமுறை செழித்து வளரத் தமிழில் பல நூல்களை இயற்றினன். தாயினும் அன்பன், மெய்கண்ட தேவன். அவன் அடியார்க்கு அடியான். அவன் பாதத்தை மனத்தில் நினைப்போம். மன்னுபுகழ் - "மன்னுபுகழ் கௌசலை தன் மணி வயிறு" (திவ்யப்பிரபந்தம்).

## இரத்தின சபாபதி

கட்டளைக் கலித்துறை.

பாட்டும் பயனு மறியாத மட்டிகள் பாடியென்ன
ஏட்டுக்குச் சேதம் யெழுத்தாணி சாயல் இதுவரிகள்
கூட்டிப் படித்த குரலுக்குச் சேதங், குலாயமதந்
நாட்டி ற்றமிழை வுரைக்கலா கா(து) இரத்ன சபாபதியே.
186

இரத்தின சபாபதியே! புகழ்ந்து பாடும் பாடலின் பயனை நன்கு உணராத மட்டிகளைப் பாடிப் பயனென்ன? எழுதும் பனையோலைக்கும் நஷ்டம். எழுத்தாணி சாய்வதுதான் மிச்சம். வரிகளை எழுத்துக் கூட்டிப் படித்த குரலுக்கு நஷ்டம். விளங்கும் ம(க)த நாட்டில் தமிழைப் பாடவே கூடாது. குலாவிய என்பது குலாய என இடைக் குறைந்து வந்தது.

இப்பாடலில் 2ம் வரியில் கடைசிச்சீர் அமைவுடையதாகத் தோன்றவில்லை.

## கச்சித்தானன்

கட்டளைக் கலித்துறை.

பாராத பேரில்லைச் சூரிய னைக்கண்ணு லப்பண்புபோற்
காரார் மழையில் நனையாத பேரில்லைக் காசினியில்
தாளாளன் றிண்புயன்சீ யையயில்வாழ் கச்சித்தா
னன்கையில்
ஏராத பேரில்லை யென்றே சிவன்மழு வேந்தினனே.
187

சூரியனைக் கண்களால் பார்க்காதவரில்லை. அதுபோலக் கருமேகம் பொழியும் மழையில் நனையாதவருமில்லை. உலகில் கொடுக்கும் பண்பு முயற்சியுடையான், வலிய தோளினன், சீயையில் வாழ்கின்ற கச்சித்தானனிடம் பொருள்பெற வராதவர்களே யில்லை என்று எல்லாருமறிய உறுதி கூறவே சிவபெருமான் கையில் மழுவாயுதம் தாங்கி நிற்கின்றான். சிவபெருமான் தாங்கிய மழுவிற்குக் காரணம் கற்பித்தமையால் தற்குறிப்பு ஏற்ற அணி. மழு – நெருப்புப் பிழம்பு; சிவன் கையில் கொண்டிருப்பது. காசினி - உலகம். தாளாளன் - முயற்சியுடையவன். ஏருதபேர்-என்பது எதுகைக்காக இடையினம் பெற்றுவந்தது.

## சீட்டுக் கவி

விருத்தம்

பாருக்குள் மிக்கான புன்னைவன நாதரைப்
பணியன்பு மறவாதவன்
பஞ்சலக் கணகவிஞ ருக்கெல்லாம் நெஞ்சம்
பகீரென்றிடிக்கு மேகம்
பைந்தமிழ்த் துறைக்கோவை மஞ்சரி கலம்பகம்
பாடுற வுலாவினுடனே
பாகமும் பலதிரிவும் யமகமோர் பாகமும்
பாடல்செயு மதுரவாக்கி,
மேருக்கு மேல்வைத்த தீபமென யாவர்க்கும்
விளங்குமவ தானலோலன்
மேலான சித்ரகவி யிருபதும் வகையாய் விரிக்குவச
னப்பிர சங்கன்
மேன்மைபெறு கலைவாணி விளையாடு நாவலன்
மிக்கவள கைப்பதியினான்
விருத(ர)சர் புகழுமழ கம்பெரு மாளுசிதமா
யெழுது மோலை
யாருக்குமிக்கான் பிரதாப சல்லாப வதுலசம்
பிரம லீலன்
அடையலர்கள் கொடியரணு மிடிபடிவு நடனமிடு
மஞ்சுகதியாய்ப் பரியினான்
அசாதுரர் பரவு துரைபாதர் சமுகத்தினில்
அதிகவெகுமான சக்கியன்
ஐந்தரு நிகரான ராமலிங்
கேந்திரவேள் சமூக மலர்ந்து காணத்
தாருற்ற கனவு நலிவுராய்வந்த தன்மையாற்
றனித்தநா யகிசொன்னதாயத்
தாழிசை கலித்துறை யினத்திலைம்பது செய்யுள்
சாற்றியே நவசந்தத்
தண்டலை விலாச மொன்றநமையா யுரிமையாய்ச்
சந்தப்பிரப்ந்த மாகச்
சாற்றிவந்தேன் வரவு கேட்டுள மகிழ்ந்துநீ
தயவு செய்திட வேண்டுமே. 188

உலகில் சிறந்த புன்னைவனநாதரை எப்போதும் அன்புடன் வணங்கி வழிபடுவதை மறவாதவன். ஐந்துவகை இலக்கணங் களையும் கற்றுவல்ல புலவர்களுக்கெல்லாம் இப்புலவர் வாதில் என்ன கேட்பாரோ என்று எண்ணும்போது மனம் ''பகீர்'' என்று இடி இடிப்பதுபோல் நடுங்குகின்ற மேகம்போல்வான். பசுமையான தமிழில் துறை, கோவை, மஞ்சரி, கலம்பகம் பாடுவதற்கேற்ற உலா என்ற பிரபந்தங்களுடனே பகுதிகளாகப் பலபடி யமகம் ஒரு பங்கும் அமைய, பாடலியற்றும் இனிய வாக்கினன். மேருமலை மேல் ஏற்றிவைத்த தீபம்போல் எல்லோருக்கும் விளங்கும்படி செய்து காட்டவல்ல அவதானத்தில் வல்லவன். உயர்ந்த சித்திரக் கவி இருபது வகையான பொருள் விரித்துக் கூறிச் சொற்பொழிவு ஆற்ற வல்லவன். பிரசங்கம் செய்வதில் சிறந்தவன். மிகச் சிறந்த கலைகளுக்குத் தலைவியான ஸரஸ்வதி தேவீ எப்போதும் நாவில் விளையாடிக்கொண்டேயிருக்கும் நாவினன். அவள் அருள் நிரம்பியவன். குபேரன் வாழும் அளகைப்பதிபோன்ற ஊரில்வாழ்பவன், பலவிருதுகளுடைய அழகம் பெருமாள் பொருத்தமாக எழுதி விடுக்கும் கவிதைக் கடிதம்.

எல்லோருக்கும் மேலான். புகழுடையான். பேச்சாளன். எல்லாம் நிரம்ப விளங்குபவன் விளையாட்டாகவுடையவன். பகைவரது கொடிகள் கட்டிய அரணுகவுள்ள மதில்கள் இடிபட, பலவகைக் கதியுடன் கூடிய குதிரைப் படையுடையான். அறிவாளிகள் கொண்டாடும் துரை. கூட்டத்தில் மிகவும் வெகுமானங்களையளிப்பதில் விருப்பினன்.

பழகத்தக்கநண்பன். தேவ உலக ஐவகைத் தருக்களைப்போல் வான். இராமலிங்கேந்திரவேள் சமுகமானது முகமலர்ச்சியுடன் காண, மாலை பொருந்திய கனவுபோன்ற துன்பம் வருத்த வந்ததனுல், ஒப்பற்ற தலைவி சொன்னதுபோல் தாழிசை என்ற பாடல் வகையினுல் கலித்துறையினத்தில் (50) ஐம்பது பாடல்கள் இயற்றி ஒன்பதுவகைச் சந்தத்துடன் (அல்லது) புதுமையான சந்த ஓசையுடன் தண்டலை விலாசம் என்ற ஒன்றை மிக அருமை யுடனும் உரிமையுடனும் சந்தப்ரந்தமாகப் பாடிக் கொண்டு வந் தேன். அவ்வாறு கொணர்ந்ததனைக்கேட்டு உளமகிழ்ச்சியுடன் நீ தயவு செய்து அருள் புரிய வேண்டும். வேண்டியவாறு கொடுத்து உதவுக; என்பது எச்சம்.

## அழகம் பெருமாள்

பிற்காலம், இராமலிங்கேந்திரன் என்பவருக்குச் சீட்டுக்கவி ஒன்று அனுப்பியதாகத் தெரிகிறது, இவரது சீட்டுக்கவி காணப் படும் மூலச்சுவடியில், வடமலை நராதிபருக்கு நமசிவாயகவி அனுப்பிய சீட்டுக் கவி ஒன்றும், பெரியசாமி என்பவர்மீது பாடப் பட்ட கலித்துறைப் பாடல் ஒன்றும் உள்ளன என்று தனிப்பாடல் திரட்டின் மூலம் புலப்படுகிறது.

இப்பாடலாசிரியர் திருப்புன்னைவனத்து இறைவனை வழிபடு பவர் என்பது முதலடி கூறும் செய்தி கொண்டு அவ்வூரில் வாழ்ந்த வர் என்று கொள்ள இடமுண்டு. இனத்திலன்பது - இனத்தில் ஐம்பது. இடைப்போலி.

## கொடுப்போரிடம் வேலும் பறித்தல்

விருத்தம்

பாரும் பிளந்து நன்னீர் காண்பார் போலப் பசித்தவருக்
காருங் கொடுப்பர் தம்மைக் கண்டாற்படித்தும் பறிப்பார்
தீரும் பிணிக்கு மருந்தா யிருக்குஞ் செட்டி யைக்
கண்டால்
வேரும் பிடுங்கு வரேசெழி யார்திரு வேங்கட மாமே.
189

செழிப்பு மிக்க திருவேங்கடமே! பூமியையும் பிளந்து நல்ல இனிய நீர்பருகக் காண்பவரைப் போல் பசியையுடையவருக்கு எவராயிருந்தாலும் கொடுப்பவரைக் கண்டால் ஆப்பு வைத்தும் (பூமியைத் தோண்டிப் பறிப்பவரைப் போல்) எவ்வாறாயினும் பெற்றுக்கொண்டு விடுவார்கள். தீருகின்ற நோய்க்கும் மருந்தா யிருக்கும் செட்டியைப் பார்த்தால் வேரையும் (அதாவது அடியோடு முழுவதையும்) பிடுங்கிக் கொண்டுவிடுவார்கள்.

மாதை திருவேங்கடஞ்செட்டியார் என்பவரைப் பற்றிய பாடல்களில் ஒன்று இது. செடியை என்பது செட்டியையெண வலித்தல் விகாரம் பெற்றது. செட்டியார்கள் கொடுக்குங் குணமுடையவராவார்; திருவேங்கடஞ் செட்டியாரும் கொடுப்பவர். கொடுப்பவரிருந்தால் அவரிடமுள்ளவற்றை அடியோடு எப்படியாவது முழுவதையும் பறித்துக்கொள்ள முயல்வார்கள்.

## சக்கர மூதூர்

### வெண்பா

பாலாறு காலாகப் பாயுமூர் பங்கயத்து
நாலாறு கோட்டத்து நல்லவூர் - மேலான
பூங்கமுகு சோலைப் புகழ்த்தொண்டை நன்னாட்டில்
தாங்குமூர் சக்கிரமூ தூர். 190

மேன்மைகளமைந்த பாளைகள் மிக்க பாக்குமரச் சோலைக ளுடைய புகழ் மிகுந்த தொண்டை நன்னாட்டிலுள்ளவூர் சக்கர மூதூர், பாலாறு வாய்க்காலாகப் பாய்கின்ற ஊர், தாமரைகளுடன் கூடிய பல (ஆறுகள்) வழிகள் ஒன்று கூடும் ஆறுகள் பாயும் கோட்டத்துள் அடங்கிய நல்லவூர்.

இவ்வூருக்குப் பாலாற்றிலிருந்து வாய்க்கால் அமைத்து நீர்ப் பாசனம் பெற வகுக்கப்பட்டுள்ளது. பாலாற்றைப் பற்றி 'நாலாறு கூடினல் பாலாறு' என்று ஒரு பழமொழி உண்டு. காஞ்சீபுரத்தின் கிழக்கே பாயும் பாலாற்றுடன் 1. கம்பையாறு 2. வேகவதி 3. சேயாறு மூன்று ஆறுகளும் கூடிவிடும். அதனல் இப்பழமொழி ஏற்பட்டிருக்கவேண்டும்.

பங்கயத்து நல்லவூர் - இத்தொடருக்குத் தாமரை மலர் போல் அழகாக நடுவே விளங்கு மூர் என்றும், தாமரை மலர்கள் நீர் வள நிளவள மிகுதியால் நிரம்ப வளர்ந்து அழகாய்க் காட்சி நல்கும் ஊர் என்றும் பொருள் காண இடமுண்டு. பூங்கமுகு சோலை - பாக்கு மரங்களும் அவற்றுடன் நல்ல சோலைகளும் அமைந்த ஊர் என்க. பூங்கமுகு - பாக்கு மர வகைகளுள் ஒன்று. புகழ் தொண்டைநாடு- புலவர் புகழும் தொண்டை நன்னாடு என்று பொருள்.

சக்கர மூதூர் - சக்கிர மூதூர் என்றுள்ளது பிழை. எழுதுவார் பிழையோவெனை எண்ணத் தோன்றுகிறது. 'எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்; படித்தவன் பாட்டைக் கெடுத்தான்' என்பது தமிழ் நாட்டில் ஒரு பழமொழி. இதன்படி சக்கர மூதூர் என்றே படிக்க வேண்டுமெனைத் தோன்றுகிறது.

## தாமரைக்கும் கண்ணாடிக்கும்

சிலேடை வெண்பா

பாவிரதஞ் சேருகையாற் பாணியிலே யுற்றிடலால்
மாவிலையே சேருகின்ற மாட்சியாற் — பூவிலுயர்
சேமமிகுங் குன்றைநகர்ச் சேந்தன் வரைதன்னில்
தாமரையே தர்ப்பணந் தான். 191

பூமியில் உயர்வுடைய நலமமைந்த (குன்றத்தூர்) குன்றை நகரில் உள்ள சேந்தன் மலையில் 1. தாமரை - பூமி வரையில் பரவி அடியில்சேருவதால், பறிக்கும்போது கையில்வருதலால், இலட்சுமிக் கிருப்பிடமாய் (வீடாய்) அமைதலால் சேருகின்ற காரணத்தால்; 2. கண்ணாடி - எடுப்பவரது கைகளில் சேருதலால், கண்ணாடியின் பின்பிறம் பூசப்படும் பாதரஸம் சேர்கின்ற சிறப்பால் தாமரைக்கு நிகர் கண்ணாடி ஆகும்.

குன்றை நகர்-குன்றத்தூர் (சேக்கிழார் வாழ்ந்த ஊர்), சேந்தன்-சேந்தன் திவாகரன். தர்ப்பணம் - கண்ணாடி; மாட்சி - பெருமை; பாணி - கை. க்ஷேமம் என்பது தமிழில் மாறிவரும்போது ஏமம், சேமம் கேமம் என வரும். சீவக சிந்தாமணியில் வரும் ஏமமா புரம் என்பது, கேமமாபுரம் க்ஷேமமாபுரம் எனவும் ஆயினமை கொண்டு அறிக (பாடபேதம்-பாவிந்தம்)

## காராளர் பிழை தீர்ந்தார்

வெண்பா

பிழைத்தாரே காராளர் பேய்மகள்சொற் கேட்டுப்
பிழைத்தார்க ளின்றுபிழை தீர்ந்தார் — பிழைத்தார்கள்
எல்லாருங் காண வெரியகத்தே மூழ்கினா
ரெல்லாரு மென்று முளர். 192

காராளர்கள் (கார் காத்த வேளாளர்) பிழைத்தனர். பேய் மகள் கூறிய சொல்லைக் கேட்டுக் குற்றம் நீங்கினார்கள். இன்று தவற்றி லிருந்து தப்பி விட்டனர். எல்லோரும் அறியத் தீயில் மூழ்கினார்கள். அவ்வாறு மூழ்கியவர்கள் உயிர் நீத்தமையால் எப்போதும் உள்ளவ ரானார்கள். கார் – கருமை. கருமை நிறமுடைய மேகத்தினின்று கிடைக்கும் மழை நீரால் பயிரிட்டு வாழும் உழவுத் தொழில் செய் பவர். நாளடைவில் இவர்கள் ஒரு தனிப்பிரிவினராகவே ஆயினர்.

## தலைவன் பிரியேன் எனல்

வெண்பா

பூங்குயிலே மாங்கனியே புன்னைவன மாதுனையே
ஏங்கிமனம் வாடுதடி யேந்திழையே! – நீங்கியுன்னைக்
காணுமல் நெஞ்சம் கனக்குதடி காமவல்லி
வீணு வெறுப்பதெலாம் வீண். 193

அழகான குயில் போலும் இனிய குரல் உடையவளே! மாங்கனி போன்றவளே! சிறந்த (தனங்கள்) முலைகளையுடையவளே! ஏந்திய பல அணிகளைக் கொண்டு விளங்குபவளே! மனது உன்னை அடைய வேண்டுமென்று ஆசையினுல் தாழ்ந்து வாட்டமுற்று வருந்துகின்றது; உன்னை (விட்டு நீங்கி) அடைய வேண்டு மென்ற நினைப்பால் காணுமல் மனம் துன்பத்தால் கனக்கின்றது.

காம வல்லி - கொடிவகை, தேவ உலகத்தேயுள்ளது. நெஞ்சு அம் = அம் சாரியை. 1. குயிலே 2. கனியே 3. ஏந்திழையே 4. காம வல்லி - விளிகள். குயில் கனி வல்லி மூன்றும் உவமையாகு பெயர்கள். பாரம் அதிக மேற்பட்டால்தான் கனம்தோன்றும். இங்கு நெஞ்சிற்குக் கனமேற்படக் காரணம், பிரிந்த வருத்த மிகுதியேயாம். புன்னைவனமாது - திருப்புன்னைவனம் என்ற தலத்தில் விளங்கும் இறைவி. அனையே - அன்னையே என்பதன் இடைத் குறை.

## துறவிகளுக் காகாதன

வெண்பா

பெண்ணுடை யாபரணம் பெய்தைலம் தாம்பூலம்
உண்ணவணை சந்தனத்தோ டோரெட்டும் -
விண்ணவர்க்கா
யாகாத நஞ்சுண்ட வண்ணலடி யார்தமக்கிங்
காகாது சொன்னேே மறி. 194

பெண், ஆடை, அணிவகைகள் அணிந்து கொள்ளல், எண்ணெய் தேய்த்துக் கொள்ளல், வெற்றிலைப் பாக்குத் தரித்தல், மிகுதியாக உண்ணல், படுக்கை, சந்தனம் பூசிக்கொள்ளல் என்ற ஒப்பற்ற

எட்டும் தேவர்களுக்குப் பொருத்தமாகித் துறவிகள் உடம்புக்கு ஏற்காதன, விடமுண்ட அண்ணலான சிவபெருமானது அடியவர் என்று சொல்லிக்கொள்ளுபவர்களுக்குப் பொருந்தாதன என்று சொன்னோம், இதனையறிக.

இன்பந் துய்ப்பவருக்கு உரிய பொருள்கள் எட்டு. அவை இப் பாடலுள் முன் இருவரிகளுள் கூறப்பட்டுள்ளன. விண்ணவர்க் காயாகாத நஞ்சு - ஹாலாஹலம் (ஆலகாலம்) என்ற விஷம். தேவரும் அசுரரும் பாற் கடலை அமுதம் பெற வேண்டிக் கடைந்த போது முதலில் தோன்றிய பொருள், இதனைப் பருகியவர் கைலாஸ பதியாகிய சிவ பெருமானே. இவரே நஞ்சுண்ட அண்ணல். அவர் தம் அடியார் தேவர்கள், பக்தி செய்பவர் - பக்தர் எனப்படுவார். அது எந்தத் தெய்வத்தைக் குறித்துச் செய்யப்படினும் பக்தியே.

## பிள்ளை படுந்துயர்

### அறுசீர் விருத்தம்

பெண்பிள்ளை பிறைநேர்க்கும் கரும்பிள்ளைக்
குறிபார்க்கும் வேதா வென்ன
மண்பிள்ளைத் திறந்தரற்றும் வளர்பிள்ளை
யீனுரைக்கும் மடவார்க் கெல்லா
மென்பிள்ளை யெனக்கவளோ ரொருபிள்ளை
சிறுபிள்ளை யெழிலா கின்ற
பெண்பிள்ளை படுந்துயரம் பெரியபிள்ளைக்
காரறியப் பேசு வாரே 195

பெண்ணின் பிறை போன்று வளைந்த புருவமுடைய கண் பார்வையும், தூக்கணாங் குருவி மூலம் சகுனம் பார்க்கும் பார்வை யும், பிரமன் போல மண்ணில் பிறந்த பிள்ளை) மண்பொம்மை வாய் திறந்து கத்தும். தென்னம் பிள்ளை பாளையாயினும் மகளிர்க்கு எல்லாம் எண்ணி (நினைத்து)ப் பார்க்கின்ற (எட்டுப்) பிள்ளையா வாள். எனக்கு அவளோ ஒரே பிள்ளை. அவளும் வயதில் மிகவும் சிறியவள். அழகான அவள் படுந்துயரம் பெரியவளுக்கு யார் தெரியும்படி கூறுவார்?

இப்பாடலில் பிள்ளையென்ற சொல் ஒரே பொருளில் பன்முறை பயின்று வந்தமையால் சொற்பொருள் பின்வரு நிலையணி. குழந்தைகளைப் பிள்ளையென்பது பழக்கம். ஆண்பிள்ளை, பெண்

பிள்ளை; தென்னம் பிள்ளை என்றெல்லாங் கூறுவது மரபு. ஒரு பிள்ளை- ஒரு குழந்தை. சிறுபிள்ளை - சிறு குழந்தை என வருதல் அறிக.

புள்-சடாயு என்ற கழுகு அரசன். இருக்கு-இருக்கு முதலான 4 வேதங்கள். வேள் - மன்மதன் ஆகியோர் பூசித்த தலம், வைத்தீசுவரன் கோவில். நோக்கு-திருக்குறள் தகையணங்குறுத்தல் என்ற அதிகாரத்துள் பலகுறள்களில் நோக்கு என்பது வள்ளுவரால் கூறப்பட்டதறிக- வேதா – பிரமன்.

> ஈன் "ஈன்ருள் பசி காண்பா ளுயினும் செய்யற்க
> சான்ரோர் பழிக்கும் வினை" (குறள் 656)
> "ஈன்று புறந் தருத லென்றலைக் கடனே" (புறம் 312)

"ஆவீன மழை பொழிய" என்ற பாடலுள்ளும் ஈன என்று (தனிப்பாடற்றிரட்டுள்) வந்ததுங் காண்க. மடவார் - அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற நான்கனுள் மடம் என்ற குணத்தைக் கொண்டிருந்தலின் மடவார் எனப்பட்டனர் மகளிர். மடமை+ ஆர் என்று கொள்ளினும், மடம்+ஆர் எனக் கொள்ளினும் இரு வகைக்கும் இலக்கணமுண்டு.

"எகரவினு முச்சுட்டின். . .என்றியே" என்ற நன்னூல் 163 ஆம் சூ, உரையுள் "நெறியே" என்ற மிகையால் . . ."செல்வுழிச் செல்க" எனவும், "விண் வத்துக் கொட்கும்", எனவும், "சார்வுழிச் சார்ந்த தகையன்" எ-ம். "மெய்யீற்றின் முன் உயிர் வருங்கால் இங்ஙனம் உடம்படுமெய் அன்னெனக் கூறும் வகரந் தோன்றின", என்று சங்கர நமச்சிவாயர் காட்டும் உரைகொண்டு, மடம் + ஆர் – மடவார் என்ற இதனை அமைத்துக் கொள்க. மடமை+ஆர் - மடவார். "ஈறுபோதல்"(நன் சூ. 136) என்பதனுல் ஈற்றெழுத்து 'மை' கெட்டது) "இ ஈ ஐ வழி யவ்வும், ஏனை யுயீர் வழி வவ்வும்" (நன். சூ. 162) என்ற விதிப்படி வகர உடம்படு மெய் தோன்றும். மட+ஆர் என நிறுத்தி, அகர ஈற்றுச் சொல்லாகக் கொண்டு "விள+அழகிது என்பது விளவழகிது" என்பது போல் (நன். சூ. 162. சங்க: உரை மேற்கோள்படி) கொள்க.

## இராம வேளான் மீது பாடியது

வெண்பா

> பெரியோர்கள் நெஞ்சமே நொந்துபேதித் தால்எல்லாம்
> எரிவாய்மெழு காகுமென் பதொரு - வருமே
> சொல்ல அறிந்திலையோ சொன்னேன் !இதுவுனக்கு
> நல்லதல்ல ராமவே ளான் 196

இராமவேளான் என்ற பிரபுவே! பெரியவர்கள் மனம் நொந்து வேறுபட்டால் அனைத்தும் நெருப்பிலிட்ட மெழுகு போலாகும், என்பதனை ஒருவரும் சொல்ல நீ அறியவில்லையோ? இவ்வாறு நடந்து கொள்வது உனக்கு நல்லதா? இதனையறிவாயாக.

### மரணம் கனியும் வகை

அறுசீர் விருத்தம்

பேதமை யென்னும் வித்திற் பிறந்துபின் வினைக ளென்னும்
வேதனை மரங்க ளூறி வேட்கைவேர் வீழ்த்து முற்றிக்
காதலுங் களிப்பு மென்னுங் கவடுவிட் டவலம் பூத்து
மாதுய ரிடும்பை காய்த்து மரணமே கனியு மன்றே. 197

அறியாமையென்ற விதையில் தோன்றி, வினைகள் என்ற வேதனை மரங்கள் நாற்ருக்கி, அவா, ஆசையென்ற வேரை விழும்படி முற்றச் செய்து, காதல், மகிழ்ச்சி என்ற பெருங்கிளைகள் பிளவுபட விட்டு, அழுகை என்ற மலரை மலரச் செய்து, பெரிய துன்பமென்ற தடைகள் காய்களாகக் காய்க்க இறப்பே கனியும். அன்று, ஏ - அசைகள்,

இப்பாட்டு **முற்றுருவக அணி.** பேதைமை - விதை; வினைகள் - மரங்கள்; வேட்கை - வேர்; காதல், களிப்பு - கவடுகள்; அவலம்-மலர்; துயர் - இடும்பைகள் - காய்கள்; மரணம் - கனி. மரங்கள் + நாறி. மரங்கஞூறி. மாதுயர் : மா—இடைச் சொல்.

### கழுதையின் குணம்

வெண்பா

பொதிசுமக்கும் சந்தோஷம் பொங்குமேற் கொண்ட
கதிபுரளும் துக்கசுகங் காணு - ததிசயமாய்
மற்றோர் பயன்கருதா மற்றுன் புரிகழுதைக்
குற்றகுண நான்குமா கும் 198

மூட்டையைச் சுமந்து செல்லும்; மகிழ்ச்சி மிகுமானல் (கீழே படுத்துத் தன் விருப்பம்போல்) இப்படியும் அப்படியுமாகப் புரண்டு உருளும். துன்பம், இன்பம் இரண்டையும் (அறியாது) உணராது. ஆச்சரியமாய் வேருெரு பயனையும் எண்ணுமல், உழைக்கும். கழுதைக்குப் பொருந்திய குணங்கள் இவை நான்குமாம்.

புரி – செயல் புரிதல்; காரியம் செய்தல். சந்தோஷம்-மகிழ்ச்சி, அதிசயம் – வியப்பு, துக்க சுகம் – முரண். தமிழில் இதனை மாற்றிச் சொல்லும் முறை இன்பதுன்பம் என்றபோது நயம் தோன்றுவது போலக்காணும்.

## திருவாவடுதுறை ஆதீனம் மகாசந்நிதானம் திருமுன்பு மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் செய்துகொண்ட விண்ணப்பம்

பொருவில் புகழ்சுப் பிரமணியப் பெம்மான்முன்
மருவுரு மீனாட்சி சுந்தரமோர் மாற்றம்
வருதிரு மாளிகைத்தே வர்பூசை யாயே
கருதுபந்தி யாதல்வழக் கம். 199

கருதுபந்தி-வினைத்தொகை. பழங்கால முதல்தொடங்கி நடக்கும் அப்பந்தி, இன்றும் வருவோர்க்கு அன்னமிட்டு உபசரிக்கும் வழக்கத்தைப் பிள்ளையவர்கள் இங்குக் குறிப்பிடுகிறார்கள். பெருமான் என்பதே பெம்மான் என ஆகியது. பெம்மான்: பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மா-னிவ னன்றே"(ஞானசம்பந்தர், தேவாரம்). மகாஸந்நிதானத்தைப் பெம்மான் என்பது பலவகையிலும் பொருந்தும்.

திருவாவடுதுறை மடத்தில் உமாபதிசிவம் பூசித்த ஞானமா நடராசர் தரிசனம், திருமாளிகைத்தேவர் தரிசனம் முதல் குருமூர்த்தமான நமச்சிவாய மூர்த்திகள் தரிசனம், ஏட்டர்ச்சனை முடிந்து விபூதி ப்ரஸாதம் பெற்ற பின்பே பந்தி நடப்பது சம்பிரதாயம்.

ஒருநாள் வடக்கு மடவிளாகத்தில் உள்ள விறகு ஆரணியத்தில் ஒரு மூதாட்டி இறந்துபட, கோவில் காலம், திருமாளிகைத் தேவர் காலம் எல்லாம் நடைபெறுமல் தாமதித்தன. இது மகாஸந்நிதானத்துக்குத் தெரியாது. பிள்ளையவர்களுக்குத் தெரிந்திருந்தது. பூசா காலத்தின் பிறகு முதல் பந்தியில் சந்நிதானமும் பிள்ளையவர்களும் அமர்ந்து உண்பது வழக்கம். அந்த முறையில் பிள்ளையவர்களைப் பூசாகால முதற்பந்திக்குப் போகிறவரையில் ஸந்நிதானம் எதிர் பார்த்து 'இன்னும் பிள்ளையவர்கள் வரக்காணவில்லையே' யென்று சில ஓதுவா மூர்த்திகளையனுப்பிப் பந்திக்குப் போகாமல் பன்னீர்க்கட்டில் தாமதித்திருந்தபோது, பிள்ளையவர்கள் புதுக்கட்டில் சிரமேல் கைகுவித்துக் கொண்டு பாடிய பாடல் இது.

புகழ்மிகு சந்நிதானத்தின் திருவடித் தாமரைகளைப் போற்றி வணங்கி, பிள்ளையவர்கள் அருகிலுள்ள திருமாளிகைத் தேவர் நித்திய பூசை முடித்தபின் பந்திக்குச் செல்வது மரபு என்று மூதாட்டி மறைவைக் குறிப்பாலமைத்து விண்ணப்பம் செய்து கொண்டார்கள்.

## வேதநாயகம் பிள்ளைக்குத் தர்மதானபுரம் கண்ணுவையர் எழுதிய சீட்டுக் கவி

எண்சீர் விருத்தம்

போத மார்நெறி யேபுணர் வுற்றுளோன்
புலவ ரோடுற வாகிய புண்ணியன்
கோத கன்றிடு பண்டிதர் வாய்க்கவி
குவளை யோடு மணந்திடு தோளினன்
நாத னரரு ணடிய தன்மையன்
நங்கை பூமகள் வாழ்குளத் தூரினன்
வேத நாயகன் பாற்சென்ற பாவலர்
வெறுங்கை யோடு திரும்புவ தில்லையே 200

ஞான மார்க்கமான வழியையே பெற்றவன். புலவருடன் உறவுடைய புண்ணியம் மிக்கோன். குற்றமகன்ற பண்டிதருடைய வாயினின்று வந்த கவியுடையவன். குவளை மலர் மாலை அணிந்த தோளான். தலைவன் இயேசு நாதன் அருளை விரும்பிய தன்மை யுடையான். சிறந்த தாமரை மலரை இருப்பிடமாகவுடைய இலக்குமி எப்போதும் இடைவிடாமல் வாழ்ந்து கொண் டிருக்கும் குளத்தூர் என்ற ஊரை இருப்பிடமாக உடைய வேத நாயகனிடம் சென்ற புலவர் பெருமக்கள் ஏதாவது பரிசு பெற்று வருவார்களேயல்லாமல் வெறுங்கையுடன் பரிசு இன்றி வர மாட்டார்கள்.

போதம் – அறிவு, கோது - குற்றம், அருள் நாடிய – அருணடிய, பூமகள் – இலக்குமி. நங்கை – பெண்பாற் சிறப்புப் பெயர் புலவர், பாவலர் - ஒரு பொருட் பன்மொழி.

குவளையோடு மணந்திடு தோளினன் – குவளை மலர் மாலை சூடியவன். வெறுங்கையோடு – "வெறுங்கை முழம் போடுமா என்பது ஒரு பழமொழி.

## தலைவி பிரிவிற் கிரங்கல்

## பூவை இரத்தினத்தைப் புகழ்தல்

கட்டளைக் கலித்துறை

போர்முத்து மோகன வில்லாளி
சுந்தரம் பூவைரெத்தினம்
தேர்முந்து மோமதன் தேர்முந்து
மோயிரு தேர் முந்துமுன்
கார்முந்து மோவது முந்துமுன்
னோயிரு கண்கள்சொரி
நீர்முந்து மோயறி யேனிறை
வாகச்சி யேகம்பனே 201

இறைவனை காஞ்சிபுரத்தில் எழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! போரிடுவதில் வல்லவன், முத்துப் போன்றவன்; அனை வரையும் கவரவல்ல அழகன்; சிறந்த வில்லாளி ஏறிவரும் பூவை ரத்தினத்தின், தேர் முன்னால் வருமோ? மன்மதனது தேர்தான் முன்னால் வருமே! இவை முந்திவருவதற்குள் கார்காலம் தோன்றிய தற்கு அடையாளமாக மேகங்கள்தாம் முன்னோடி வந்து சேர்ந்து விடுமோ? அவையும் முன்னால் வருவதற்குள் இரண்டு கண்களில், சொரிந்து வடிகின்ற நீர்தான் முன்னால் வருமோ? யானறியேன்.

கார் - மேகம். சொரிநீர் - வினைத்தொகை. இறைவா - விளி. இறைவன் என்பது ஈற்றெழுத்துக் கெட்டு, அயல் நீண்டு விளியாயிற்று. "ஈற்றயல் நீளலும்" என்பது நன்னூல். பொருள்- இரண்டாகிய கண்கள்-இருகண்கள் இரட்டையிலை போலாம்.

## கோவையார் சிறப்பு

மங்கைசிவ காமவல்லி மலர்க்கரத்திலாடும்
மங்கலநல் விளக்கேந்த மன்றுளார்
அங்கமலச் சேவடியார் செங்கமலத்தா
லெழுது மருமை யாலே
துங்கமிகு வாதவூ ரடிகள் சொன்ன
திருக்கோவை துறைநா னூறும்
தங்குபிறப் பறுக்குமவர்க் கிறங்குதுறை
யுதுவெனவே சாற்ற லாமே. 202

பெண்களுள் மங்கைப் பருவத்தினையுடைய சிவகாமவல்லியின் தாமரை மலராகிய கையில் மங்களத் தன்மை பொருந்திய விளக்கை யேந்த, பொன்னம்பலத்தே நடனமாடும் அழகான செந்தாமரை மலர் போன்ற சிவந்த பாதமுடைய சிவபெருமானுர், சிவந்த் தாம ரையால் எழுதுகின்ற சிறப்பால், தூய்மை மிகுந்த திருவாதவூரில் தோன்றிய சிவபெருமானது அடியார்களுள் சிறந்த மாணிக்க வாசக சுவாமிகள் திருவாயால் மலர்ந்தருளிய திருக்கோவையார் என்ற பல துறைகளுடன் அமைந்த நானூறு பாக்களும், நில வுலகிலே தங்குமாறு செய்த பிறப்பினையறுக்க வேண்டுமென்ற நினைப்பைக் கொண்டவர்களுக்கு ஏற்ற துறை (வழி) அத்திருக் கோவையாரைப் பயில்வதேயாகும் என்று கூறலாம்.

மங்கை: பேதை பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்ற ஏழுபருவங்களுள் நடுவேஉள்ள ஒரு பருவதினை, சிவகாம வல்லி-சிதம்பரத்திலேயுள்ள நடராசப் பெருமா னுடனுறை இறைவியின் திருநாமம். மலர்க்கரம் - தாமரை மலர் போன்ற கை- வண்ண உவமை. மங்கல நல் விளக்கு - மங்கலப் பொருள்கள் எட்டு. பிற:- கவரி, நிறைகுடம், கண்ணுடி, தோட்டி, முரசு, பதாகை, இணைக்கயல், விளக்கு: நலம் பயத்தலால் நல் விளக்கு எனச் சிறப்பிக்கப்பட்டது. மங்கலத்தின் அடையாள மாக மகளிர் திருமணக் காலங்களில் விளக்கினை யேந்தி வருவது வழக்கம்.

அங்கமலச் சேவடி - அழகிய தாமரை மலர் போன்று சிவந்து விளங்கும் ஸ்ரீ பாதம்: உவமை. சேவடி - நிறவுவமை. திருக்கோவை யாரை மணிவாசகப்பெருமான் கூற, இறைவன் தாமரை மலரின் தண்டால் எழுதியமையைச் 'செங்கமலத்தா லெழுது மருமையாலே' என்ற தொடர் விளக்கும். துங்கம் – தூய. வாதவூரடிகள்-மாணிக்க வாசகருக்குப் பிறந்த ஊரானமைந்த காரணப்பெயர்.

கோவைத்துறை நானூறு :- கோவை - அகப்பொருட் சுவை யமையக் கட்டளைக் கலித்துறை என்ற பாடல் வகையால் பாடப் படுவது. தன்னையே தலைவியாகவும், தான் அடைய வேண்டிய இறைவனையே தலைவனுகவும் கொண்டு பாடப்படுவது. இதனை நாயக நாயகி பாவம் என்பார்கள்; தான் பிறந்த பிறப்பின் பயனைப் பெற தன் ஆத்மாவையே அவனிடம் அர்ப்பணிப்பது. ஒப்பிப்பது. இறைவன் ஆண்டான்; தான் அவன் உடைமை என்ற எண்ணத் துடன் தம் பக்தியைப் பாடல்கள் மூலம் பாடிக் காட்டும் வழி இது.

இவரது கோவை நூல் தான் தமிழ்க்கோவைப் பிரபந்தத்திற்கு முதன் முதல் வழிகாட்டியான நூல். ஒரு நூலுள் பல வகை மணிகளைக் கோத்து அழகு தோன்றக் காண்பது போலப் பல பட

மனதில் தோன்றும், இறைவன் மீதுள்ள, அவனையடைய வேண்டும் என்ற விருப்ப உணர்வுக் கருத்துக்களை, வரிசைப் படுத்தி அழகாக அமைத்துக் காட்டி, மற்றவர்களும் இவ்வாறே இறைவனை யடைய முயல வேண்டும் என்ற நோக்கத்துடன் பாடப்படுவதால் கோவை என்பது காரணப்பெயரென அறிக. இவ்வாறு இறைவனைச்சேர நினைப்பதே வாழ்வின் முழுப்பிறவிப் பயன் என்பது அடியார்களான எல்லோரும்கொண்ட ஒப்ப முடிந்த கருத்து, இதனையே திருவள்ளுவரும் "மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ்வார்". "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடிசேராதார்" என்றார். இதனையேதான் வேதமும்,

த்யாகேநைகே அம்ருதத்வமா நசு: !......
தஹ்ரம்விபாபம் பரமேச்ம பூதம் யத் புண்டரீகம்
புரமத்ய ஸக்குஸ்தம் தத்ராபி தஹ்ரம் ககனம் விசோகஸ்
தஸ்மின் யதந்தஸ்ததுபாஸிதவ்யம்! யோவேதாதௌ
ஸ்வரப்ரோக்தோ.
வேதாந்தேச ப்ரதிஷ்டித: தஸ்ய ப்ரக்ருதி லீனஸ்ய ய : பரஸ்
ஸ மஹேச் வர:! என்று ஓதிக் கொண்டேயிருக்கின்றது.

இதன் பொருள்:—"துறை நானூறும் தங்கு பிறப்பறுக்கும் அவர்க்கு இறங்கு துறையாயது" சுவாமிகள் பாடிய 400 வழிகளாயமைந்த பாக்களின் முடிந்த பயனும் இவ்வரிகளிலேயே சொல்லப் பட்டு விட்டன. "பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க" என்பதும் சுவாமிகளின் கருத்தென உணர, அவர் வாக்கே தக்க சான்று. ஆனால் இக்கருத்து சொல்லப்பட்ட இடம் வேறாக இருப்பினும் கருத்து ஒன்றே.

### குலோத்துங்கனைப் புகழ்தல்

கட்டளைக் கலித்துறை

மலைகொண்டு தூர்க்குங் கடலை
யடலுடை வாளரக்கர்
தலைகொண்டு தாக்கு மிலங்கா
புரத்தைத் தளிரியலார்
கலைகொண்டு தூர்க்கும் மறுகை
விசும்பைக் கழுகு செய்யக்
கொலைகொண்டு தூக்கும் பரராச
நாத குலோத்துங்கனே 208

இராசாதி ராசனான குலோத்துங்க மன்னன் நாட்டில் கடலை, மலையைக் கொண்டு நிரப்புவான். ஆற்றல் மிக்க வாள் ஏந்திய

அரக்கர்களையுடைய இலங்கையாம் நகரில் வானில் கழுகுக்கூட்டம் நிறைந்து வட்டமிடப் பகைவரைக் கொன்று குவிப்பான். மாந்தளிர் போன்ற உடலையுடைய மகளிர் தமது நடனக்கலை முதலான பல கலைகளைக்கொண்டு வீதியிலுள்ளார் மனதைக் கவர வீதியில் உலாவுவார்கள்; அல்லது தாங்கள் அணிந்துள்ள விதவிதமான ஆடைகளைக்கொண்டு தன் வசப்படுத்துவாராதலின் மக்கள் மனம் அலையும்படி செய்வர்.

கலை – ஆடை; பலவகைக் கலை. வாள் அரக்கர் – வாள் ஏந்திய அரக்க ரென்ற அசுரர். மலை – கடல் – இராவணனை வெல்ல இராமன் மலைகளின் சிறுசிறு பகுதியான கற்களைக் கடலில் வானரப் படை மூலம் வீச, அது மிதத்தலால் அதன் வழி பாலமமைத்து இலங்கையை யாண்ட அரக்கரை வெல்லச் சென்ற செய்தி இங்குக் கூறியமை அறியத் தக்கது: தளிர்இயல் – மாந்தளிர் போன்ற மென்மை அழகுகளால் நிறைந்த மகளிர், நிறத்தாலும், மென்மைத் தன்மையாலும் உவமை.

மறுகு – வீதி. கமுகு என்று பாடங்கொண்டால்கமுகு – பாக்கு. பாக்கு மரங்கள் குலைகுலையாய்க் காய்த்து வானளாவி வளர்ந்து அழகு செய்யும் நில வளம் இங்குணர்க. செய்ய கொலை – பாக்கு நன்கு காய்த்துத் தொங்கும் போது சிவப்பாக இருக்கும். அதனால் 'செய்ய குலை' என்றார். கொலை என்பது குலை என்றிருப்பின் சிறக்கு மென்று தோன்றுகிறது. (கழுகு என்று பாடல் கொண்டால்) கழுகுக் கூட்டம் பிணம் தின்னவானில் கூடிப்பறக்கும். எனப் பொருள். உடைவாள் அரக்கர்களும் அரசகாவலர்களும், அரசர்களும் பக்கத்தே செருகிக்கொண்டிருப்பார்கள். இதனைக் கம்பன் இராம பட்டாபிஷேகத்தின்போது, "அங்கதன் உடைவாளை ஏந்த", என்று கூறுவது கொண்டறிக.

மேலும், திருமாலுக்கு உரிய படைக் கருவிகள் ஐந்து; வில், வாள், கதை, சங்கு, சக்கரம் என்பன அவை ஆதலின் அவற்றுள் ஒன்று வாள் என்பதும் அறியத் தக்கது. திருமாலைப் பற்றிப் புகழ்ந்திருக்கும் பஞ்சாயுத ஸ்தோத்திரம் என்று ஒன்று உண்டு. அதனுள் வாளையும் போற்றி வணங்குவதாகக் கூறப் பட்டிருப்பதும் அறிக.

இன்னும் திருமாலின் ஐந்து படைக்கருவிகளையும் எழுதி குழந்தைகளுக்கு எவ்வித நோய் நொடிகளும் வாராதவாறு காக்க 'ஐம்படைத் தாலி' என்று கழுத்திலோ இடுப்பிலோ அணிவிப் பார்கள். அங்கும் இவ்வாள் இடம் பெறுவ தறிக.

## பிச்சுவையர், இராமநாதபுரம் உதவித் திவானாக இருந்த நாராயணசாமி ஐயர் மீது பாடிய

வெண்பா

*மாநாரின் மேவுதலால் மாவைத் தலையுறலால்*
*தானாகச் சோதியெனச் சாற்றுதலால் - மேனேரும்*
*நாட்டைப் புரக்கு மெங்கள் நாரா யணசாமி*
*மோட்டைச் சேட் டாக மொழி.* 204

மாநாரின் - சிறந்த நாரில் பொருந்துதலால், பெண்களிடம் பொருந்துதலால், (மாநார்-மகளிர், மாநார்-சிறந்த அன்பு). மான் மானினையும் ஆர்-ஆத்திமாலையினையும் பெற்றிருத்தலால்; மாவைத் தலையுறலால் - இலக்குமியைத் தலையில் தாங்குதலால்: இராச்சிய இலக்ஷ்மியைத் தாங்குதலால். தானாக சோதியெனச் சாற்றுத லால் - தானே ஒளியென்று கூறலால், - இயல்பாகவே ப்ரகாசமாக விளங்கலால், தான் நாகசோதியென – தானே பாம்பாகிய சுயஞ் சோதியெனக் கூறலால், ஒளிபோல் புகழ்தலால், மேல் நேரும் - மேலே பொருந்தும்; மேனேரும் - மேனவிற் ஏறும் (பல்லக்கு). நாட்டைப் பாதுகாக்கும் எங்களது நாராயணசாமி என்பவர்.

மோடு ஐ மோட்டை - மொட்டை என்பது நீட்டல் விகாரம். மோனைக்காக அமைக்கப்பட்டது. மொட்டைத் தலையையுடைய சேட்டாகக் கூறுக. சேட்டு - வட்டிக்குவிடும் வடநாட்டு வாணிக இனத்தவர்.

1 மா(ல்) நாரின் மேவுதலால்-திருமால் தண்ணீரின்மேல் படுத்துக் கொண்டிருத்தலால், மாவை - என்ற இடத்தைத் தலை நகராகக் கொண்டிருத்தலால், தானாக - தானே, சோதியெனச் சாற்றுதலால் - ஒளி மயமான ஆன்ம ஒளியெனச் சொல்லப் படுதலால், மேல் நேரும் - மீன் இனங்கள் வரப்புக்கள் மேல் துள்ளி எழும் (மீன் ஏறும் என்றும் இருக்கலாம்.) நாட்டைப் புரக்கும் - நீர் வளம் நிரம்பப் பெற்ற நாட்டைப் பாதுகாக்கும் எங்கள் நாராயணசாமியைச் சேட்டாகக் கூறுக.

ஏந்தல்-ஆண்பாற் சிறப்புப் பெயர்கள் பல. குரிசில், தோன்றல் விடலை கோ வேள் நம்பி ஆடூஉ என்பவற்றுள் ஏந்தல் என்பதும் ஒன்று. ஆண்பர்ற் பெயர்கள் பற்றி வரும், அவற்றுள்

"கிளையெண் குழூஉ முதற் ,...
டுற்ற-னவ் வீறு நம்பி யாடூஉ
விடலை கோவேள் குரிசி றேன்றல்
இன்னன வாண்பெய ராகு மென்ப". (நன்.சூ. 276) என்பதனு னறியப்படும்.

## நெஞ்சுக்கு

### வெண்பா

மாமிக்கோர் மாமியுண்டு வாணருக்கோர் வாணருண்டு
சாமிக்கு மேற்றகப்பன் சாமியுண்டு – பூமிக்குள்
எல்லாந் தெரிந்த வருந்தெரி யாதவரும்
இல்லையெனத் தேர்ந்திடுநெஞ் சே, 205

ஓ மனமே! நிலவுலகில் மாமியாருக்கும் ஒரு மாமியார் உண்டு. தமிழறிந்த வாணருக்கும் அள்ளித் தருகின்ற கொடையாளி உண்டு. இறைவனுக்கு மேல் தகப்பன்சாமி என்ற சுப்பிரமணிய சுவாமி உண்டு. எல்லாந் தெரிந்தவர்களும் உண்டு தெரியாதவர்களும் என்று அறிக,

மாமி - கணவனின் தாய். மாமிக்கு மாமி - மாமியாருக்கும் மாமியார். வாணர் - கொடுக்கும் இயல்புடையார். சாமி - சிவ பெருமான். தகப்பன் சாமி - சிவபெருமானுக்குப் பிரணவ உப தேசம் செய்த சுப்பிரமணியசுவாமி.

பிரமன் ஒருமுறை சிவபெருமானை வணங்கக் கயிலை சென்றபோது முருகனை "இளையவன்" தானே என அலட்சியமாய் வழிபடாதுசெல்ல, முருகன் பிரமனை வழிமறித்துப் 'பிரணவத்திற்குப் பொருள் என்ன'? என வினவியபோது பதில் கூறத்திகைக்க, முருகன் கோபத்தால் பிரணவப் பொருளறியாது படைப்புத் தொழில் நிகழ்த்துவதெங்ஙன மெனச் சிறைசெய்து, தாமே அத்தொழிலை நடத்த, தேவர்கள் சிவபெருமானிடம் நிகழ்ந்தமையுணர்த்த, சிவபெருமானே நேரில் முருகனிடம் வந்து பிரணவப் பொருளை வினவ, முருகன் அவனது வலது காதில் ஓதியதாகப் புராண வரலாறு. இதனைச் சுவாமி மலையில் நிகழ்ந்ததாகக் கூறுவர். இதனால் முருகன் தகப்பன் சாமி எனப்பட்டனன்.

"எல்லாந் தெரிந்தவரும் ஏதும் தெரியாதவரும் இல்லை". "வான் குருவியின் கூடு..... எல்லார்க்கும் ஒவ்வொன்று எளிது" என்பது கொண்டும், "முற்றும் உணர்ந்தவரில்லை" என்ற ஆன்றோர் வாக்கானும் இக்கருத்தை யுணர்க. நெஞ்சே - விளி.

## பிள்ளை பெற்ற நிலை

### கட்டளைக் கலித்துறை

மாலாக்கி யென்னை வறுமைய
  தாக்கியென் மார்பின்முலைப்
பாலாக்கி யங்கம் பசுநரம்
  பாக்கியப் பாவையரை
மேலாக்கிச் சிக்கில் விளக்கெண்ணெ
  யாக்கியென் மேனியெல்லாம்
தோலாக்க வோமக னேபிள்ளை
  யாய்வந்து தோன்றினையே. 206

என்னை மயக்க முடையவளாகச் செய்தும் என்னை வறுமை பெறச் செய்தும், என் மார்பிலுள்ள முலைப்பாலைக் குடித்தும், உடம்பெல்லாம் பச்சை நரம்பு தெரியும்படி இளைப்படையச் செய்த நீ திருமணம் செய்து கொண்டு புதியதாக வீட்டுக்கு வந்தவளாகிய மனைவியை, மேலானவளாக மதித்து, என்னைத் தாழ்ந்தவளாக நினைத்து-(இது குறிப்பு), சிக்கு இல்லாத விளக்கெண்ணெயெல்லாம் பருகி, என் உடம்பெல்லாம் தோலாகும்படியாகச் செய்யவோ 'மகனே! புதல்வனாக வந்து பிறந்தாய்.

மனைவிக்கும் மாமியாருக்கும் உள்ள சண்டையை, (கசப்பைத் தீர்த்துவைக்காமல் மனைவிபக்கமே சார்ந்து பழகும் மகனை நோக்கிக் கூறுவது). மருமகளுக்குப் தனக்கும் சிக்கல் மேன்மேலும் வளரும்படி செய்து வைத்து ஒழுங்குபடுத்தாமல் இருக்கிறான் மகன் என்பது தொனி.

விளக்கெண்ணெய் செக்கிலாட்டி நீண்ட காலமானால் ஒருவித துர்நாற்றம் வரும். அதுவும் சிக்கல் எனப்படும். பழங்காலத்தில் குழந்தைகளுக்கு விளக்கெண்ணெய் தருவார்கள், பிள்ளை பிறந்து வளர்க்கத் தான் பாடுபட்டு, பெண் தேடி வைத்துப் படும் துன்பமும் குடும்ப வறுமையும் சேர்ந்தாற்போல அமைந்துள்ளமையை விளக்கும் பாடல்.

என்னை வறுமையதாக்கி - வறுமையடையுமாறு செய்து, மார்பின் முலைப் பாலாக்கி - மார்பிலுள்ள முலைப்பால் எல்லாம் ஆகி விடும்படி குடித்துவிட்டு, அங்கம் பசு நரம்பாக்கி-பிரசவித்தவர் உடல் நரம்புகளெல்லாம் தெரியும்படி இளைக்கும்படி செய்துவிட்டு, பாவையரை மேலாக்கி - பாவை போன்ற (புதிதாக வந்த மனைவியைத் தாயைவிட மேலானவளாகச் செய்து, மேனியெல்லாம் தோலாக்கி (மேனியில் தோல் இல்லாவிடில்) எலும்புகளே தெரியு மாதலின் எலும்பு தெரியுமாறு செய்து, உனக்காகப் 'அரும்பாடு பட்டு உழைத்துப் வீணாகிப்போய்விட்டேன், என ஏங்குகிறாள் தாய்,

## பூவோடு சேர்ந்த நாரும் மணம்பெறுமெனல்

அறுசீர் விருத்தம்

மருவினில் சார்ந்த புல்லும்
வாசனை பெற்றாற் போல
திருமலர் தன்னால் வாசம்
சேர்ந்திடு வாழைநார் போல
பெருமைசேர் தமிழ்வல் லோர்க்குப்
பேதையென் றடிமை யாலே
அருமையாய்ச் செய்த நூலு
மடவுடன் சொல்ல லாமே 207

மருவுடன் கூடிய புல்லும் நன் மணம் கொண்ட, அழகான தாமரை மலரால் மணம் சேர்ந்த வாழைப்பட்டையிலிருந்து கிழித்த நார்போல், பெருமைகூடிய தமிழில் வல்லவர்களுக்கு அறியாமை என்ற அடிமையால் அருமையாய் இயற்றிய நூலும் வரிசையாய்ச் சொல்லலாம்.

'பூவுடன் சேர்ந்த நாரும் மணம் பெறும்' என்பது பழமொழி. மருவுடன் கூடி வளரும் புல்லும் மணம் வீசும். திருமலர் - அழகுடைய மலர். அல்லது திரு வீற்றிருக்கும் தாமரை மலர் எனவும் பொருந்தும். வாழை நார் - வாழை மரத்தின் நாரினால் மலர் தொடுக்கும் வழக்கம் இன்றும் காண்கின்றோம். அடவு - அடைவு என்பதே அடவு என வந்தது. அடுத்திருப்பது எனப் பொருள்.

சிலேடை வெண்பா

சிவன் - முல்லை

மானாரைச் சேருதலால் மாலையிடத் தாடுதலாற்
கானாருங் காம்பிசையுங் காரணத்தாற் - சானகிக்கா
வில்லொடித்த கையன்ரகு வீரன் வரை தன்னிலுயர்
முல்லையர னாக மொழி. 208

மானார் - 1. மானைக் கையில் உடைமையால். 2. மகளிர் வைத்துக்கொள்ளத் தொடுக்கப்பட்ட மலராக மகளிரிடம் சேரப்

பெறுதலால். மாலையிடத்து ஆடுதலால் - 1. மாலைக் காலத்தே சிவன் தினமும் நடன மாடுதலால். 2. கட்டப்படும் மாலையை அணிபவர் அசைக்கும்போது மாலையாடியசைய அதனுடன் அதன் போக்கில் தானும் கூடவே ஆடுதலால். அல்லது காட்டில் காற்று வீசுங்கால் காம்பிலிருந்து அசைவதால். காருருங் காம்பிசையுங் காரணத்தால்- 1. சோலையை யிருப்பிடமாகக் கொண்டு ஒளிக்கும் காரணத்தால். சானகிக்கா வில்லொடித்தகையன் - சீதைக்காக வில்லை முறித்த கையையுடைய இராமன், ரகுவீரன் வரைதன்னில் - ரகுவீரனது மலையில், உயர்முல்லை அரனுக மொழி - உயர்ந்ததான முல்லை மலரைச் சிவபெருமானுகக் கூறுக.

இரகுவீரன் - ரகுவீரன்வழியில் தோன்றியமையால் இராமனுக்கு இரகுவீரன் என்று பெயர். சானகிக்கா வில்லொடித்த கையன் - சானகிக்காக என்பது சானகிக்கா என ஈறு கெட்டு நின்றது. சனக மன்னன் சீதையை மணப்பதற்குப் பணயமாகத் தன் முன்னேர் வைத்திருந்த சிவதனுசை ஏற்படுத்தினன். அதனை முறிப்பவருக்கே மணம் முடிப்பதாக முடிவுகொண்டான். விசுவாமித்திர முனிவர் வேள்வி காத்தபின் அவருடன் வந்து சனக மன்னனிடம் முனிவரால் அறிமுகப் படுத்தப்பட்டு, அவனது வில் இராமனுல் இரண்டாக ஒடிக்கப்பட்டது. எவராலும் எடுக்கமுடியாத வில், எளிதில் முறிக்கப்பட்டதனுல் அவன் கை (வீரம்) ஆற்றல் புலப்பட **வில்லொடித்த கையன் ரகுவீரன்** எனப்பட்டான்.

அரன் - ஹரன் என்ற வடமொழி தற்பவமாகி நின்றது. சானகி- சனகன் மகள் சானகி - **தத்திதாந்தநாமம்**. ரகுவழியினன் இராகவன் என்பதும் அது. காருரும் - கால்நாரும் என்று கொள்ள, காற்றில் மணம் வீசும் என்றும், கான் ஆரும் என்று கொள்ள, காட்டில் பொருந்திய என்றும் பொருள் அமையும்.

## கலைக்குப் பலர் உண்டு

வெண்பா

மானுங் கலையும் மருவிப் பிரிந்தக்கால்
மானைவிட்டுப் போனகலை வாடுமோ – மானுந்
தலைக்கினிய பேரைத்தான் தேடிக்கொண் டக்கால்
கலைக்குநூ றுயிரம்பேர் காண். 209

பெண் மானும் ஆண் மானும் கூடிப் பிரிந்தபோது பெண்மானை விட்டுச்சென்ற ஆண் மான் வாட்டமடையுமோ அடையாது.

பெண்மானும் தனக்கு விருப்பமான வேறொரு மானைத் தேடிக் கொண்டால் கலைக்கு (ஆண்மானுக்கு நூறாயிரம்) லக்ஷம் பேர் பல மான்கள் இல்லாமலா இருப்பர் என்று தெரிந்துகொள்.

இப்பாடலில் ஆண், பெண் இருவர் சேர்ந்து பிரிந்த நிலையைக் குறிப்பிக்கப்படுகிறது. தலைக்கு இனி - தனக்கேற்ற, கலைக்கு நூறாயிரம் பேர். கலை - ஆடைபோன்று பல பரிசு பெறவேண்டி வருபவர் பலர் என்பதும் இங்குக் குறிப்பு. கலை - பலவகையான கலைகள்; ஆடையென்பதும் பொருள். ஒருவர் கலையை மெச்சி உதவி செய்யாவிட்டால் வேறு எத்துணையோபேர் உலகில் இருக்கின்றனர். அதற்காகக் கவலைப்படவேண்டா என்பதும் குறிப்புப் பொருளாய் அமைந்துள்ளது நயம். மான் - பெண் மான் ; கலை - ஆண்மான். மான் பலவகை. கவரிமான் என்பது ஒருவகை. "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார், உயிர் நீப்பர் மானம் வரின்" (குறள் 969). கலையும் மானும் இணைபிரியாது வாழும் இயல்பின. "அள்ளியிரைத்தால் ஆயிரம் காக்காய்" என்பது ஒரு பழமொழி. அதுபோல் கலையை எடுத்துச் சென்றால் ஒருவர் இல்லாவிடில் வேறு ஒருவர் உதவுவர் என்பது இங்குக் கருத்து. மானும் - ஒப்பாகும். உவம உருபு.

## சண்பகமன்னர் பாடிய

### வெண்பா

மின்னே யொளிர்மணியே வெண்கமலத் தாடனத்தின்
அன்னே யெனதுள்ளத் தாரமுதே - பன்னுகலைச்
செண்பகமன் னர்குலத்திற் சீரா யுளமகிழ்ந்து
பண்புடனே கட்கணித்துப் பார். 210

மின்னல் போல்வாளே! ஒளிவிடும் நீலமணி போல்வாளே! வெண்டாமரைத் தாள் மீதுள்ள செல்வமான அன்னம் போல்வாளே! எனதுள்ளத்தின் இனிய அமுதமே! சிறப்பித்துச் சொல்லப்படும் பலகலைகளையுடைய சண்பக மன்னர் என்பவரது குலத்தைச் சீராய் (ஒழுங்காய்) மன மகிழ்வுடன், கடைக்கண் நோக்கி அருள்க.

சண்பக மன்னர் என்பவர் இறைவியை நோக்கிப் பாடியது என்பது இப்பாடல் குறிக்கும் செய்தி என்று தோன்றுகிறது. மின், மணி, அன்னே, அமுதே, அன்னே என்பன விளிகள். மின் - மின்னல்போன்று அசைந்து காணும் இடையுடையாள்; மணி - நீலமணி அல்லது மாணிக்கம் போல்வாள். அன்னே! அன்னை

யென்பது அன்னுய், அன்னே அனே என்றெல்லாம் இடைக் குறைந்து வடிவம்மாறி விளியாய் வரும்.

அமுதே - அமுதம் போன்று நினைக்க நினைக்க இனிப்பவளே. *சீராய்* - எல்லாச் சிறப்புக்களுடனும் அமைந்து காட்சியளிப்பவளே. **பண்டு** + அன்னே - தொன்று தொட்டு விளங்கும் தாயே, பழ ரஸம் போன்று இனிப்பவளே. சண்பகம் என்பதேமுறை. செண்பகம் எனவழங்குவது உலக வழக்கு. பன்னுகலை - சொல்லப்படும் கலைகள், எனப்பொருள். கலைகள் 64 என்பது "ஆய கலைகள் அறுபத்து நான்கினையும், ஏய வுணர்விக்கும் என்னம்மை - தூய உருப்பளிங்கு போல்வாள் என்உள்ளத்தி னுள்ளே யிருப் பளிங்கு வாரா திடர்" என்பதும் இங்கு நினைவு கொள்ளத்தக்கது. பார் - "நடவா மடிசீ விடுகூ" எனத்தொடங்கும் நன்னூற்பாவுள் 'பார்' என்பது தொழிலைக் காட்டும் பெயராக எடுக்கப்பட்டதறிக, வெங்கமலத்தாள் அனத்தின் அன்னே! வெண்டாமரை மலரை இருப்பிடமாக வுடைய நாமகள். இதய (பீடமாகிய) தாமரையின் நடுவே விளங்கும் ஹம்ஸமென்று சொல்லப்படும் ஹம்ஸ வடிவினளே,

"ஹம்ஸஸ்ஸோஹம், ஸோஹம் ஹம்ஸ:" என்ற உணர்வால் கண்டின்புறத்தக்கவளே! என்பது இங்குக்காண வேண்டிய வேதாந்த பரமான பொருள் என்றுணர்க." அன்ன விசாரம் அதுவே விசாரம், சொன்ன விசாரம் தொலையா விசாரம்" என்பது ஒரு பழ மொழி. ஹம்ஸ வடிவினளாய் ஆராய்ந்து தத்பதம் என்ற சொல்லின் முடிவான பொருள். ஆராய்ந்து இன்புறுவதே இங்கு ஸாரம், காசித்தலத்தில் விளங்குவதாகக்கருதப்படும் பாமர மக்களும் கூறிக் கொண்டிருக்கும் ஸ்ரீ அன்னபூரணிக்கும் இதுவே பொருள் என்க. ஹம்ஸ மயமாகவும் முழுமை பெற்றவளான வடிவினளாயும் விளங்குபவள் இறைவி. சாஸ்த்ர (விசாரம்) ஆராய்ச்சி மேலே போகப் போக விளக்க வேண்டிய விஷயங்கள் இங்கு ஓரளவு எழுதப்பட்டன.

சண்பக மன்னுர் :- அரியிலூர் ஜமீனில் இப்பெயருடைய குடிப் பெயராகக் கொண்ட ஒரு பரம்பரையினர் வித்துவான்களாக இருந்த னர். தென்கலை வைணவர்கள். இராசமன்னுர் கோயிலில் இறைவன் பெயர் மன்னர் என்பது இக்குடும்பத்தினருக்கு. இளமையிலேயே பாடும் ஆற்றல் இருந்தது. அத்வைதத்தில் வல்லவர்கள். சமரச நோக்கினர். பொதுப்பெயரையே சிறப்புப் பெயராகக் கொண்ட ஸ்ரீ நிவாஸ் ஐயங்கார் என்பவர், பொதுப் பெயராலேயே வழங்கப் பட்டார் போலும். சிறப்புப் பெயரைச் சிலரே அறிவர். (நல்லுரைக் கோவை),

## மோகன் துருவசாமி மேல் பாடிய

விருத்தம்

முத்தமிழா னிசைவாணர்க் கருளு மோகன்
மோகமட வார்க்குமதன் முனிந்து போரிற்
தத்துறுவாம் பரியேறுந் துருவ சாமி
தயவுவைத்துப் பஞ்சணைமேற் றழுவு நாளிற்
சித்தசனம் பவர்முலை யினூடு பாயத்
தென்றல்புலி போல்தாவத் திங்கள் காய
மெத்தமய்யல் யான்கண்டே னத்தை மின்னே
யவரிடத்தில் விளம்பு வாயே. 211

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழால் இசைவாணர்க்கு அருளும் மோகன், மோகத்தையுடைய மகளிர்க்கு மன்மதன். போரில் தாவிக் கோபித்துப் புறப்படும் குதிரையேறும் துருவசாமி, கருணையுடன் படுக்கையில் தழுவும் போது உள்ளம், பொருந்தியவருடைய முலைமேல் பாய, தென்றற் காற்று புலிபோல் தாவிவர, சந்திரன் வெப்பத்தைத் தரும்படி நிலவொளி வீச, மிகவும் காதல் கொண்டேன் யான். மின்னல் போல் இடையுடையாளே! அதனை அவரிடம் கூறுக.

மோகன் மதன் துருவசாமி என்பவர் மீது ஒருத்தி காதல்கொண்டு கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல். தலைவன் கொடுக்கும் குணமுடையவன் என்பதும், (காமகலா ரசிகன்) காமி என்பதும், அவனிடம் தனக்குள்ள ஆசையை வெளிப் படுத்துவதாகவும் அமைந்துள்ளது இப்பாடல். காம மிக்கார்க்குச் சந்திரன் வீசும் குளிர் கிரணமும் வெப்பந் தரும். தத்து – மிகுந்து வருகின்றகோபம். "சால உறு தவ நனி கழி கூர் மிகல்" (நன். உரியியல், சூ. 456) பஞ்சணை-படுக்கை. இலவம் பஞ்சாலாகிய பஞ்சுப் படுக்கை. "புலிபோலத் தாவ" புலிபோலப் பாய்ந்தான் என்பதையே புலி போலத் தாவினான் என்று கூறுகிறார், திங்கள் நிலவொளி வீசியது என்று கூறாமல் 'காய' என்றது, காம மிகுதி கொண்டவருக்குத் திங்கள் எங்ஙனம் துன்புறுத்தும் ,என்பது புலப் படுத்தவேயாம். மையல் மய்யில் என அமைந்தது இடைப் போலி மின்னே! விளி. உவமையாகு பெயர்.

## புழுக்கச்சி குணம் போகுமா?

கட்டளைக் கலித்துறை

முழுக்குற்ற மென்றுமுனி வோர்கள்
 தேடி முறியெழுதி
வழக்குக்கு வந்த புழுக்கச்சி
 காணவவள் மீதிருக்கும்
அழுக்குத் துடைத்து மையிட்டுப்
 பொட்டிட்டு அலங்கரித்தால்
புழுக்கச்சி தன்குணம் போமோ
 யவள்பெத்த பெண்ணுக்குமே. 212

மிகவும் குற்றமென்று முனிவர்கள் தேடிச் சீட்டு எழுதி வழக்குத் தொடுப்பதற்கு வந்த புழுக்கச்சி அழுக்கைப் போக்கி மைதீட்டி நெற்றிக்குப் பொட்டிணையிட்டு அழகு செய்தால் புழுக்கச்சியின்குணம் அவளைவிட்டு விலகிப்போய் விடுமோ? போகாது. விடாமல் குணம் பின்பற்றிவரத்தான் செய்யும்.

'தாயைப் போல் மகள், நூலைப் போல் சேலை' என்ற பழமொழிக்கு ஏற்றபடி இப்பாடல் கருத்து அமைந்துள்ளது. முழுக் குற்றம் - மிகவும் முழுமையும் அமைந்த குற்றம் எனவும், இவளை இனிச் சேர்க்கத் தகாது இவளுக்கு முழுக்கு (நீர்) ஆடிவிட்டு விடுவோம் எனவும் பொருள் அமையும். இது யாரைக்குறிக்கின்றதோ தெளிவுபெற இயலவில்லை. யாரோ ஒருத்தி தவறிய வழியில் சென்றவளைப் பற்றியதாக இருக்கலாம் போலத் தோன்றுகிறது

நாயைக் குளிப்பாட்டி நட்டுள்ளே வைத்தாலும், அது வாலைக் குழைத்துக் கொண்டு தான் போகும் என்பது ஒரு பழமொழி. அது போல் புழுக்கச்சிக்கு எவ்வளவு செய்த போதிலும் தன் குணம் போகாது என்கிறார் ஆசிரியர், "முழுக்குற்ற மென்று முனிவோர்கள் தேடி முறியெழுதி" வழக்குக்கு வந்த புழுக் கச்சி காண" இத் தொடருள், கணவனுக்கும் மனைவிக்கும் ஏற்பட்ட வழக்கு பஞ்சாயத்துக்கு வந்து, புழுக்கச்சி மீது முழுக்குற்றம் என்று குற்றம் சாட்டப்பட்ட வரலாறு ஒன்று இருப்பதாகத் தோன்றுகிறது.

### வேல மரத்தைப் பாடியது

மூலமுதலே முள்ளுடையாய்
மூவா மலரா யரிநிழலாய்

ஏலும் பசிக்கா காக்கனியா
யெல்லோர்க் குதவா யெனினுமந்தோ

ஞால மதனிற் கதலிபலா
நறுமாங் கனிக்கு ளடர்ந்தகரு

வேல மரமே இடையூறே
விளைத்தாய் வேலி வளைத்தாயே. 213

அடிமரம்முதல் முள்ளையுடையாய், பழமையடையாதமலருடையாய், அரிநிழலையுடையாய், பொருந்திய பசிக்குப் பொருந்தாத கனியுடையாய் எல்லோருக்கும் உதவாமல் இருந்தாய் என்ற போதிலும், ஐயோ. உலகில் வாழை, பலா, மாங்கனி தரும் மரங்கள் போன்று நெருங்கி வளர்ந்துள்ள கரு வேலமரமே! துன்பமே உண்டாக்கிறுய்; வேலியாக வளைந்து விட்டாய்.

மூல முதலே - "மூல முதலே முதற் பொருளே"
"மூவா மலராய்" — "மூவா முதலே" (சீவக. சிந்தாமணி)
அரிநிழல் — கொஞ்சம் கொஞ்சம் அமைந்திருக்கும் நிழல்

அந்தோ — ஐயோ! இரங்கற் குறிப்பு. கதலி - வாழை. கனி - பலா, மா, வாழைகளின் முக்கனி. அடர்ந்த கரு வேல மரம் - நெருக்கமாக வளர்ந்த கரு வேல மரம்.

### தோழி தலைவியிருப்பிடங் கூறல்

கட்டளைக் கலித்துறை

மெய்ம்மானை யும்சடை யம்புலி
மானையும் வெற்றியுடைக்

கைம்மானை யுங்கொண்ட வேகம்ப
வாணர்தங் கச்சிவெற்பி

லும்மானை யிந்தப் புனங்காக்கும்
நாங்க ளொளித் துக்கொள்ள

வம்மானை தானல்ல வேமன்ன
ரேவிளை யாடுதற்கே. 214

மன்னரே! உண்மையான மானையும், சடையினிடத்தே விளங்கும் சந்திரனாகிய மானையும் வெற்றியினைக் கொள் துதிக்கை யுடைய யானையையும் கொண்டுள்ள ஏகம்பவாணர் வாழும் காஞ்சி புரத்தே விளங்கும் மலையில், எதிரிலுள்ள மான் போன்ற மருண்ட பார்வையினையுடைய இப்பெண்ணாகிய மானையும், தினைப் புனத்தைப் பாதுகாக்கும் நாங்கள் ஒளித்துப் பதுக்கி வைத்து மறைத்துக் கொள்ள அழகிய அம்மானையல்லவே விளையாடுவதற்கு.

மெய் மான் - உடலின் கண் இடப்பாகத்தைப் பெற்ற மான் போன்ற மருண்ட பார்வையுடைய பார்வதி. அம்புலி மான் - சந்தி ரன் நடுவே காட்சியளிக்கும் களங்கமே மான், மான் போன்ற வடி வம். வெற்றியுடைக் கைம்மான்-வெற்றியைத் தரவல்ல துதிக்கை யுடைய யானை. மன்னர்களுக்குள்ளே நால்வகைப் படைகளுள் ஒன்று யானைப்படை. மன்னர்களுக்கு வெற்றி தருவது.

வெற்றி தருபவன் யானை முகமுடைய கணபதி. ஆதலின் அவனையும் சேர்த்துக் கொண்டாரெனலும் ஒன்று. மான் என்பது பல முறை வர வேண்டுமென்பதற்காக கைமான் என்று யானையை யும் கூறியபடி. அம்மானை - விளையாடும் பந்து போன்ற வர்ணம் பூசிப்பட்ட மர உருளை. அதனை மகளிர் கூடி விளையாடுகையில் ஒளித்து வைத்துக் கொள்வது வழக்கம். சோழி, தாயக்கட்டை, பலகரனை (பல்லாங்குழி), கழற்சிக்காய் ஆகியவையும் மகளிர் விளையாடுகருவிகளாம். இவை 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்ற உத்தியானும், "ஒரு மொழி யொழிதன் தன்னினங் கொளற் குரித்தே" என்ற நன்னூல் விதிகளா னென்க.

### தலைவி நெஞ்சிற்குக் கூறி நிலவு கண்டிரங்கல்

#### கட்டளைக் கலித்துறை

விறகன் றியேயெரி யும்வெண்
ணிலாவினை யேனிருந்த
சிறகன் றியேதெரு வெல்லாஞ்
சுடுந்திருந் தார்கிளையைப்
பிறகன் றியேகண்டன் கண்டன்
பிரசத் தொடைவிரும்பி
யிறகன் றியேப றக்கக்கரு
தா நிற்கு மென்னெஞ்சமே. 215

வெண்ணிலா, விறகில்லாமலேயே சுட்டு எரிக்கும். தீவினையே னாகிய என்னைச் சுடுவதுடன் யான் இருக்கும் பக்கம் முழுவதும் சுட் டெரிக்கும். பகைவர் அவரது உறவினர் கோபித்தலாற் கண்டிக்கத் தக்க தலைவனது தேனொழுகும் மலர் மாலையைப் பெற விரும்பி எனது நெஞ்சம் இறக்கையில்லாமலேயே பறக்க எண்ணும்.

விறகில்லாமல் நெருப்பு எரிய விட முடியாது. எரியும் போது வெப்பத்தால் எரிச்சல் ஏற்படும். வெண்ணிலவு, பிரிந்தவர்களுக்கு எரிச்சலை உண்டாக்கும். வெறுப்பு ஏற்படச் செய்யும். வினை-நல்வினை தீவினையென்ற இரண்டுக்கும் பொது. எனினும் இங்குப் பின்னதைக் குறித்தது. திருந்தார் - மனம் பொருந்தாத பகைவர். கிளை-உறவினர், மரத்தின் கிளைப் பக்கங்களிலும் வளர்ந்து விரிவு பெறுவது போல் உறவினரும் மல்குதலான். உவமையாகு பெயர்.

சிறகு - பறவையின் சிறகு (இறக்கை) போன்ற வீதி. முன் காலங்களில் எதிர்எதிராக வீடுகள் அமையும்படி வீதிகள் அமைப்பர். ஒரு பக்கத்திற்குச் சிறகு எனப் பெயர். இதுவும் உவமையாகு பெயரேயாம். இறக்கை இல்லாமல் பறக்க இயலாது. மனம் ஒரு நிலையில் நில்லாது. இங்கும் அங்கும் அலைந்து கொண்டிருத்தலைப் பறப்பதாக உபசார வழக்காகக் கூறப்படுவது மரபு. பிரசம் - தேன். தலைவன் மாலை பெறும் ஆசையால் உள்ளம் விரைகின்றது என்பது கருத்து. சிறகு அன்றி, வழி நடத்தலால் முகம் முதலிய வாடும். உலகாளும் தலைவன் கழுத்தில் அணிந்த மாலை பெறச் சிறகு அன்றியே மனம் விழையும்.

வெண்ணிலவு-பண்புத் தொகை. தெருவெல்லாம் சுடும் - வீதியில் உள்ளார் யாவரும் கூறும் சுடுசொற்கள் உள்ளத்தைச் சுடும். கருதாநிற்கும்-செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். தொடுப்பது வாய்பாட்டு தொடை - காரணப் பெயர். மாலை-மால் - தன்னை அணிந்தாரை அழகால் மயங்க வைப்பது காரணமாக அமைந்த காரணப் பெயர். ஐ-சாரியை.

> "ஊரைச் சுடுமோ உலகந் தனைச்சுடுமோ
> ஆரைச் சுடுமோ அறியேனே — நேரே
> பொருப்புவட்ட மானநகிற் பூங்கொடியீ ரிந்த
> நெருப்புவட்ட மான நிலா" (-ஔவையார்),

### தலைவன் கூறியவாறு வாராமைக்கு இரங்கல்

கட்டளைக் கலித்துறை

> வீணே விரகங்கொண் டேனேயிந்
> நேரம் விரும்பிவரக்
> காணேன் மதனம்பு பாயுதை
> யோவொரு வாய்க்கவளம்
> ஊணே சிறுத்து முடலே
> மெலிந்திருந்த வொட்டுத்திண்ணைத்
> தூணே யுனக்குரைத் தேனே
> யென்னெஞ்சிற் றுயரங்களே. 216

(யான்) ஒரு பயனுமின்றித் தலைவரை யடையும் காமவிரகம் கொண்டேன். இதுவரை வருவதாகக் கூறிய தலைவர் வரக்கண்டி லேன். மன்மதன் ஏவிய அம்பு பாய்கின்றது. ஐயோ! ஒரு வாய்க் குள் அளவு செல்லும் கவளச் சோறும் குறைந்து, உடல் மெலிந்து ஒண்டியிருப்பதற்குத் தக்கபடியிருந்த தூணை உன்னையே நோக்கி நோக்கி என் துன்பங்களை உன்னிடம் கூறினேன்.

இதனுள் தலைவன் கொடைத்திறம் பாராட்டிய படியாம். தலைவன் தலைவியர் பிரிவுக் காலத்தில் ஏற்படும் உள்ள, உடல் வருத்தங்களை விரகம் என்பர். மதன்-மன்மதன்-அழகன் என்பது பொருள். மதனுக்கு அம்புகள் தாமரை, முல்லை, மல்லிகை, நீலம், குவளை மலர் என்பன. இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகைத் துயரத்தை யளிக்கும் குணமுடையவை. ஐயோ!-இரங்கற் குறிப்பின் கண் வந்தது.

ஒரு வாய்க் கவளம் - சாதாரணமாக வாய் கொள்ளுமளவு. உருண்டையளவான சாத உருண்டை. அதனை இங்கு வெகு அழகாகப் புலவன் கவளம் என்பது ஒரு வாய் சாதாரணமாகக் கொள்ளும் அளவுள்ள உணவு என்றுணர "ஒரு வாய்க் கவளம் என்றே கூறினன். நாம் உண்ணும் போது ஒவ்வொரு வாய் உணவும் வாய்க்குள் கொண்டு சென்று இட்டுக் கொள்ளும் போது கோவிந்தன் பெயர் கூறியே உண்ண வேண்டும் என்பதைக் 'கபளே கவளே கோவிந்தம்' அல்லது பிடிக்குப் பிடி நமச்சிவாயம் என்று சொல்லி உண்ண வேண்டு மென்பர்.

யானைக்கு இடும் பெரிய சோற்று உருண்டையும், கவளம் என்று கூறப்படும். ஒரு கவளச் சோறு யானைக்குக் கொடுக்கும் போது சிதறுகின்றவை பல எறும்புகளுக்கு உணவாம் என்று ஒரு புலவன் பாடினன். "கவள மால் யானை" கவளச் சோற்றை யுண்ணும் பெரிய யானை என்பது பொருள். கோவில் களில் யானைப்பாகன் யானைக்கு உருண்டை உருண்டையாகச் சோற்றை உருட்டித் தருவான். அதனைக் கவனிக்கப் புரியும்.

கவலையுடையார்க்கு உணவு ஏற்காது. உணவில்லாவிடில் உடல் மெலிவு காணும். பிரிந்த காதலர் நிலையும் இதுவே. ஒட்டுத் திண்ணை உள்ள கிராமங்களில் உள்ள வீடுகளில் வாயிற் புறங்களில் சுவர்களை யொட்டியுற்றபோல் ஒருவர் மட்டும் அமர்ந்திருக்கவோ, படுக்குமாறே அமைக்கப்படும் திண்ணை. மாலைவேளைகளில் மகளிர் இத்திண்ணைகளில் சிறிது அமர்ந்திருப்பது வழக்கம்.

இவ்வாறே முன்வாசல் வாயிற்படிக்கும் அடுத்து, உள்ளே நுழையும் வாயிற்படிக்கும் இடையில் இருக்குமிடத்தில் திண்ணைகள் தகுந்தபடி அமைப்பர். அது இடைகழித் திண்ணையாகும். அதுவே இரேழித் திண்ணை என மருவி வழங்கப்படும் வழக்கத்தை இன்றும் கேட்கலாம், காணலாம். திண்ணைத் தூண் - முன் காலங்களில் கூறை வீடுகளானாலும் மெத்தை வீடுகளானாலும் ஓட்டு வீடுகளானாலும் தூண்கள் கூறைகளைத் தாங்கி நிற்பதற்காக நிறுத்துவார்கள். மகளிர் கிழவர் முதலானவர் அவற்றில் சாய்ந்து கொண்டோ, பிடித்துக் கொண்டோ நிற்க, பேச வசதி. "கேளாதனைக் கேட்குந போலவும்" என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு இலக்கியமாய் இப்பாவினைக் கொள்ளல் பொருந்தும்.

## வாத்தியார் சோலைமலைமீது பாடிய

வெண்பா

வேதக் கடற்குவங்கம் மெய்ஞ்ஞான தீபமெனக்
கோதற்ற விப்ர குலதிலகம் - பூதலத்துள்
ஏத்தியா ரும்புகழ வெங்கும்ப்ர சித்திபெறு
வாத்தியார் சோலை மலை. 217

வேதமாம் கடலுக்குக் கப்பல். உண்மையான ஞான விளக்கு. மனதில் குற்றமற்ற பிராம்மண குலத்திலுதித்த திலகமாம். உலகில் கொண்டாடி எல்லோரும் புகழ, எங்கும் புகழ் பரவ, வேதமோதுவிக்கும் வாத்தியார் என்ற பெயருடையவர். வேதம் வல்ல ஞானி. சிறந்த பிராம்மணர். யாவரும் போற்றும் பெருமையர்.

இவரிடம் அன்புடைய ஒரு புலவரோ இவரது சீடரோ இவர் மேல் பாடும் ஆசையால் இப்பாடல் எழுந்ததாக இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

சோலை மலை – இது இடப் பெயரன்று. ஒருவர் பெயர். பூதலம் - பூப் போன்ற அமைப்புடைய நிலம். வேதக்கடல் - உருவகம். வங்கம்-கப்பல்-சில சமயம் கடலையும் குறிக்கும்.

இதற்கு **"வங்கம் போகும்** வாணிகர் தம்முடன்
தங்கா வேட்கையின் தானுஞ் செல்வழி" (மணிமேகலை ஆதிரை பிச்சையிட்ட காதை. 11-12.) "வங்கக் கடல் கடைந்த மாதவனை" (திருப்பாவை 30) என்பன சான்றுகள்.

வேலுக்குச் சொல்லி மயிலுக்குச்
சொல்லிநின் வீரத்தண்டைக்
காலுக்குச் சொல்லி யபயமிட்
டேன்பின் கருங்குறப்பெண்
பாலுக்குஞ் சொல்லி யழுதுவிட்
டேன்முகம் பார்குமரா
மாலுக்குச் சொல்லிய மால்யானை
யுய்ந்த வகையென்னவே. 218

வேலுக்கும் மயிலுக்கும் கூறி, உனது வீரம் பொருந்திய தண்டையென்ற காலணியையும் கூறி, (அபயம்) நான் அடைக்கலம் என்று கூறிவிட்டேன். பிறகு கருநிறமுடைய குறப்பெண் வள்ளியிடம் என் கஷ்டங்களைக் கூறியழுது விட்டேன். திருமாலுக்கு மயக்கத்துக்குக் கூறிய பெருமையுடைய தெய்வயானை நற்கதியடைந்த வகை என்ன வென்று கூறு? ஏழையாகிய என் முகத்தின்மீது நின் கடைக்கண்ணால் பார்த்து அருள்க குமரப் பெருமானே!

குறப்பெண்பாலுக்கு என்பது, குறப்பெண் வள்ளியிடம் எனவும், பாலுக்கும் சொல்லியழுது விட்டேன் எனவும் பொருள் தோன்றுகிறது. சொல்லியாகி விட்டது என்பது கோபத்தில் பேசும் போது சொல்லியழுது விட்டேன் என்று ஒரு சில ஜில்லாக்காரர்கள் கூறுகின்றார்கள். தாயே பாலூட்டி வளர்ப்பவள் என்பதும் இதனுள் தோன்றும்படி அமைத்திருப்பது நயம்.

இப்பாடலில் முருகன் தொடர்புடைய தெய்வயானை வள்ளி, வேல், மயில், அவனது தாய் மாமனை திருமால் முதலிய பெயர்கள் வந்துள்ளமை அறிக.

# ஐயரவர்கள்
# பாடிய பாடல்களும்
# ஐயரவர்களைப் பற்றிப்
# பிறர் பாடிய பாடல்களும்

ஆசிரியர் குறிப்பு : டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள். இவர் தந்தை : வேங்கட சுப்பையர். தாயார் : சரஸ்வதி அம்மாள். இவர் வாழ்ந்த காலம் : 1855-1942. இவர் ஆசிரியர் : மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள். இவர் பதிப்பித்த நூல்கள் : சீவக சிந்தாமணி, மணிமேகலை முதலாயின பலப்பல. இவருக்குச் சென்னை மாநிலக் கல்லூரி முன் சிலை உண்டு. இது தமிழ்த் தொண்டின் அடையாளம். இவர் பெயரால் நூல் நிலையம் திருவான்மியூரில் உள்ளது.

---

ஐயரவர்களின் விரிவான வரலாற்றை "என் சரித்திரம்" என்னும் நூலிற் காண்க.

## மதுரை மீனாட்சியம்மன் மீது பாடிய கடம்பவனவல்லிப் பதிகம்

கட்டளைக் கலித்துறை

அன்பே யிலாதவர் செய்யுங்
　　கொடிய வவமதிப்பால்
அன்பே யடையு மனத்தேனை
　　யாளத் தொடங்குவையோ
இன்பே செறிமது ராபுரி
　　யன்பரி தய முற்றோய்
வன்பே சமையமணித் தீபக்
　　கடம்ப வனவல்லியே. 219

ஆற்றல் மிக்கவளே! வெற்றி மகளாக விளங்குபவளே! மணித்தீவினைப் போன்ற கடம்ப வனத்தில் எழுந்தருளிய கொடி போன்றவளே! அன்பே இல்லாதவர் செய்கின்ற கொடிய அவமதிப்பால் துன்பமே யடைகின்ற மனமுடைய என்னை ஆளத் தொடங்குவாயோ? இன்பமே நிறைந்த மதுராபுரியில் வாழும் அடியவர் இதயங்களை இடமாகப் பெற்றவளே!

வன்பு – மிக்க ஆற்றல். மதுரம் என்ற சொல்லுக்கு இனிமை என்பது பொருள். அதனால் மதுரை எனப் பெயர்.

### கடம்பவனம்

கடம்பவனம் : ஆலவாய், மதுரை என வேறு பெயர்களும் உண்டு. இறைவன் அறுபத்துநான்கு திருவிளையாடல்கள் நிகழ்த்திய இடம். சங்கம் இருந்த தலம். மூர்த்தி நாயனார் ஆண்ட பெருமையுடையது. மாணிக்கவாசகர் பாண்டியனுக்கு அமைச்சராக இருந்த இடம். ஞானசம்பந்தப் பெருமான் திருநீற்றுப் பதிகம் பாடிய பெருமையுடையது.

மீனாட்சி அம்மை ஆட்சி செலுத்தும் பெருமை அமைந்த தலம். நாகம் உமிழ்ந்த விஷத்தைச் சிவன் அமுதத்தால் மதுரமாக்கியதால் மதுரை என்று பெயர் அமைந்தது என்பர். அழகர் மனைவி மதுரவல்லித் தாய், சிவபெருமானது தங்கையாதலின் அவள் நினைவு கூர மதுரை எனப் பெயரிட்டனர் என்பர். இவ்வாறு மயிலாப்பூரிலும் கேசவப் பெருமான் மனைவி மயூரவல்லித்தாய் நினைவாய் மயூரபுரி (மயிலாப்பூர்) என்று பெயர் அமைந்தமையும் நோக்கத் தக்கது.

ஆவா நினதடி யெண்ணுமல்
வீண்செய லாற்றிவெய்ய
தீவாய் விழுப்புழுப் போலநொந்
தேனின்று தேர்ந்தடைந்தேன்
தேவாதி தேவனிடத்தாய்நினை
யன்பிற்சே வைசெய்ய
வாவா வினி தருளீவாய்
கடம்ப வனவல்லியே 220

கடம்பவனத்தில் எழுந்தருளியுள்ள வல்லிக்கொடி போன்ற இடையை உடைய தாயே! உனது பாத கமலங்களை நினைக்காமல் வீண் காரியங்களைச் செய்து தீப்போன்ற கொடிய வாயையுடைய நரகத்தில் விழும் புழுவைப் போல் வருந்தினேன். இப்போது தெளிவுடன் வந்தடைந்தேன். தேவர்களுக்கெல்லாம் தலைவனை தேவதேவன் இடப்பாகத்தைத் தன் இருப்பிடமாகப் பெற்றவளே! உனக்கு அன்புடன் தொண்டாற்ற வருகவருக என என்னை யழைத்து அருள் புரிவாய்.

ஆ! ஆ! என்பது இரங்கல் குறிப்புணர்த்த வந்த வியப் பிடைச் சொல்; வாவா - அடுக்கு. "ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தார் ஒருசாரார்," (காரிகை - செய். 26. அடிதோறும் இறுதிக்கண் ஒரு சாரார் என்னும் தனிச்சொல் பெற்று வந்த வெளி விருத்தத்துக்கு மேற்கோள்). "ஆவா என்றனக் கருளாய் போற்றி" (போற்றித் திருவகவல். வரி. 99. திருவாசகம்.)

ஐந்து வகையான சபைகளுள் வெள்ளியம்பலம் இங்கு உண்டு. ரஜதசபை எனப் பெயர் பெறும். கால் மாறி ஆடின படலம் அறுபத்து நான்கு திருவிளையாடல்களுள் அமைந் துள்ளமை அறிக.

ஊனுர் மயனுர் வியாத னுதிட்டிர னேங்குவிறல்
காஞர் சிலைவிசைய னன்றி னின்புகழ்க் கூறுதற்கு
யானு ரெனினுஞ் சரண்புகுந் தேனகற் றென்குறையை
வானுர் முகில்படி யுஞ்சீர்க் கடம்ப வனவல்லியே. 221

சிறந்த மேகம்படியும் மதில்களையுடைய சிறப்பான கடம்பவனம் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள வல்லிக்கொடி போல்வாளே! குற்றம் பொருந்திய மயக்கம் நீங்கிய வியாதன், தருமன், வெற்றிமிக்க வில்லையுடைய அருச்சுனன் இவர்களைத் தவிர உனது புகழைக் கூறுவதற்கு நான்யார்? என்ருலும் (உனது) சரணங்களை நம்பி அடைந்தேன். எனது குறையை விலக்குவது உனது பொறுப்பே. நான் வேறு எவரிடமும் செல்லமாட்டேன்.

மயல்தீர் வியாதன் - அஞ்ஞானம் நீங்கிய வியாஸர். வியாஸர் தருமர், அருச்சுனன் என்போரே இறைவியின் பெருமைகளை எடுத்துக்கூற வல்லவர். மற்றவரால் புகழ இயலாது என்பது குறிப்பெச்சம்.

வியாதன் - வேதங்களை வகுப்பவர், 28 பேர். ஒவ்வொரு மந்வந்தரத்திலும் வேதங்களை வெளியிடுவார்கள். அழிவற்ற சிரஞ்சீவிகள். உதிட்டிரன் - பஞ்சபாண்டவருள் முதல்வரான தருமன்; "யாறு ரெனினும்", "யானுர் என்னுள்ளங்களார் ஞானங்களார்". (திருவாசகம், திருக்கோத்தும்பி செய், 2).

### சிவபெருமானுக்கு அமிழ்தம் போன்றவளே

காணிக்கை வைத்தம ரேசர்
வணங்குநின் கான்மலரை
பேணித் தொழுது நினைக்க
வருள்செய் பெரியம்மையே!
ஆணிப் பொன்வில் விதனக்கமிழ்
தேயகி லாண்டம் பெற்ற
மாணிக் கமேமணித் தீபக்
கடம்ப வனவல்லியே. 222

பெருந்தாயே. மேருமலையை வில்லாக உடையவளே! ஆணிப்பொன் போன்ற நிறமுடையாளே! தன்னை நினைப்பவருக்கு அமுதம் போன்று எப்போதும் இன்பந் தந்து கொண்டிருப்பவளே! எல்லா உலகங்களையும் பெற்ற மாணிக்கம் போல்வாளே! மணித்தீவில் எப்போதும் விளங்கும் அருள் மிகுதியான கடம்பவனம் என்ற பல பெயர்களுள் ஒன்றைப்பெற்ற மதுரையில் விளங்கும் மீனுட்சியே! தன்னிடமுள்ள பொருள்களை வைத்துத் தேவர்கள் வணங்குகின்ற உனது கால்களாகிய மலரை விரும்பித் தொழுது நினைக்க அருள்.

மாணிக்கம் - நவமணிகளுள் ஒன்று நவமணிகளாவன: கோமேதகம், நீலம், பவளம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைரம். வைடூரியம். ஆணிப்பொன்-நால் வகைப் பொருள்களுள் ஒன்று. ஆடகம் கிளிச்சிறை சாதருபம், சாம்பூநதம். ஆடகம் - மிக்க ஒளி கொண்டது கிளிச்சிறை - சற்றுப் பசுமை நிறமுடையது. சாதருபம் - சதகும்பம் என்ற மலையில் தோன்றுவது. சாம்பூநதம் - மேருமலையருகில் நாவற்பழரச நதியில் தோன்றுவது. [இவை சிவமூர்த்தியின் வீரியம் எனப்படும்],

மணித்தீபம் - மணித்வீபம் என்று தமிழில் வரும். புவனேசுவரி இருப்பிடம். சகலவித தேவதைகளும் சூழப் பொன்மயமான மதில் களுக்குள் பல சக்திகளும் சேவிக்க, மந்த்ரங்கள், வேதங்கள். மகாவித்யைகள் துதிக்க, சிந்தாமணி என்ற பெயருள்ள இல்லத் தில் இரத்தின மயமான அரியணையில் எழுந்தருளியிருப்பவள் புவனேசுவரி, என்று தேவீபாகவதம் கூறும்.

சிவன் வீரியம் மேல்நோக்கியபோது சிறிது பூமியில் விழுந்து தீயுடன் கலந்தது; ஒளியிடன் ஒளிகூடிப் பொன்னாயிற்று; அக்னியும் சந்திரனும் கூடியதே பொன் என்று பாரதம் கூறும்.

கதம்பவனம் : வடமொழிச்சொல், தமிழில் கடம்பவனம் எனப்படும். தேவி தங்கியிருக்கும் இடத்தில் மந்தாரம் முதலாகிய ஐவகைக் காடுகளையும் தாண்டி, உள்ளே நுழையும்போது சிறிய காடுபோல் அமைந்த தோட்டம். இது இயற்கையாக உள்ளது.

உபவனம் - சிறுகாடு. செயற்கையாக அமைப்பது தோட்டம் எனப்படும். கடம்பமலர் மணம்மிக்க மலர்களுள் தலைசிறந்தது.

தாயா முனக்குத் தமியேன் குறைகளைச் சாற்றினனே
ஈயார் தமிழ்ச் சுவையா லிறுமாந் திருப்பவர்பாற்
போயா சகஞ்செய விட்டுவிடே லென்றன் புத்தமுதே
வாயார வாழ்த்த வருள்வாய் கடம்ப வனவல்லியே. 223

புதிய அமுதம் போல்வாளே! கடம்பவனத்தில் எழுந் தருளிய வள்ளிக்கொடி போல்வாளே! தாயான உன்பால் என் குறைகளைச் சாற்றுவது நல்லது. கொடுக்காத லோபிகளிடமும் தமிழின் சுவையையறியாது கர்வப்பட்டிருப்பவரிடமும் சென்று யாசிக்கும்படி விட்டுவிடாதே. உன்னை வாயார வாழ்த்த அருள்க.

ஈயார் - "ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்" (கொன்றை வேந்தன் 4). ஈயார் - எதிர்மறை. ஈவார் - உடன்பாடு. "ஈயாத புல்லர் இருந்தென்ன இறந்தென்ன" தனிப்பாடல் திரட்டு - படிக் காசுத் தம்பிரான் (பாடல் 6). இறுமாந்திருத்தல் - இறுமாந்திருப்பன் கொலோ" தேவாரம் (நாவுக்). யாசகம் - ஒன்றைப் பெறவேண்டிப் பிறரிடம் சென்று தயவை நாடி நிற்றல். "யாசகம் புருஷ லக்ஷணம்" என்பது வேடிக்கையாகச் சொல்லப்படும் பழமொழி. போய் என்ற சொல் எதுகை நோக்கி 'போ' என்று நின்றது. வாயால் வாழ்த்தல்—"வாயே வாழ்த்து கண்டாய்" (நாவுக். தேவாரம்) புதுமை + அமுது = புத்தமுது.

தூமேவு வீரந் திருஞான
மூன்றையுந் தொண்டரெல்லாம்
தாமேவும் வண்ணம் அளிப்பாயென்
றுன்றவர் சாற்றுதல்கேட்
டாமேவு நின்சரண் சார்ந்தே
னிவற்றை யெளிதருள்வாய்
மாமேவு வானவர் வாழ்த்துறுங்
கடம்ப வனவல்லியே. 224

சிறப்புடைய தேவர் வாழ்த்தும் கடம்பவனத்தில் விளங்கும் வல்லிக்கொடி போன்றவளே! வீரம், செல்வம், ஞானம் ஆகிய மூன்றையும் அடியவரெல்லாம் பொருந்தும்படி தருவாய் என்று மேலோர் சொல்லக் கேட்டோம். காமதேனுவின் மேல் எழுந்தருளுகின்ற, நின் பாதங்களைச் சரணமாக அடைந்தேன். மூன்று பேற்றையும் தந்தருள்வாய்.

ஆமேவும்-ரிஷப வாஹனத்தின் மேல் பவனிவரும் இத்தலத்துக்குப் புராணம் வடமொழியில் ஹாலாஸ்யமான்மியம் தமிழில் கடம்பவன புராணம், திருவிளையாடற் புராணம் என்பன உண்டு.

நற்றவர் கற்றவர் நாவலர்
காவலர் ஞானமிகப்
பெற்றவர் தம்முள் மகிடனைப்
போற்றவப் பேறுதனை
மீற்றவர் சார்பவன் சென்னிநின்
றுள்பெற் றுரைக்கு மல்லால்
மற்றவரார் சொல்வல்லார்
கடம்ப வனவல்லியே. 225

கடம்பவனம் என்ற தலத்திலுள்ள மீனாட்சியே! நல்ல தவத்தினையுடையவர் கல்வி கற்ற பெரியவர்கள், பேசுவதிலும் பாடுவதிலும் வல்ல நாவலர்கள், அரசர்கள், ஞானம் அதிகமாகவுடையவர்கள் ஆகிய எல்லாரும் (தமக்குள் அவனிடமுள்ள பயத்தால் மகிடாசுரனைப் போற்ற, அந்தப் பாக்கியத்தை) அவனுக்குச் செய்யவிடாமல் உன்னிடம் மீட்டுக் கொண்ட அரசாட்சித் தன்மையைப் பெற்றவர், உன்னைத் தவிர வேறு யார்? வணங்கப்பெறும் பணிவில்லாத தன்மையையுடைய, கொடிய தலை உன்பாதம் பெற்று அதனை உலகுக்கு (பணிவில்லாதவர் இவ்வாறு அழிவர் என எடுத்துக் காட்டுவதுபோல அமைவது) எடுத்துரைக்குமே யல்லாமல் இச்சாகசச் செயல் வேறு யாரால் இயலும்? எல்லாம் வல்லவளே! நீயே சொல்,

இவ்வரிய செயல் உன்னுலேதான் முடியும். அதுபோல் என்னையும் ஆட்கொள்வாய் என்பது குறிப்பு.

மீட்டவர் என்பது 3ஆம் அடியில் எதுகைக்காக மீற்றவர் என்று அமைந்தது போலும்.

பாரிற் றருவென மாந்தரைப் பாடிப் பயனின்றியே
தாரித்த லின்றி நின்பா லடைக்கலஞ் சார்ந்தனுல்
ஏரிப் புனலன்ன பொன்னே யருட்புய லேயமிழ்த
வாரித் தடமணித் தீவக் கடம்ப வனவல்லியே. 226

ஏரியிலுள்ள அளவிட முடியாதபடி தேங்கி நிற்கும் நீர்போல் விளங்கும் செந்நிற மமைந்த பொன்போன்ற நிறத்தாளே! அருளாகிய மேகம் போன்றவளே! அமுதக் கடலிடையே பரந்து விளங்கும் மணித்தீவின் நடுவேயமைந்த கடம்பவனத்தில் விளங் கும் வல்லியே! உலகில் கேட்டார் கேட்டபடி தருவதில் வல்ல கற்பக மரம் போன்ற குணமுடைய மனிதரைப்பாடி எப்பயனையும் பெருமல் துன்பம் தாங்க முடியாமல் உன்னிடமே யடைக்கலமாக வந்து விட்டேன்; என்னைக்காக்க.

தரு–கற்பக மரம்; தேவ உலகில் விளங்கும் ஐவகை மரங்களுள் ஒன்று. கேட்டார் கேட்டபடி அளிக்க வல்லது.

ஏரிப்புனல் - மழை பெய்யும்போது ஆற்றிலிருந்தும் நாலாபக்கங் களிலிருந்தும் மண்ணேடு வரும்நீர் பெரும்பாலும் செம்மண் நிறத் தோடு கலந்து வரும். அது சூரிய ஒளிபடும்போது பொன் போன்று அழகிய பளபளப்புடன் காட்சி நல்கும். இந்த இயற்கைக் காட்சியைக் காணக்கண் ஆயிரம் வேண்டும். அந்த நிலையையே இங்குக் குறிப்பிடுகிருர்.

பொன் - பொற்கொல்லர் நெருப்பில் காய்ச்சி அடிக்க அடிக்க, பளபளப்பு மிகுந்து காட்சி யளிக்கும். அதனுடன் மெருகும் கொடுக்க மேலும்மேலும் ஒளிரும். அதனுல் அம்பிகை பொன் எனப்பட்டாள். சுவர்ணும்பிகை என்றும் அம்பாளுக்கு ஒரு பெயர்

**நீர் நிறம் மாறல்**

"செம்புலப் பெயல் நீர் போல" (குறுந்தொகை. 40)
நிலத்தியல் பானீர்திரிந் தற்றுகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு (குறள். 152)

அருட்புயல் - அன்பின் முதிர்ச்சி அருள். புயல் - மேகம். அம்பிகை கருமேகம் போன்ற நிறத்தினள். மேகம் பிறர் உதவியை எதிர்பாராமலே மழை பெய்து உயிர்களுக்கு உதவும் இன்னுர் இனியார் எனப்பாராதும் உதவும். அதுபோல் இறைவியும்

தன்னைப் போற்றுகின்றவர், தூற்றுகின்றவர் எனப்பாராமல் உதவு வாள் என்பது குறிப்பும் நயமும். அன்பு முதிர்ச்சியே 'அருள் என்பதை அன்பும் ஈன் குழவி' (757) என்றார் வள்ளுவர். அமிழ்த வாரி-பாற்கடல். எழுவகைக் கடல்களுள் ஒன்று. திருமால் என்பர் ஆன்றோர். கருணை வழியும் கடவுள் திருமால். அதனால் இவ்வாறு கொண்டனர் போலும்.

மணித்வீபம் - பிரும்மாண்டங்களுக்கு வெளியே உள்ளது ஸுதாசமுத்திரம் என்ற அமிருதக் கடல். அதன் நீர் பிரும்மாண் டங்கள் அனைத்திற்கும் ஜீவ சக்தி பரப்பும் அமிர்தமாகும். அதன் நடுவே உள்ள தீவு ரத்தினத்துவீபம் - மணித்துவீபம் என்ற பெயருடையது. (லலிதா ஸகஸ்ரநாமம்).

புத்தியிலேன் விழலுக் கிறைப்பே
னின்றன் பொன்னடிசேர்
புத்தியிலேன் என்னினுஞ் சரணசார்ந்
தனன்பார்த் தருளெண்
சித்திதரு மமிழ்தக் கடலின்
மணித்தீ வகத்தின்
மத்தியில் வில்வ வனஞ்சார்
கடம்ப வன வல்லியே 227

எட்டு வகையான சித்திகளையும் அருளும் அமுதமான கடலின் நடுவேயுள்ள மணித்திவீபத்தின் நடுவில் எப்போதும் கொலு வீற்றிருக்கும் தாயான நீ, வில்வவனம் என்ற தலத்தைச் சார்ந்த கடம்பவனத்தில் எழுந்தருளிய வல்லிக்கொடி போல்வாளே! உன்னைப் பற்றிய அறிவிலாத நான் விழலுக்கு இறைப்பேன் பயனின்றிய செயல்களைச் செய்வேன். உனது பொன் போன்ற அழகான பாதங்களை அடைய வேண்டும் என்ற பக்தியில்லாத வனுவேன், என்றாலும் உன் பாதத்தையே நம்பி அடைந்தேன். கடைக்கண் பார்த்தருள்க. உனதருளால் என்னைக் காக்க.

''சுத்தப் பாமரராய் விழற்கிறைத்துப் பட்டனரால்'' (பிரபோத சந். 13. 14.) விழலுக்கிறைத்தல் - ''விழலுக்கிறைத்து விடலாமோ'' (திருப்புகழ் 30). பொன்னடி - பொன் - அழகு. பொன் போன்ற அடி என 'உவமத் தொகை யாகவும் கொள்ள அமையும். அமிழ்தக் கடலின் - அமுதம், கடல் என்றது உருவகம். கடல் நடுவே இருப்பது தீவு. என்பதுணர 'கடலின் மணித் தீவகத்தின் மத்தியில்'' என்றார். எண்சித்தி - எட்டு வகை சித்திகள்—அணிமா மகிமா கிரிமா லகிமா ப்ராப்தி ப்ராகாம்யம் ஈசத்துவம்? சித்தி தருகின்ற வல்லி''—அபிராமி அந்தாதி.

வலக்கண் திருவிடக் கண்வாணி
நெற்றியில் வாய்த் தொளிரும்
புலக்கண் அறிவு மகளென
நூல்கள் புகல்வது கேட்டு
அலக்கண் விலக்குநின் றாளடைந்தே
னருளன் பர்கள்ள மும்
மலக்கண் ணடையுறு (ங்) கண்டீர்
கடம்ப வன வல்லியே. 228

அடியவர்கள் மும்மலமாகிய இடம் அகன்று அடையும்படி அருள்வாய். கடம்பமலையில் எழுந்தருளிய வல்லிக் கொடி போல் வாளே! வலது கண் இலக்குமி, இடது கண் சரசுவதி. நெற்றியில் பொருந்தி ஒளிவிடும் அறிவாகிய மகள் என நூல்கள் கூறுவன கேட்டுத் துன்பத்தை விலக்குவாய் என்று உன் பாதம் பற்றினேன். கண்டீர்.

அடையிறுங்கண்டீர் – அடியார்களுடைய மும்மலங்களை போக்குபவன் என்பதை உணர்வீர். அலக்கண் - துன்பம். திரு - இலக்குமி. வாணி - சரசுவதி. நெற்றியில் வாய்த்தொளிரும் அறிவு மகள், ஞானம். மும்மலம் – ஆணவ மலம், கன்ம மலம், மாயா மலம் என்பன. ஆணவம் - அநாதியானது, ஒன்றானது, செம்பிற்றேன்றும் களிம்பு போன்றது. புருஷனின் ஞானத்தை மறைக்கும் அநேக சக்தி வடிவானது. பொருள் வடிவானது. ஆன்மாவின் உடம்புகள் தோன்றக் காரணமானது. சர்வஞ்ஞசக்தி யிலிருந்து கிஞ்சித்வத்திற் செலுத்துவது. அணு எனும் பெயர் தருவதாகும்.

மோகம், மதம், ராகம், விஷாதம், தாபம், சோஷம், வைசித்ரியம், என்ற செயல்களைச் செய்யும்.

ருக் பசுத்வம் அஞ்ஞானம் ஆவ்ருதி மூலம் ம்ருத்யு. மூர்சை அஞ்சனம் நீவாரம் அவித்தை பாபம் க்ஷயம் ம்ருத்யு, க்லானி என்பன இதன் வேறு பெயர்கள்.

கன்மமலம் – இது சத்தியமாகிய ஆன்ம ஞானமும், அஸத்திய மாகிய மாயா காரியமும் கூடினவிடத்தில் உண்டானது. ஆதலால் புண்ணிய பாப வடிவினது. பிரளய காலத்தில் ஸம்ஸ்கார அவஸ்தையாய், மாயையிலேயிருந்து படைப்புக் காலத்தில் ஆன்மாக்களுக்குத் தனு புவன போக கரணாதிகளை யுண்டாக்கு வதற்குக் காரணமானது. புண்ணிய பாவங்களுக்குக் காரண மானது. நல்வினை தீவினை செய்யும்போது கூடவே இருப்பது. அநாதியே மும்மலங்களுள் ஒன்றானது. மனம் வாக்கு காய வியாபாரமாகிய காரிய கர்மத்திற்கு மூல (அடிப்படை) காரண மானது. காரண மலம் எனப்படுவது—செய்த கன்மம் நசிக்க தான் நசிக்காதிருப்பது. சூட்சுமித்திருப்பது. அதிர்ட்டம் எனப்

படுவது. அசுத்தமாயா போகங்களாகிய ஆதிஆத்மிகம். ஆதி பௌதிகம் ஆதிதைவிகம் எனும் தாபத்ரய காரணமானது. வெள்ளமோடும் நதியாய் வருவது. இது சஞ்சிதம் பிராரப்தம் ஆகாமியம் அதிசூட்சுமம் சூட்சுமம் தூலம் எனப் பல திறப்படும்.

மாயாமலம் - தமம் மாயை மோகம் அவித்தை சுநிர்தம் என ஐந்து. ஜீவ சைதன்யத்தை மறைக்கையால் தமம்; உலக வடிவான அந்நிதர தோற்றத்திற்குக் காரணமாதலால், மாயை; விபரீத ஞானமுண்டாக்குதலால் மோகம்; உணர்வை அழிக்கை யால் அவித்தை ; தத்ரூபத்திற்கு அந்நியமாதலால் அநிர்தம் என்பன அவை. இது ஒருவகை.

நித்தியமாய், ஒன்ருய், அனைத்துக்கும் காரணமாய், சடமாய் எவ்விடத்துங் காரியங் காணப்படுதலால் வியாபகமாய், ஆன்மாக் களுக்கு மாயேயமான தனுவாதிகளை யுண்டாக்குவதாய் நிற்பது. இது சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதி மாயை யென மூவகை. இவற்றில் சுத்தமாயை மல கன்மங்களோடு கலவாமல் சுத்த காரிய உலகிற்கு முதற் காரணமாயிருப்பது. அசுத்தமாயை சுத்த மாயையின்கீழ் அடங்கி மல கன்மங்களோடு கலந்து சுத்தாசுத்த காரிய பிரபஞ்சத்திற்கு முதற் காரணமாயிருப்பது. பிரக்ருதிமாயை - அசுத்த மாயையின் தூல பரிணமமாய் அசுத்த காரியப் பிரபஞ்சத் திற்கு முதற் காரணமாயிருப்பது. இவை முறையே விந்து மோகினி மான் எனப் பெயர் பெறும். (சித்தாந்தப்) இப்படி ஒரு வகை.

இது நித்தியமாய், ஆன்மாக்கள் செய்த கன்மத்துக் கீடாகப் பிரக்ருதியில் தோன்றிய பொருள்களைப் புசிக்கும்படி இச்சையைப் பண்ணியிருக்கவும், தோன்ருததாய் ஒன்ருய், அனைத்துக்குங் காரணமாய், சடமாய், வியாபகமாய் உலகிற்கு வித்தாய் உள்ளது. இது சுத்தம் சுத்தாசுத்தம் அசுத்தம் என 3 வகை.

சுத்தம் பிரேர காண்டம் எனவும், சுத்தா சுத்தம் போக காண்டம் எனவும், அசுத்தம் போக்ய காண்டம் எனவும் படும். இம்மாயையின் கார்யம், பாஹ்யம் ஆப்யந்தரம் என இரு வகை. பாஹ்யம் - படைப்புக் காலத்தில் கலாதி தத்துவங்களிலிருக்கும் புவனுதி. வடிவமாக வெளியில் பிரசரித்திருப்பது. ஆப்யந்தரம் - சங்காரகாலத்தில் மாயா கர்ப்பத்தில் சூட்சும வடிவாயடங்கியது. அடங்குதலால் மா என்றும், சிருஷ்டியில் வ்யத்தி வடிவாய் வெளிப் படலால் யா என்றும் கூறுவர். ஆதலால் மாயை எனப்பட்டது.

விந்தாட விக்கன்றி நின்பாத தாமரை மெல்மலரென்
சிந்தாட விக்கியையா துகொலோசெக மீன்றவன்னே
செந்தாட விசண்ப காடவி கற்ப தருவடவி
வந்தா ரடவி பலசூழ் கடம்ப வனவல்லியே. 229

உலகைத் தோற்றுவித்த தாயே! சந்தாடவி, சண்பகாடவி! கற்பகாடவிகள் என்ற பலவும் சூழும் கடம்பவனத்தில் விளங்கும் கடம்பவனவல்லியே! விந்தமாகிய மலையிடத்தேயுள்ள காட்டுக் கன்றி நின் பாத தாமரையாகிய மென்மையமைந்த மலர், என் சிந்தையாகிய (எண்ணமாகிய) காட்டுக்குப் பொருந்தாதோ? பொருந்தும்படி யருள்க.

பாததாமரை, சிந்தைகாடு என்பன - உருவகங்கள். பாட பேதம் :- (மெல்மலரென்) என்பதில் மேவுறலென் என்பதும் பாடம் (ஐயரவர்கள்). கொல் ஓ என்பவற்றுள் கொல் வியப்பிடைச் சொல். ஓ - வினாப் பொருளது. சிந்தை + அடவி — சிந்தாடவி. செகமீன்ற அன்னே! விளி. அன்னை என்பது அன்னே என்று கியது. தாமரை மென்மலர் – இருபெயரொட்டு.

தேவியின் பெயர் — விந்தியவாசினி. விந்தம் - விந்திய மலையில் இருத்தலால் துர்க்கைக்கு விந்தாஸனி என்று பெயர் உண்டு. (மணி. 20-116-117) குல மலைகள் எட்டனுள் ஒன்று. இந்தியாவின் நடுவே யிருப்பது. மேருவின் பெருமையை நாரதர் கூறக் கேட்டதும் விந்தம் வளர்ந்து சூரியன் போக்கைத் தடுக்க, அகத்தியர் விந்தத்தை அழுத்தித் தடுத்தனர். தண்டக வனத் தின் வடக்கேயுள்ளது. விந்தியம் விந்தை எனவும் வழங்கும்– இதிலுள்ள காடு மிகப் புகழ் பெற்றது. இங்குள்ள யானைகள் மிக்க வீரம் அமைந்தவை எனப் பெருங்கதை கூறும். கற்பதரு பாற்கடலிலிருந்து தோன்றியது. தேவவுலகிலுள்ள ஐந்து மரங் களுள் ஒன்று. மர வடிவினது. எட்டுக் கிளைகளையுடையது. இதில் படருவது காமவல்லி என்ற கொடி. இதற்கும் விரும்பினதைத் தரவல்ல ஆற்றல் உண்டு.

திருவளர் நின்மலர்ச் சேவடி
 போற்றுந் திறமதில்லாக்
கருவள ரென்மன முந்நாவு
 மேவிக் கதித்துறைவாய
குருவள ரென்கண ணுவிலெஞ்
 ஞான்றுங் குடியிருக்கு
மருவளர் பூங்கொடி யேகம
 லாசன மாமணியே. 230

தாமரையை இருப்பிடமாய்க் கொண்ட சிறந்த மாணிக்கமே! திருவளர்கின்ற உன்பாதம் போற்றுகின்ற திறமை யில்லாத (கரு) எண்ணங்கள் வளர மனத்தில் பொருந்தித் தங்கி யிருப்பாய். நிறம் வளர்கின்ற என் நா[illegible] எப்போதும் குடியிருக்கும்

மணம் வளர்கின்ற பூங்கொடிபோல் இடையையுடையாளே எப்போதும் தொண்டு செய அருள்க.

வெண்பா

வெண்டா மரைமிசையின் மேவு மடவனமே
கண்டார் மொழிக்குயிலே கற்பகமே — ஒன்பான்
நலமென் றுரைப்பப்பா நான்சொல் வதற்கும்
பலமென் றுரைப்பவருள் பண். 231

வெண்டாமரைமேல் பொருந்திய இளைய அன்னம்போல்வாளே! (கழுத்திலிருந்து) வெளிவரும் சொற்களுடைய குயில்போல் வாளே!! கற்பகம்போல் விரும்புவோர்க்குக் கல்விச் செல்வமளிப்பவளே! ஒன்பதுவகைச் சுவை பொருந்தப் பாடல்களை நான் பாடுவதற்கு அருள்புரிக. பலம் - வலிமை, பயன் - இரு பொருள் கொள்க.

(குடந்தைச்சிவபெருமான்மீது ஐயரவர்கள் பாடியன)

திருச்சிற்றம்பலம்

விருத்தம்

நீலமா முகினேர் நெடியவன் பிரம
னிரையிதழ்க் கற்பக மலர்த்தார்க்
கோலமார் பினன்விண் ணவரொடு முனிவர்
குழுவெலாஞ் சொல்லலாற் றுது
மாலவோங் கியநின் புகழினைக் கல்லா
மடமையே னெங்ஙனம் வகுக்கேன்
சாலவோங் கெழின்மாளிகைத் திருக்குடந்தைச்
சம்புவே யெம்பெரு மானே. 232

நீலநிற மேகம் போன்ற நெடிது வளர்ந்த திரிவிக்கிரமனான திருமால், பிரமன், வரிசையாய்ப்பல இதழ்களுடைய கற்பக மலர் மாலை சூடிய அழகிய மார்புடைய இந்திரன், ஆகாயத்தே விளங்கும் தேவலோகம் வாழ்தேவர்களுடனும், முனிவர் கூட்டங் களும் புகழ முடியாத பெருமையுடைய உன் புகழை, நூல்களைக் கல்லாத யான் எவ்வாறு எடுத்துச் சொல்வேன்? (என்னால் கூறி முடியாது என்பது குறிப்பு.) மிகவும் ஓங்கிய அழகான மாளிகை போன்ற கோயிலில் எழுந்தருளிய கும்பகோணத்தில் விளங்கும் கும்பேசனே! எனக்கு அருள்க.

நாளிணை மதியி னகுமுகத் தநங்க
ஞரியிற் குழுவிற்கீழ் நண்ணி
வாளிணை யென்ன மயங்குபு மானின்
மருட்சியுற் றிடுநய னத்தாற்
றோளிணைக் கழையார் மனமயக் குறுத்தத்
தொலைத்தன னறிவெலானுந்
தாளிணை யடைந்தேன் புரந்தருள் குடந்தைச்
சம்புவே யெம்பெரு மானே. 233

அமாவசைக்குப் பின் இரு நாட்களாகித் துவிதியையில் தோன்றும் பிறை போல் சிரித்த முகமுடைய பெண்களுள் சிறந்த வீட்டிலேயே குடியாயிருந்து வந்து வாள் இணைந் தனபோல் உள்ளன என மயங்க, மானின் மருண்ட தன்மை பொருந்திய கண்கள் என மயங்கி, தோள்கள் இணைந்த மூங்கில் போன்ற தன்மையுடையார் மனத்தை மயங்கும்படிச் செய்ய, அறிவெலாம் அழிந்து போனேன். உன் இணை பாதங் களையே நம்பி வந்தேன்). கும்பகோணத்தில் விளங்கும் பெருமானே ! காக்க.

............பாதமலர் ·· .... யேன்
எண்ணமார் தரநின் றிருவுரு வறியேன்
எண்ணியு முய்வனோ தமியேன்
கண்ணனுன் முகன்நின் றேடியுங் காணுக்
கருத்தனே வருத்தமா மதியாய்
தண்ணமார் கரத்துச் சங்கரா குடந்தைச்
சம்புவே யெம்பெரு மானே. 234

முதல் வரியில் சில சீர்கள் இல்லை.

எண்ணம் நிறைந்துவர, உன் அழகிய வடிவை அறிந்திலேன் தனித்தயான் எண்ணிப்பார்க்கவும் முயற்சி செய்வேனோ ? கண்ணனுக அவதரித்த திருமால் பிரமன் இருவரும் தேடியும் காண முடியாதவனே! தட்சனுல் சாபம்பெற்று வருந்தி "நீயே சரண்" என உன்னை வந்தடைந்த சந்திரனை முடியில் கொண்டோய் ! குளிர்ந்த கையினையுடைய சங்கரன் எனும் பெயரனே! கும்பகோணத்தில் விளங்கும் சம்புவே ! எனக்கு அருள்.

பாசரோகாதி வருத்திட நொந்து
பதைபதைத் தறனெறி மருவா
சரோடிணங்கிச் சாலவு மிழிந்த
நீசனே னாயினு மடியேன்
மாசரோ ருகமார் வாவிசூழ் கூடன்
மாட்டருள் பாதக னல்லேன்
தாசரோ டிருக்க வருள்புரி குடந்தைச்
சம்புவே யெம்பெரு மானே. 235

உயிரிடம் இயல்பாகவே அமைந்து காணும் பாசம், நோய் முதலியன வருத்த வருந்தித் துடித்துத் தரும வழியே பொருந்தி, தாழ்ந்த குணமுடையாருடன் சேர்ந்து மிகவும் தாழ்வான கடையன் ஆயினும் அடியவனாகிய நான், சிறந்த தாமரை நிரம்பிய குளத்தால் சூழப்பட்ட மதுரையில் புலவர்களுடன் சேர அருள். கொடியவனல்லேன். கும்பகோணத்தில் விளங்கும் சம்புவே. எம் பெருமானே ! அடியாருடன் இருக்க அருள்.

மரணமோர் சிறிதுமில்லையென நினைக்கு
மடமையோர் தம்மையே யிணங்கி
யரணமா மிவர்தா நமக்கென வென்று
மறிவிலி யாயினு மடியேன்
...... ...........மதிநேர்.................
சரணமா மலரைச் சார்ந்தனன் குடந்தைச்
சம்புவே யெம்பெரு மானே. 236

மரணம் ஒரு சிறிதும் நமக்கு இல்லையென எண்ணும் அறிவற்றோர்களை நெருங்கி, இவரே நமக்குப் பாதுகாவலர் ஆவார்' என்று அறிவற்றேன் ஆயினும் சந்திரன்போல் ... நின் பாதமாகிய சிறந்த மலரை அடைந்தேன். கும்பகோணத்தில் விளங்கும் ஆதி கும்பேசுவரனே! எம தலைவ !

இப்பாவிலும் 3ஆம் அடியில் சீர்கள் சில இல்லை.

கனைகுர லெருமைப் பகட்டினை யூர்ந்து
கடுஞ்சமன் வருத்திடு முன்னம்
எனையருள் கருணை யீசனே யுமைவா
ழிடத்தனே மாசிலா மணியே
மனையென் அன்பர் மனங்கொளும் பெருமை
வள்ளலே வழுத்துவோர்க் கெளியாய்
தனைநிகர் வளமார் தருதிருக் குடந்தைச்
சம்புவே யெம்பெரு மானே. 237

கும்பகோணத்தில் விளங்கும் சம்புவே! எல்லாம் வல்லோய். உமை வாழும் இடப்பாகமுடையாய்! குற்றமற்ற மாணிக்கமே! அடியார் மனமே வீடு என்று கருதும் பெருமைமிக்க வள்ளால்! புகழ்ந்து போற்றுபவர்களுக்கு எளியோய்! தனக்குத் தானே ஒப்பான வளம் மிகுந்த குடமுக்கீச்சரம் என்ற திருத்தலத்தே விளங்கும் ஆதிகும்பேசுவரப் பெருமானே! கத்தும் குரலுடைய எருமைக்கடா ஊர்ந்து வந்து கொடிய எமன் வருத்தும் முன்பே எனக்குக் கருணை காட்டி அருள்.

பகடு + இனம் - பகட்டினம்.

துங்கரா மன்பர் குழுமற வாது
சுழலுறு மனதினேன் றனையும்
பங்கரானவர் தங்குழுமற வாமற்
பாலனம் பண்ணுவை கொல்லோ
சங்கரா கயிலைத் தாணுவே யிடபத்
தனிக்கொடி யாய்புவிக் கீழே
தங்கரா வணிந்த வமலனே குடந்தைச்
சம்புவே யெம்பெரு மானே. 238

தூய அடியார் கூட்டம் மறவாமல் பின்பற்றும் மனமுடையேனையும், பார்வதியை இடப்பாகத்தேயுடையவரின் அடியார் கூட்டம் மறவாமல் காத்து அருள்வாய் அல்லவா? சங்கரனே! கயிலாய மலையை யிருப்பிடமாகவுடைய தாணுவே! இடபக் கொடியோய்! பூமியைத் தாங்கும் ஆதிசேடனை பாம்பை அணிந்தோய்! குற்றமற்றோய்! கும்பகோணத்தில் விளங்கும் ஆதிகும்பேசுவரப் பெருமானே! எப்போதும் அருள்.

### புத்தக யாத்திரைக்குப் போவதற்காக ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகருக்கு டாக்டர் உ. வே. சாமிநாதையர் எழுதிய பாடல்கள்

அறுசீர் விருத்தம்

அனமளிக்குந் துறைசையிற் சுப்பிரமணிய
குருமணிபோ லடைந்தோர்க் கெல்லாம்
இனமளிக்குங் கனமளித்துந் தனமளித்து
மிசையளித்து மின்ப மேவு
மனமளிக்குங் கலையளித்து மருவலர்க்கு
வனமளித்தும் மகிழ்ந்தே யெம்மைத்
தினமளிக்கும் பெரும்புகழம்பல வாணதேவ
வொன்று செப்பக் கேண்மோ! 239

தினமும் உணவிடும் திருவாவடுதுறையிலுள்ள சுப்பிரமணிய தேசிக ! குருமார்களுள் மணிபோல்வோய், ( தம்மை ) வந்து அண்டினவர்களுக்கு எல்லாம் வேண்டிய செல்வந் தந்தும், புகழ்ந்தும், இன்பம் பொருந்திய ஆடை தந்தும் அல்லது கல்வி கற்பித்தும், தன்னை வந்து பொருந்தாத வரைப் பதுங்கி வாழும்படி செய்தும் மகிழ்ந்து என்னைத் தினமும் காக்கும் மிக்க புகழுடைய அம்பலவாண தேசிக தேவனே! ஒன்று கூறுவேன் கேட்பீராக.

அனம் – அன்னம் என்பதன் இடைக்குறை. துறைசை – திருவாவடுதுறை. குருமணி – குருவாகிய மணி அல்லது நிற மமைந்த மாணிக்கம். கனம் – கௌரவம். மிசை – இடம். கலை – நூல்கள். ஆடை, மருவலர் – மனக் கருத்தால் ஒன்றுபடாத கருத்து வேறுபாடு உடைய பகைவர். வனம் – காடு. அளிக்கும் – பாது காக்கும். தேவ – விளி. கேண்ம் – மகரக்குறுக்கம்.

ஆனாலு நினையும்நின தருமைமடா
　　லயத்தினையு மாங்கு மேய
தேனாலு மொழியன்பர் தமையுமற
　　வேனென்னீ தெரிதி யன்றோ
வானாலு மமிழ்தனைய தமிழ்வாணர்
　　சரிதமினி வரைதல் வேண்டி
யானாலுந் திசையுமுள வூர்களுக்கும்
　　போய்வருதற் கெண்ணி னேனால் 240

நினைக்கும் தங்களுடைய அருமையான மடாலயத்தினையும் அங்குப் பொருந்திய தேன்போலும் மொழிகளைப் பேசும் அன்பரையும் மறக்க மாட்டேன் என்று இதனைத் தெரிந்து கொள்வீர் களல்லவா? ஆனாலும் அமுதம் போன்ற தமிழறிஞர்களின் சரிதங் களை இனிமேல் எழுத வேண்டுமாதலால் பல பக்கங்களிலுமுள்ள ஊர்களுக்கும் சென்று வர நினைக்கின்றேன்.

மேய – மேவிய என்பதன் இடைக்குறை. என் நீ தெரிதி – என்னை நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள். அமிழ்து அனைய தமிழ் —அமுது போலும் தமிழ். வேண்டி யான் நாலுந் திசையும் – எல்லாப்பக்கங்களுக்கும் என்க. போய்வருதற்கு - போகவும் வரவும். பெரியோர் ஒரு இடத்திற்குப் புறப்படும்போது போய் வருகிறேன் என்றேதான் சொல்வார்கள். இது பழங்கால வழக்கம்.

நின்பால்வந் தடிக்கடியுண் மகிழ்வடைந்து
வரமிகுத்த நேயர் பூண்டும்
என்பால் வந்துறும்வேலை நிகர்வேலை
மென்மேலு மிடைவி டாமல்
வன்பால்வந் துடன்மெலிய மனமெலியத்
தடுத்தென்னை வருத்தா நிற்கும்
அன்பாலொப் பரும்புகழும் பலவாண
தேசிக! மெய்யறிஞ ரேறே! 241

அன்பினால் ஒப்புமை கூற முடியாத புகழ் மிகுந்த உன்னிடம் அடிக்கடி வந்து மனமகிழ்ச்சி பெற்று வரும் பொருட்டு மிக்க அன்பு கொண்டுள்ள என்னிடம் வந்தடையும் பணிகள் கடலுக்கு அளவில்லாதபடி மேலும்மேலும் இடையறாது வலியவே வந்து குவிவன. உடம்புமெலிய மனமும் மெலிவுறத் தமிழ்ப்பணி என்னை வருத்தும்.

வேலைநிகர் வேலை - வேலா - அலை - (வடசொல்) அலைகளை யுடைய கடல்போன்ற வேலை (தமிழ்ப்பணி ) மேன்மேலும்-அடுக்கு. வருத்தாநிற்கும் - வருத்தும் என்பது பொருள் - செய்யா என்னும் வினையெச்சம். தேசிக-விளி. அறிஞர் ஏறு-விளி. உவமையாகு பெயராக நின்றது.

பல்லாரு மிஃதினிமே லியற்றுமென
வற்புறுத்திப் பகர்கின் றாரால்
வல்லாரா கியதமிழ்நா வலர்சரிதந்
தொகுததன் மிகவருத்த மேனும்
நல்லாய் நின்னுதவி சிறிதிருப்பி
னிக்கவலை யின்றிநடக்கு மன்றே
எல்லாவற் றையுங்குரு வாரத்திடை
வந்துன்றிரு முன் இயம்பு வேனால். 242

பலரும், "இனிமேலாவது இதனை எழுதுங்கள்" என்று வற்புறுத்திக் கூறுகின்றார்கள். வல்லவர்களான தமிழ் நாவலர் சரிதங் களை ஒன்றுதிரட்டி எழுதுவது மிகவும் வருத்தமுடைய செயலானாலும் நல்லவரே! உமது உதவி கொஞ்சம் இருந்தால் கவலையில்லாமல் காரியம் நடக்கும். எல்லாச் செய்திகளையும் வியாழக்கிழமை யன்று நேரில் வந்து கூறுகிறேன்.

குருவாரத்திடை - வியாழக்கிழமை என்பது ஒரு பொருள். குருவாகிய தங்களிடம் அன்புடன் நேரில் கூறுவேன் என்பது நயம். வாரம் - அன்பு, கிழமை.

## (திருவாவடுதுறை) சுப்பிரமணிய தேசிகருக்கு எழுதியது

மனம்வருந்த வுடன்மெலிய வம்முறையை
முறையினின்றும் வழுவா தியாய்ந்தியான்
தினம்வருந்திச் செயுந்தொழிலே மாற்றலரா
மாற்றலர்கள் செயலே யோர்ந்தென்
இனம்வருந்த யான்வருந்தா தொருவகையா
முடித்துமகிழ் வியம்ப வேந்தன்
தினம்வருந்துவோர் துயர்தீர்த்து வக்கும்
பெருவிறல்கொள் செங்கண் மாலே. 243

மனம் வருந்தவும், உடல் இளைக்கவும் அந்நிலையை முறை மாறாமல் கண்டறிந்து நான் மிகவும் கஷ்டப்பட்டுச் செய்யும் தொழிலான ஆராய்ச்சியாகிய அச்செயலை மாற்றுகின்ற பழி தூற்றல் ஆகிய பகைவர் செயலைத் தெரிந்து கொண்டேன். என்னு டனுள்ளார் துன்பமுற, யான் வருத்தப்படாமல் ஒருவாறு முடிவு செய்த மகிழ்ச்சியைத் தெரிவிக்க மன்னனே! தினமும் வருந்த அவர் களின் துயரம் அவர்களுக்கு அளித்துத் துன்பத்தைப் போக்கி வைக்கும், மிக்க சாமர்த்திய முடையவராவீர். தந்திரமுடைய சிவந்த கண்களையுடைய மகாவிஷ்ணுவே யாவீர்.

செங்கண்மால் - கமலக்கண்ணன். இப்பாடல் ஐயரவர் களுக்கும் வேறு யாருக்குமோ நேர்ந்த பகைமையை வளர விடாதபடி உதவியவரைப் புகழ்வதாக உள்ளது. வழுவா தியாய்ந்தியான் - மென்றொடர்க்குற்றியலுகரத்தின் வழியமைந்த குற்றியலிகரம். மாற்றலர் - பகைவர். இனம் - தமிழினம். வேந்தன் - மன்னர்மன்னன். துயர் தீர்த்துவக்கும் - "ஈத்துவக்கு மின்பமறியார் கொல், தாமுடைமை வைத்திழக்கும் வன்கணவர்" - [திருக்குறள் 228]. செங்கண்மால் - சிவந்த கண்பெற்ற திருமால் மால் - பெருமை; மயக்கம். தன்னை வழிபடுவார் தன்னையே வழிபட வேண்டும் என்ற பெரு விருப்பங் கொள்ளுமாறு அறிவைத் திருத்தி மயக்கியபடி, மயங்கியிருக்கும் உள்ள உணர்வு.

## [அனந்தகிருஷ்ணரைப் பாடியது]

மாமேவு மணிமகுட வரசர்பிரான்
ஜார்ஜெனும்பேர் வள்ளலுக்குக்
கோமேவு டெல்லி நகரிடை நிகழ்ந்த
முடிசூட்டுக் கொண்டாட்டத்தைத்
தேமேவு முதற்பாவி னணிபெறச்
சொற்றனவன்யார் செப்புகென்னிற்
காமேவு வளமிகு தென்றிருப்
பேரையநந்த கிருஷ்ண கவிவல்லோனே. 244

சிறந்த கிரீடமணிந்த மன்னன் ஐந்தாம் ஜார்ஜ் என்ற வள்ளலுக்குத் தலைநகரான தில்லியில் நிகழ்ந்த முடிசூட்டு விழாவை, தேன் போன்ற இனிய முதற்பாவகையான வெண்பாவில் அழகாகக் கூறியது யாரெனக் கேட்டால், சோலைகளால் சூழப்பட்டு விளங்கும் தென்திருப்பேரை என்ற ஊரில் வதியும் அனந்த கிருஷ்ணன் என்ற பெயருடைய கவிஞன்.

மணிமகுடம் - மணிகள் பதிக்கப்பெற்ற கிரீடம். தேன் போன்ற இனிய பா - உவமை. கா - சோலை.

## ஐயரவர்கள் திருமந்திரத்திற்கு அளித்த சிறப்புப்பாயிரம்

நிலைமண்டில ஆசிரியப்பா

திருமலி கைலைச் சிலம்பதி னின்றும்
உருமலி பொதியி லுறுதர வழிக்கொளீஇச்
சென்னிநன் னாட்டிற் பொன்னியங் கரையிற்
பசுக்களைப் புரந்திடப் பசுபதி யருணினைஇத்
தென்னவ கோடி சித்த புரத்திடை
அநகன்வீற் றிருக்குஞ் சினகரக் குடபால்
விரசுறுந் தெய்வ வரசின் கீழிரீஇக்
கருமூல நீக்குந் திருமூல தேவர்
ஆண்டினுக் கோரியாப் பருளப் பெற்றே
பாதநான் கின்விரி மேதக வமைவுற்
றுகம சார மாகுபு பத்தாந்
திருமுறை யென்னத் திகழ்ந்தே யொன்பது
தந்திர முடைத்திரு மந்திர மாலையை
அறைபல விடஞ்செலீஇ முறைபல துருவி
எழுதுவோ ரானே ரிடர்தரும் பற்பல
பாடபே தந்தமை நீடுறத் தெரித்தே
உகவை யளிக்கு முகவையம் பதியிடை
மதிநிறை சேது பதிமர பதனில்
ஆதுலர்க் கெய்ப்பில்வைப் பாகத் தோன்றி
வண்மையி லுலகறி யொண்மையிற் கதித்த
வேற்கர முடையசீர்ப் பாற்கர வேந்தர்கோன்
சொற்ற வண்ணங் கற்றவர் பலரால்

விரிவுரை யியற்றுவித் தரியவிவ் வுரையைப்
பதிப்பிக்கு முன்னர்க் கதிப்புற விந்த
வாறுவெளிப் படுத்தல் பேறென நினைஇ
வரத்துயர் திரிசிர புரத்துத் தோன்றிய
பவாம்புதி யறமுயல் சிவானந்த சாகர
யோகியா தியர்முன் னுஞற்றிய குறிப்பொடும்
சாலநூ லாய்த்திறற் றகைரம ணையன்
ஆராய்ந் தியற்றி யளித்தநூன் முகத்தொடும்
சீகா ளத்தித் திருப்பணிக் குடும்பத்
தோன்ற லாகி யான்றபல் செயல்களைத்
தன்பாற் கொண்டே யன்பாற் றினந்தொறும்
பன்னிரு திருமுறை யுனனியே யோதுறும்
போதமா ரிராம நாதனுங் குரிசிலும்
அக்குடும் பத்துதித் தவனைப் போன்றே
நலநிறை யருணு சலமெனுந் தோன்றலும்
விரும்பிய வண்ண மிளிர்தர வெழுதா
வெழுத்திற் பதிப்பித் திப்பதிப் பதனைத்
தென்மது ரைப்பதி திகழ்தரத் தோன்றிய
தன்மதுரையெனுந் சற்குண மேரு
வேதியர் குலமணி விபுதர்சிந் தாமணி
நீதியர் சிகாமணி நிறைபொறை நிறைமணி
வடமொழி தென்மொழி வாணரா தியர்செந்
நாவிலும் பாவிலும் நடிக்கும் புகழ்மணி
ஆதுலர்க் கிருநிதி யறத்தின் வேலி
ஈசன் அடியே யிரும்பவப் புணையென
எண்ணியே யொழுகும் புண்ணிய னுலகிற்
கணியெனுஞ் சுப்பிர மணியமா வள்ளலுக்
குரிமை யாக்கின னுவன்யா ரென்னின்
தேவா ரம்பெறு சிவதல மிரண்டுநீஇ
வாட்டமி லீழ நாட்டினுக் கணியாய்
மாணமர் புகழ்யாழ்ப் பாணமென் றியம்பும்
பெருநக ரைச்சார் தருவட கோவைப்
பதியணு கியசபா பதிநா வலன்பால்
இருந்தே பலநா ளருந்தமிழ் பயின்றோன்
கானவமே வித்திகழ் மாவையம் பதியான்

உற்றபல் வளனுந் துற்றமல் லாகத்
துதித்தே யறிவிற் கதித்தே சங்கப்
பனுவலாய்ந் திடுதிறற் கனக சபைமுகின்
மருக ஞகி முருகனேர் விறல்சேர்
துங்கமார் வயித்திய லிங்கவே ளன்பன்
மேதா வியர்புகழ வேதாக மாந்த
சமரச நிலையின னமர்வுறு நைட்டிகப்
பிரம சரிய வரமுடை யொழுக்கினன்
கேதமில் விச்சுவ நாதநற் குணனே. 245

அனைத்துச் செல்வங்களு மமைந்தகயிலை மலையிலிருந்தும் அழகான பொதிய மலையில் பொருந்தி, அவ்வழியாய்க்கொண்டு சோழனது நல்ல நாட்டில் காவிரிக்கரையில் பசுக்களைக் காக்க இறைவன் கருணையையெண்ணி, கோடிசித்தபுரம் (திருவாவடுதுறை) என்ற ஊரில் குற்றமற்ற இறைவன் எழுந்தருளியிருக்கும் கோவிலின்மேற்கே தெய்வத் தன்மையுடைய அரசமரத்தின்கீழ், பிறவியின் வேரையே நீக்கவல்ல திருமூலதேவர் ஆண்டுதோறும் ஒரு பாடலைப்பாடியருள, (சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கு பாதங்களின் விரிகள் அமையவும்) ஆகமத்தின் சாரமான பகுதியைப் பத்தாவது திருமுறையென்று சொல்லுமாறு விளங்க ஒன்பது தந்திரங்களையுடைய திருமந்திரமாலை யென்ற நூலைப் பலவிடங்களிலும் சென்று நன்கு ஆராய்ந்து எழுதுபவர்களால் ஏற்பட்ட பலவகைப் பாட வேறுபாடுகளைக் கவனித்து மகிழ்ச்சி தருமாறு இராமநாதபுரத்தேயுள்ள சந்திர வம்சத்தில் சேதுபதி மரபில் (ஆதுலர்) வழிப்போக்கர்களுக்குப் பொக்கிஷமாகி, கொடுக்கும் இயல்பால் ஒளிவீசும் வேல் தாங்கியாளும் சிறந்த பாஸ்கர சேதுபதி சொன்னபடி கல்வியறிஞர் பலராலும் விரிவுரையெழுதச் செய்து, அருமை மிதம் இவ்வுரையை அச்சிடுவதன் முன், இப்படி வெளியிடுவதே சிறந்ததென்று எண்ணி, திருச்சிராப்பள்ளியில் தோன்றிய பிறவிக் கடலினின்று நீங்க முயலும் சிவானந்த (கடலான) யோகி முதலானோர் அரும்பாடுபட்டு எழுதி வைத்த சிறந்த குறிப்புக்களுடனும் நன்றாக நூல்களை ஆராய வல்ல, பெருமைமிகு ரமணையர் ஆராய்ந்து தந்த முகவுரையுடனும், திருக்காளத்தியில் கோயில் திருப்பணி செய்த வழியினராகிப் பல நற்செயல்களைத் தன்னிடமுடைய இறைவனிடம் செலுத்தும் அன்பினால் தினமும் பன்னிரு திருமுறைகளை ஓதும் ஞானமிகுந்த இராமநாதன் எனுந் தோன்றலும், அக்குடும்பத்தே தோன்றி அவரைப் போலவே நன்மைகளைச் செய்யும் அருணைசலம் எனுங் குரிசிலும் விரும்பியபடி விளங்க என்றும் நிலைத்து விளங்கும்படி அச்சிட்டு அதனைத் தென்மதுரையில் தருமதுரையான நற்குணக் குன்றன அந்தணர் மரபிலுதித்த நினைத்ததைத் தரவல்ல நீதி -

யின் சிகரம் போன்றும், மாணிக்கம் போன்றும் மிக்க பொறுமையிற் சிறந்த மணியான வடமொழி தென்மொழி இரண்டும் பயின்றவர்களு டைய நாவாலும் பாவாலும் புகழப்படும் புகழ் விளங்கும் மணியான வழிப்போக்கர்க்கு அளிக்கும் செல்வரான தருமத்தின் எல்லை வடிவான ஈசனின் பாதமே பெரிய பிறப்பின் தெப்பமென்று எண்ணி வாழும் புண்ணியம் மிக்கோன்.

உலகுக்கே ஆபரணம் போன்ற சுப்பிரமணியன் என்ற வள்ள லுக்கு உரிமை பெறும்படி செய்தான். அவ்வாறு செய்தவன் யார் என்றால், தேவாரம் பெற்ற சிவத்தலம் இரண்டும் கொண்ட குறை வற்ற ஈழ (இலங்கை) நாட்டிற்கு ஆபரணம் போல் மிகுபுகழ் அமைந்த யாழ்ப்பாணம் எனப்படும் பெருநகரில் வடகோவை என்ற ஊரினராகிய சபாபதி நாவலரிடத்தில் பலகாலம் இருந்து சிறந்த தமிழ் கற்றவன். சோலைமிக்க மாவை என்ற ஊரினன். பொருந்திய எல்லா வளங்களும் நெருங்க மல்லாகத்து உதித்து லிங்கவேள் என்ற அன்பன். மேதாவிகள் புகழும் வேத ஆகமங் களை யுணர்ந்த சமரச நிலையினையுடையவன். நைட்டிக பிரமசாரி என்ற மேலான ஒழுக்கத்தையுடையவன். குற்றமில்லாத விசுவ நாதன் என்ற நல்ல குணம் வாய்ந்தவன் ஆவான்.

## ஐயரவர்களைப் பாடியவை

### டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் மீது

### திரு. கி. வா. ஜ. பாடியது

அகத்தியனூர் பயந்தவிர்ந்த அருந்தமிழ்ந் நாள்மிகுந்த
சகத்தியலின் பயந்தவிர்ந்தே சாருமழ கியாவுமுறத்
தகத்தழங்கும் பலநூலும் சாமிநா தக்குரவன்
தொகத்தரையில் விளக்கானேல் தூத்தமிழின்
பெருமையெங்கே! 246

அகத்தியர் அருளிய தமிழ் இக்காலத்தில் அதிகமாக உலகின் பயத்தை விலக்கி, பொருந்திய அழகு எல்லாம் அமைய, உள்ளத்துப் பொருந்தும் பல நூல்களும் சாமிநாத ஆசான் (மேம்பட்டவன்) நிரம்ப எடுத்து விளக்காதிருந்தால் தூயதமிழின் பெருமை எங்கே நிலைத்திருக்கும்?

பயந்த அகத்தியர் அளித்த. அவிர்ந்த - விளங்குகின்ற. தூய் தமிழ் என்பது 'தூத்தமிழ்' என நின்றது.

அகத்தியர்-பொதிய மலையை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந் தவர். குடத்திலிருந்து தோன்றியவர். கும்ப முனி என்று பெயர் பெற்றவர் சிவபெருமானிடம் தமிழ் கற்றவர்.

தரை - தரா; வட சொல். குரவன் - ஆசான், குரவர் ஐவர்: இரு முது குரவர் - பெற்றோர். சாரு மழகியாவுமுற - குற்றியலிகரம். அழகு - உயிர்த்தொடர்க்குற்றியலுகரம்.

சாமிநாதையர் அரும்பாடுபட்டுத் தமிழ் நூல்களை அச்சிட்டு வெளிக்கொண்டு வந்து தமிழகத்துக்கு உதவியிரா விட்டால் தமிழின் நிலை எவ்வாறு இருந்திருக்கும் எனச் சிந்திக்க.

## சண்முகம் பிள்ளையவர்கள் பாடல்

விருத்தம்

அந்நாளிற் றிருத்தக்க தேவ னானன்
அருமறைதேர் நச்சினார்க் கினிய னானன்
இந்நாளிற் சாமிநா தையனானன்
இமையவர்சிந் தாமணியுந் தானே யானன்
பன்னாளு முயர்ந்திலங்கு புகழ னானன்
பரவுசிந்தா மணிசிந்தா மணியாச் செய்தான்
பொன்னாளு மார்பன் மருமகனே வன்னான் 247
புகன்மொழிகொள் குறுமுனியோ வறியே னம்மா!

அக்காலத்தே திருத்தக்க தேவராகவும், சிறந்த வேதம் வல்ல நச்சினார்க்கினியராகவும், இக்காலத்தே சாமிநாதையராகவும் தேவர் விரும்பும் சிந்தாமணியாகவும் தானேயாயினான். பல காலமும் உயர்ந்து விளங்கும் புகழுடையவனானன். பலருங் கொண்டாடு மாறு சிந்தாமணி என்ற நூலை, (மனத்துக்கினிய மணிபோல்) சீர்பெறச் செய்து அச்சிட்டான். இலக்குமீதரனை திருமாலின் மருமகனை சாமிநாதனே அவன்! பெரியோர் புகழ்ந்து கொண் டாடும் அகத்திய முனிவரின் மறு வடிவமோ? அறிய முடிய வில்லையே. இது என்ன வியப்பு!

## கி. வா ஜ. பாடல்

வெண்பா

அப்பனந் தாளுரிமை யாற்புலவர் போற்றுதலால்
செப்பமுறக் கண்மணியின் சேர்ப்பினால்-ஒப்பில்புகழ்ச்
சாமிநா தப்பேர்த் தவமுனியைச் செம்பதுமத்
தூமினா தற்குவமை சொல். 248

அந்த அப்பனின் (திருப்பனந்தாளிறைவன்) திருவடியைப் போற்றலால், செம்மையான கூரிய பார்வையையுடைமையால்,

ஈடற்ற புகழுடைய சாமிநாதன் என்ற பெயரோடு தமிழ்த் தொண்டு புரியும் அகத்தியமுனி போன்ற உன்னைச் செந்தாமரையில் விளங்கும் தூய பிரமனுக்கு ஒப்பாகக் கூறலாம்.

அப்பன் அம்தாள் என்று கொண்டு, தந்தையின் அழகான பாதம் எனவும், அப்பு அனம் தாள் என்று கொண்டு, நீரில் வாழும் அன்னம் போன்ற இலக்குமியின் தாள் எனவும் கொள்வது நயம். சிலேடையாகவும் அமையும்.

சாமிநாதன் என்ற பேருடைய உம்மைத் தாமரையிலுள்ள பிரமனுக்கும் ஒப்பிடலாம். ஏனெனில் நீ தமிழைப் படைத்தலால்.

தூமினுதற்கு - தூமின் ஆதற்கு எனக்கொண்டு, இலக்கு மிக்கும், தூமின்நாதன் எனக்கொண்டு, பிரமனுக்கும் ஒப்புமை காட்டப்பட்டது.

### கி. வா. ஜ. பாடல்

#### அறுசீர்க் கழிநெடிலாசிரியவிருத்தம்

அறிவினிற் சிறியே னென்னை
யவையினின் மேல தாக்கு
நிறையருள் கொண்ட வன்ப
நித்த நஞ்சாமி நாதா
நெறிமுறை வழாத வீரா
நின்னையென் கண்கள் காண்க
பொறையுறு நினது செய்கைப்
புகலவென் னுக்கொண் டேனே. ௪49

அறிவில் சிறியவனை என்னை, சபைநடுவே தலைவனாக அமையச் செய்த அன்ப! சாமிநாதப் பெரியாய்! ஒழுங்கு முறை தவறாதோய்! உன்னை என் கண்கள்ஒவ்வொரு நாளும் காண்க. பொறுமையுடைய உன் செயல் பற்றிக் கூறவே நான் நாவினை அடைந்தேன்.

### ஏ. எம். பெரியசாமி முத்தையா உடையார் பாடிய

#### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

திருமதி யன்றி வாரி
பொங்கிடா சிறந்த வேதம்
திருமதி குலத்திற் றேன்றுஞ்
சாமிநா தப்பேர் மேவும்

பெருமதிப் புலவ நின்னை
யன்றியென் மனத்து ளின்பம்
வருமதி கொண்ட நின்றாள்
மலரடி கருத்துற் றேனே. உ50

சந்திரன் முழுமை பெறுமல் கடல் பொங்கா. அதே போல் சிறந்த வேதங்கூறும் அறிவினையுடைய குலத்தில் தோன்றும் சாமிநாதன் என்ற பேர் பொருந்திய பேரறிவாள! உன்னைத் தவிர என் மனதில் இன்பம் பொங்கும்படி செய்பவர் யார் உளர்?

### மு. ரா. அருணாசலக் கவிராயர் [பாடிய]

### விருத்தம்

அன்றோர் பெரும்புலவன் பாத்தடை படல்போற்
தமிழ்ச்சங்கத் தறிஞர் தம்மால்
இன்றோர் தடையாத மின்றிக் கவிபுகன்று
பொற்கிழிபெற் றிடுஞ்சீர் பெற்ற
நன்றொருவா மகாமகோ பாத்தியாயச்
சாமி நாத வள்ளால்
ஒன்றொரு தவியினை யெற்குப் பழமை
பாராட்டி நீயுஞற்று வாயே. உ51

அன்று ஒரு பெரிய புலவரால் பாடல் தடைப்பட்டதுபோல் தமிழ்ச்சங்கத்து அறிஞரிடம் இன்று ஒரு தடையுமின்றிக் கவிபாடிக் கவிபாடி, பொற்கிழி பெறும் சிறப்புடைய நன்மை சேர்ந்த 'மகாமகோபாத்தியாய' என்ற பட்டமுடைய சாமிநாத வள்ளலே! ஒரே ஒரு உதவியைப் பழமை பாராட்டி நீர், எனக்குச் செய்வீராக.

### அறுசீர்க் கழி நெடிலாசிரிய விருத்தம்

உச்சிமேற் புலவர்கொளு நச்சினார்க்
கினியருரை யொருங்கு தேர்ந்து
வைச்சிராப் பகலாக வருமறிஞர்
தமக்கெடுத்து வருத்தம் பாரா
தச்சிலே பதித்தபடி யழகாகப்
புனைந்துரைக்கு மழகு நோக்கிக்
கச்சமாய்ப் புலனடக்கிக் காத்திருந்து
கேட்பர்கலை கற்றோர் தாமே. உ52

உச்சிமேற் புலவர்கள் கொள் நச்சினார்க்கினியர் உரையைச், சேர்ந்தாற் போல் ஆராய்ந்து இரவு பகலாக வருகின்ற அறிஞர் களுக்கு, எடுத்துத் தமது வருத்தத்தையும் கவனியாது அச்சிலே பதித்தபடி அழகாய் எடுத்து விளக்கிக் கூறும் அழகைக் கவனித்து, பலநூல்களைக் கற்றவர்கள் "பொருத்தமாக அறிவையும் புலன்களையும் அடக்கி எப்பொழுது என்ன நயமான பொருள் எப்படிக் கூறுவாரோ? அதனைப் பொறுமையாகக் கேட்டுக் கொள்ள வேண்டும்" என்று காத்திருந்து கேட்டுக் கொள்வார்கள்.

இராப் பகல் - உம்மைத்தொகை. முரண்தொடை. உச்சி மேற் புலவர் கொள் நச்சினார்க் கினியர், புலவர்கள் பலரும் தம் தலை மேல் வைத்துப் போற்றத் தக்க பெருமையுடைய புலவர் நச்சினார்க் கினியர். தொல்காப்பியம், பத்துப்பாட்டு, சீவகசிந்தாமணி முதலான நூல்களுக்கு உரையெழுதிய தலைசிறந்த புலவர்.

புலமை மிக்கவர் ஐயரிடம் வரும்போது தாம் தமிழுக்குச் செய்யும் தொண்டுகளைப் படித்துக் காட்டி அவர்களின் கருத்துக் களையும் கேட்டும் தமது கருத்துக்களையவர்களிடம் கூறியும் தெளி யச் செய்வார்கள். அதனாலேயே இவரது பெருமை ஓங்கி விளங்கியதோடு நீடித்து நிலைக்கவும் வழியாயிற்று.

அச்சிலே பதித்தபடி - 'அச்சு வேலையோ நச்சு வேலையோ' என்பார்கள். இது ஒரு கடினமான வேலை. பிழையின்றி எழுதித் தர வேண்டும், அவை அச் சேறியுள்ளதா எனவும், அச்சானபின் பிழையில்லாமல் அச்சாகியுள்ளனவா எனவும், குறித்துக் கொடுக்கும் பிழைகளை அச்சகத்தார் கவனத்துடன் மேற்கொண்டு திருத்து கிறார்களா எனவும், அப்படியும் பிழையேற்பட்டால் பிழைத் திருத்தம் கவனமாக எடுத்தெழுதித் தனியே அமைப்பதும் ஒரு கடினமான வேலை. முன்பு கவனமாகச் செய்யப்பட்ட வேலை இப்போது பல இடர்ப்பாடுகளுடன் நடைபெற்றுக் வரக் காணலாம்.

**டாக்டர் ஐயரவர்களுடைய ஆண்டு நிறைவு**
**விழாவில் சென்னை, கவர்ன்மெண்டு மகம்மதியர்**
**கலாசாலை மாணவர் அளித்த வாழ்த்துரை**

உலகமெலாந் தொழுதேத்தும் உயரியதீந்
தமிழணங்கின்
அலகில்பெருந் தவத்துதித்த அரும்பெறற்சிந்
தாமணியே
குலவுபழந் தமிழ்ப்பெருமை குவலயத்து நீடூழி நிலவ
முயல்தா ளாண்மை நிறைகுணசற் குருமணியே! 253

உலகோர் கொண்டாடும் உயர்ந்த இனிய தமிழ்த்தாயின் குற்றமற்ற சிறந்த தவத்தினாலுதித்த பெறுவதற்கரிய சிந்தாமணியே! விளங்கும் பழந்தமிழினது பெருமை உலகில் நெடுங்காலம் விளங்குமாறு முயற்சியை மேற்கொண்ட நிறைந்த குணமுடைய குருவாகிய மணியே!

தமிழணங்கு - உருவகம். சிந்தாமணி போன்று விளங்குவோய் என்றதும் உருவகம். சிந்தாமணி என்ற நூலை வெளியிட்டோய் என்பது நயம். குவலயம் - உலகு. சத்+குரு-சற்குரு. குருமணி என்றதும் உருவகம்.

வாழி தமிழன்னை வாழி தமிழ்க்கலைகள்
வாழி தமிழுலகம் வாழியரோ -- வாழி
நலவர் புகழ்ந்தேத்தும் நற்சாமி நாதத்
தலைவன் நீ டூழி தழைந்து. 254

தமிழ்த்தாய் வாழ்க. தமிழ்க் கலைகள் வாழ்க. தமிழகம் வாழ்க நல்லவர் புகழ்ந்து கொண்டாடும் சாமிநாதத் தலைவன் பல்லாண்டு வாழ்வாராக.

இப்பாடலில் வாழி என்ற சொல் பன்முறை அதே பொருளில் வந்ததால் சொற்பொருள் பின்வருநிலையணி.

உலகம் - இடவாகுபெயர். ஏத்தும் - துதிக்கும். குவலயம் - உலகம். வாழி - வியங்கோள் வினைமுற்று. அரோ - அசைகள்

**கோபனுப்பட்டி கலைமகள் கல்லூரித் திறப்பு விழாவில் அன்புக்காணிக்கை**

மாணாக்கிய கழகத்தார்

**1—6—1939**

ஊழ்வினைக்கு முதல்வனாகி ஓங்குமெய்ப் பொருளினை
உண்ணிநைந்துவாழ்த்தலாகும்உறுதிபூண்டுவாழ்பவன்
ஆழ்கருத்த மைந்தமுன்னே அருமைநூல்கள் அருளியே
அறிஞர்சூழ ஆருமின்ப வாழ்வைவேண்டும் அற்புதன்
வாழ்வதற்கு நல்லநல்ல வழிகள்சொல்லி அருள்பவன்
மன்னுகின்ற மஹாமஹோ பாத்தியாய வரகுணன்
ஏழிசைத் திறந்தெரிந்த எங்கள்சாமி நாதனே
என்றும்வாழ அருள்செய்வாணி என்றும்நாம்துதிப்பமே
255

முன்வினைக்கு அடிப்படை யுடையவனாய் ஓங்கி விளங்கும் உண்மைப்பொருளை மனதில் எண்ணி வாழ்த்தும் மனத்திடம்

பொருந்தி வாழ்பவன், ஆழமான கருத்துப் பொருந்திய சிறந்த நூல்களையெல்லாம் நன்கு அச்சடித்து உதவியவன், கல்வி மிக்க அறிஞர் கூட்டம் எப்போதும் சூழ யாவரும் இன்ப வாழ்வு வாழ வேண்டுமென்று கருதுபவன். நன்கு வாழ சிறந்த வழி கூறி வழி காட்டுவோன். சிறந்த "மகாமகோபாத்தியாய" என்ற பட்டம் பெற்ற மேம்பட்ட குணத்தான், தமிழுக்குரிய ஏழிசைகளின் வகைகளை நன்கு ஆராய்ந்து தெரிந்து கொண்ட எங்களுடைய சாமிநாதப் பெரியோய்! எப்போதும் சிறந்து வாழும்படி அருள் செய்க. வாக்குத் தெய்வமே என்று நாம் எப்போதும் போற்றிக் கொண்டாடுவோம்.

மெய்ப் பொருள் - தத்துவ ஸ்வரூபம், உள்+நினைந்து - உண்ணினைந்து. ஆழ்கருத்து - வினைத்தொகை. "முன்னை அருமை நூல்கள்" முன்னை — "முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே" (மாணிக்க வாசகர் திருவாசகம்).

ஆரு மின்ப வாழ்வை வேண்டுதல் — "எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்ப தல்லால் வேறு ஒன்றறியேன் பராபரமே" — (தாயுமானவர் பராபரக் கண்ணி). "ல்ல நல்ல வழிகள்" "ஆசறு நல்ல நல்ல, அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே" (தேவாரம், ஞான சம்பந்தர், கோளறு பதிகம்). இங்குச் சொல் லொப்புமை பற்றி வந்த உணர்க. நல்ல நல்ல - அடுக்கு, பெயரெச்சப் பொருளில் வந்தன. ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல என்பன அடுக்கு. பலவின் பால் வினை முற்றுப் பொருளன என்றறிக,

ஏழிசை—யாழ்+இசை - "ஏழிசைப் பயனாய்" (தேவாரம்). நாம் - எழுவாய்; துதிப்பம். அம் ஈற்று உளப் பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. வாணி - நாமகள் ஆரும் - யாரும் என்பதன் முதற்போலி.

## 1935 ஆம் ஆண்டு, சென்னைத் தமிழ் மாணவர்கள் பாடியன

திருவார் சோழ நாட்டினிலே சேருத் தமதானபபதியிற்
ஜெனித்தேசாமிநாதப்பேர்சிறக்கவிளங்கும் பெருமானே!
உருவா ரெண்பதாண்டு நிறைந்தோங்கும
நினைத் தரிசனம்செய்
துயர்நின் ஆசி பெறும்பொருட்டா உன்னி
இங்கே கூடிநின்றோம்
பெருவாரிதியே அனையதமிழ்ப் பிரசம்
எங்கட் கூட்டியென்றும்

பிறழாச் சிறப்பை அளித்தாய்நின் பெருமை
பேசுந் தரத்ததுவோ?
குருவார் நினதுபெருஞ் செயலால் கூறுந்
தமிழ்ச்செம் மொழிபெற்றுக்
குலவுஞ் செல்வந் தனக்கெல்லை குணிக்க
வல்லார் யாருளரோ? 256

அழகுடைய சோழ நாட்டுள் உத்தம தானபுரம் என்ற ஊரில் பிறந்து சாமிநாதன் என்ற பேர் சிறந்து விளங்கும் பெருமானே! எண்பதாண்டு நிறைந்துள்ள தங்களைக் கண்டு ஆசி பெறக் கருதி இங்குக் கூடியுள்ளோம். பெருங்கடல் போன்ற தமிழ்த்தேனை யெங்களுக்கூட்டி எப்போதும் இன்புறச் செய்தாய். உன் பெருமை பேசி முடியுமோ? ஆற்றல் நிரம்பிய உங்கள் பெருமை வாய்ந்த செயலால் புகழ வல்ல தமிழாகிய செம்மையான மொழி பெற்று விளங்கும் செல்வத்தை அளவிட்டுரைக்க வல்லார் எவருளர்? எவராலும் இயலாது.

செனித்தல் - பிறத்தல். பொருட்டா - பொருட்டாக - உன்னி, கருதி. வாரிதி - கடல். கடல் போன்ற தமிழ் - உவமை. தமிழ்ச் செம் மொழி - தமிழாகிய செம்மையான மொழி.

### எண்பதாமாண்டு நிறைவு விழாவில் அளித்த பாராட்டு

நின்ற னுருவந் தமிழுருவம்
நின்கை தமிழ்க்கு முடிசூட்டும்
நீள்கை நின்றன் திருப்பதங்கள்
நித்தம் தமிழ்க்கா நடந்தபதம்
ஒன்றும் நின்றன் திருவிழிகள்
ஒவ்வோ ரெழுத்தாய் ஆராய்ந்தே
ஒருசெந் தமிழ்த்தாய் திருக்கோலம்
ஒளிபெற் ஹொளிரக் கண்டவிழி
துன்றும் நின்நா தமிழ் அமுதச்
சுவையே ஊறி விளைசெந்நா
சொல்லும் நின்றன் ஊக்கமெலாம்
தூய தமிழின் ஆக்கமன்றோ?
மன்றுள் இறைவன் அருளால்
நீடுவண்ண மேனி நலஞ்சிறந்து
வாழ்க வாழ்க பல்லாண்டு
வாழ்க வாழ்க வாழியவே. 287

தங்கள் உருவமே தமிழ்; தங்களுடைய நீண்டகை தமிழுக்குக் கிரீட மணிவிக்கும் கைகள்; எடுத்து வைத்து நடக்கும் ஒவ்வொரு பாதமும் காலடியும் தமிழ்த்தொண்டு புரிவதற்காகவே எடுத்து வைக்கும் சிறந்த பாதங்களாம்; தங்கள் பார்வை ஒவ்வொன்றும் ஒப்பற்ற செந்தமிழாம் தாய்க்கு அழகு செய்து ஒளியுடன் விளங்கக் காணும் கண் விழியாம்; தாங்கள் மேற்கொள்ளும் ஊக்கமும் உற்சாகமும் தூய்மை மிக்க தமிழுக்கு நன்மை விளைப்பதேயன்றோ! பொன்னம்பலத்துள் நடமிடும் நடராசப் பெருமான் கருணைப் பெருக்கால் தங்கள் உடல் நலம் சிறந்து பன்னெடுங் காலம் வாழ்வீராக.

நின் கை - ஆறும் வேற்றுமைத்தொகை. நீள்கை - வினைத் தொகையாகவும் பண்புத் தொகையாகவும் கொண்டு பொருள் காண இடமுண்டு. தமிழ்க்கா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். செந்தமிழ்த்தாய் - உருவகம். தமிழ் அமுதச் சுவை - உருவகம். விளை செந்நா - வினைத்தொகை, செந்நா - பண்புத் தொகை. வாழ்க என்ற சொல் பன்முறை வாழ்த்துப் பொருளில் வந்தமையான் சொற்பொருள்பின்வருநிலையணி என வும் பொருந்தும். பல்லாண்டு - "பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத் தாண்டு" [திவ்வியப் பிரபந்தம்].

மூலைக் கிடையே கிடந்துமங்கி
　　மூளுந் தீயால் உளைப்பட்டும்
மொசியும் சிதலின் வாய்ப்பட்டும்
　　முறிந்தும் சிதைந்தும் உருக்குலைந்த
ஓலைப் பிரதி யெங்கெங்கே
　　உளவென் றுய்ந்து மெய்வருத்தம்
உன்னு துணவும் கொள்ளாமல்
　　உறங்கா தவற்றைக் கண்டபொழு
தாலைக் கரும்புபோல் உள்ளம்
　　அழுங்கி எடுத்துத் தொகுத்தாய்ந்தே
ஆரும் பொருளை உணர்ந்தச்சில்
　　அமைத்தே அழகிட் டரியபல
நூலைக் கொடுத்தாய் தமிழ்மகன்
　　தான்நோற்ற பயனைக் கொடுத்தாயால்
நுண்மாண் நுழைநற்புலஞ் சிறந்தோய்
　　நுனித்தற் கரிது நின்புகழே　　258

மூலை முடுக்குகளில் மக்கியும் நெருப்பி லகப்பட்டுப பாழ்பட்டும் கறையானலுண்ணப் பட்டும் முனைகள் ஒடிந்து நல் வடிவம் மாறியும்

தண்டமிழ் நிலையமாம் தங்கள் நாவினால்
பண்டித மணியெனப் பகரப் பெற்றனன்
மண்டிணி யுலகில் யானெய்து மாட்சியுள்
உண்டுகொ லிதனினு முயர்ந்த தொன்றரோ. 259

—கதிரேசச் செட்டியார்

இன்தமிழின் இருப்பிடமான தங்கள் வாயால் 'பண்டித மணி' யென்று வாழ்த்தப் பெற்றேன். மண்ணுலகில் யான் பெற்ற சிறப்புக்களுள் உயர்வு இதனினும் வேறு உண்டோ!

தண்டமிழ் - தண்மை + தமிழ்; மண் + திணி - மண்டிணி. "மண்டிணிந்த நிலனும்" (புறம் 2)

"மண்டிணி ஞாலத்து மன்னுயிர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே" (புறம்)

**டாக்டர் ஐயரவர்கள் மீது**
**திரு. கி. வா. ஜகந்நாதய்யர் அவர்கள் பாடியது.**

தலையளித்த செந்தமிழ்த்தாய்
தாங்கியொளி மழுங்கியபல்
விலையளித்த கலைகள்பல
மீண்டொளிரச் செய்வித்தான்
நிலையளித்தான் மாணவர்க்கு
நிலமிசைதண் டமிழென்னுங்
கலையளித்தா னென்றலன்றிக்
கழறுவது முளதேயோ, 260.

மேன்மைபெற்ற செந்தமிழ்த்தாய் த்ாங்கிய புகழ் மங்கிய, பல விலையாகத் தந்த கலைகள் யாவும் திரும்ப ஒளி பெறுமாறு செய்து வைத்தவன். மாணவர்கள் உயர்ந்த நிலையில் வரும்படி நல்ல கல்வி தந்து ஓங்குமாறு செய்தான். இந்நிலவுலகில் இனிய தமிழ் (கலையை) நூல்களனைத்தையும் தமிழுலகத்துக்குக் கொடுத்தான் என்று கூறுவது தவிர வேறு கூறவும் சொற்கள் இருக்கின்றனவோ?

ஐயரவர்களாலேயே தமிழ் நூல்கள் பல வெளிக்கொணரப் பட்டன என்பது பொருள். ஒளி மங்கிய பல்கலைகள் மறைந்திருந்த நூல்கள். திரு-ஐயரவர்கள் தோன்றித் தமிழுக்காகவே பாடு பட்டுப் பற்பல வகை நூல்களைக் கொணர்ந்தார். அதன் பிறகு ஒளி மங்கிய நிலை மாறி, ஒளி ஒளிர வழியாயிற்று.

நிலமிசை — "மலர் மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடு வாழ்வார்" — குறள் (க. வாழ்த்து 3).

## (குன்னூர்) முகிலவாம் புள்ளனையன் வ.சீ. மருணிக்கியழுகன்

திட்பமுறு முத்தமிழ் வித்தகரே சீர்த்தியரே
பெட்பினெடு பேணியென் னஞ்சலியைக்-கட்டுரையும்
என்னகத்தி லென்றும் எழுந்தருளி வைகுவீர்
இன்றுதவி எற்குச்செ யும். 261

முத்தமிழாற்றலும் மிக்க அறிஞ! சீர் சிறப்புடையோய்! அன்புளத்துடன் என்கை கூப்பலை ஏற்று, என் சொல்படி தாங்கள், எப்போதும் என் வீட்டில் வந்து தங்குவீர். தயையுடன் இவ்வுதவியை எனக்குச் செய்யுங்கள்.

முத்தமிழ் – மும்மை + தமிழ். 'சீர்த்தி மிகு புகழ்' (தொல்காப்பியம்) பெட்பு - அன்பு. எற்கு - என் + கு. பேணி - "பேணித் தொழு மடியவர்" (அப்பர் தேவாரம்). செயும் - செய்யும் என்னும் முற்று, முன்னிலைக் கண் வந்தது. அஞ்சலி - கை கூப்பல் அஞ்சல் என்றது, எதிர் மறைச்சொல் வழியே வந்த இச்சொல், வரும் விருந்தினருக்குப் பயம் தோன்றாமல் வரவேற்கக் கை கூப்பும் செயலுக்கு ஆகி வந்ததாக இருக்கலாமோ என்று தோன்றுகிறது.

பதிற்றுப்பத் திற்குச்செம் பாகங் கழித்துப்
பதிற்றுப்பத் தும்பரி பாவும் - பதிப்புள்ள
கொங்குவெண் மாக்கதையோ டோரைங் குறுநூறு
மிங்குவரச் செய்வீர் எனக்கு. 262

பதிற்றுப்பத்திற்குரிய தள்ளுபடியைக் கழித்து, பரிபாடலும் புதிதாகப் பதிப்பித்துள்ள பெருங்கதையும் ஐங்குறுநூறும் எனக்கு வருமாறு அனுப்பிவைத்து உதவுங்கள்.

வல்லாங்கு நானிவண் வண்டமிழைக் கற்றுய
ஒல்லும் நொடையீந்து கொள்ளப்பொன்-னொல்கியதால்
நல்குரவில் நல்குரவே நான்முகனே பண்பிலனல்
நல்வாய்ப்பு நண்ணிற் றினி. 263

வல்ல + ஆங்கு - வல்லாங்கு. இவண் - இங்கு. தமிழின் வள்ளல் தன்மை புலப்பட 'வண்டமிழ்' என்றார். பொன் ஒல்கியது எனப் பிரிக்க, வல்லாங்கு - முடிந்த அளவு. நல்குரவில் நல்குரவு - வறுமையில் வறுமை. நல்ல ஆசிரியராயினும் வறுமையுட

னுள்ளேன். ஈந்து, கொள்ள என்ற சொற்கள் இரண்டும் அடுத்தடுத்து நயந் தோன்ற நின்றன. 'கொள்வதுங் கொடுப்பது மாயுள்ளது உலகம்' என்றார் பிறரும். "ஈத்துவக்கும் இன்பமறியார் கொல் தாமுடைமை, வைத்திழக்கும் வன்க ணவர்" (குறள்),

"ஈயென இரத்த லிழிந்தன்று" அதனெதிர்,
ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று ;
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன்று ; அதனெதிர்
கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று" (புறம் 204)

நொடு - நொடை - விலை. — ஐகார ஈற்றுத் தொழிற்பெயர். ஒல்லும் - "ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்" (குறள்)

இங்குச் சிறந்த தமிழ் கற்று முடிந்த அளவு பொருள் தந்து கற்கச் செல்வமில்லை. யான் ஆசிரியன். வறுமை யுற்றேன். இனி எனக்கு நற்காலம் வந்தது. இப்போது ஓரளவு வசதியுடனுள்ளேன்.

வேண்டிய வேட்டாங்கு நின்பாற்பெற் றேமென்று
வேண்டினவர் சீர்பாடக் கேட்டியான் - வேண்டுகிறேன்
வேளாவும் வேள்மணியும் வேள்பாரி யேந்தலும்நீ
வேளாவோய் செவ்வேளும் நீ. 264

வேண்டியவற்றை விரும்பியபடி உன்னிடம் பெற்றோம் என்று அன்பர் சிறப்பாய்ச் சொல்லக் கேட்டு, யான் உம்மை வேண்டுகிறேன். வேளாவிக் கோமான் வேள் மணி வேள்பாரி ஆகிய வள்ளல்களாகிய ஆண்களிற் சிறந்த வள்ளல்களும் அனைவரும் சேர்ந்த வேளாக நீ ஆவாய். அதனுடன் முருக வேளும் ஆவாய் நீ.

செவ்வேள் - முருகன். ஐயரவர்களுக்கு முருகன் பெயரான சாமிநாதன் என்ற பெயர்ப் பொருத்த மமைந்திருக்கும் நயங் கண்டு இவ்வாறு கூறப்பட்டது. வேளா-(வேள் ஆ) தேவ லோகப் பசுவான காமதேனு. வேள் மணி - சிந்தாமணி. விரும்பியது தருவது. வேள் பாரி - கபிலரின் நண்பர்; பறம்பு மலை ஆண்ட வள்ளல். வேளா-வோய்-உருவிலியான மன்மதனும், முருகனும் நீ. கேட்டியான் - வன்றொடர்க் குற்றியலுகரம் குற்றியலிகரமாக அமைந்தது. வேட்ட ஆங்கு - வேட்டாங்கு எனப் புணர்ந்தது. சீர்பாடி - "சீர்பாடக் கேட்டியாம் மகிழ்ந்தேலோ ரெம்பவாய்" (திருவெம்பாவை). (வேள் என்ற சொல் பன்முறை ஒரே பொருளில் வந்தமையான்,

சொற்பொருள்பின் வரு நிலையணி.

உயிரெழுத்தான (ஏ) என்பதை மட்டும் கொள்ளின் முற்று மோனை; வேள் என்று உயிர்மெய் எழுத்தாய்க் கொள்ளக் கூழை மோனையாம். இப்பாடலை உயர்வு நவிற்சி யணியாகவும் கொள்ள இடமுண்டு.

### ஐயரவர்களுக்கு ஜக வீர பாண்டியனுர் எழுதிய பாடல்

[திருக்குறள் குமரேச வெண்பாவுடன் யெழுதி அனுப்பிய பா இது]

தேனேடு மொழியோடு திகழ்தமிழின்
சுவை நுகர்ந்து தெளிவு கொண்டு
வானேடு புகழ்மலிந்து மதிப்புறுநின்
மதிப்புரையின் வரவு நோக்கி
யானேகை யுடன்விடுத்த இந்நூலை
ஆர்வமுட னுய்ந்து கற்றோர்
ஊனேடே உளமுருக்கு முனதுரையை
யருள்வையென வுவந்துள் ளேனே. 265

தேன் போலும் மொழியாய்! விளங்கும் தமிழின் சுவையை யுண்டு தெளிவாய். வானளாவப் புகழ் மிக மதிப்புப் பெறும் உன் மதிப்புரையின் வரவு பார்த்து நான் மகிழ்வுடன் அனுப்பிய இந்த நூலை ஆர்வத்துடன் ஆராய்ந்து கற்றவர் ஊண், உடை இரண்டையும் உருகுவிக்கும் கருத்தினை எழுதி யருள்வாய்.

### சி. வை. தாமோதரம் பிள்ளை இறந்த பொழுது உ. வே. சாமிநாதையர் பாடிய இரங்கற்பா

தொல்காப் பியமுதலாந் தொன்னூல்களைப்பதிப்பித்
தொல்காப் புகழ்மேவி யுய்ந்தபண்பி – னல்காத
தாமோ தரச்செல்வன் சட்டகநீத் திட்டதுன்பை
யாமோ தாமியம்ப வே. 266

தொல்காப்பியம் முதல் பழைய நூல்களை அச்சிட்டுக் குறைவற்ற புகழுடன் பண்பினையுடைய தாமோதரச் செல்வன் உயிர் நீத்த துன்பத்தினைச் சொல்ல என்றால் முடியுமோ? முடியாது.

## மதுரை ஜில்லா அநுமந்தன்பட்டி மதுரகவி ஸ்ரீநிவாஸ ஐயங்கார் பாடியது

பலகலையு முணர்ந்துதவு மீனாட்சி
சுந்தரமால் பாலன்பாக
லலகியனா லிலக்கணநூ லாதியுள
வெந்நூலு மறிந்தோன் சென்னைத்
தலைமைபெறு தமிழ்ப்புலமைத் தாடாள
ரெவரிடத்துந் தயையான் மிக்கோன்
புலவரெலா முடிசூடிப் போற்றிசெய்
நாற்றிசையும் புகழான் மிக்கோன். 267

பலகலைகளையும் கற்றுணர்ந்து மாணவர்களுக்கு அவற்றை நன்ருக உதவும் மீனாட்சி சுந்தரம் பிள்ளை என்ற பெருமையுடையவரே அன்பாய், குற்றமற்ற இலக்கண நூல் முதலான எல்லா நூல்களையும் கற்றுணர்ந்தவன்; சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் புலமை நடத்திய மிக்க முயற்சியாளன். எல்லாக்கருணையும் நிரம்பியவன். புலவர் அனைவரும் முடிசூடிப் புகழ எல்லாத் திசைகளிலும் புகழால் நிரம்பப் பெற்றவன்.

மீனாட்சி சுந்தரன் – இவர் திரிசிபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை எனப்படுவார். நினைத்த போதெல்லாம் கவிபாடும் திறம் பெற்ற மகான். வித்துவான் தியாகராஜ செட்டியார், டாக்டர் சாமிநாதையர் போன்ற பெயர்பெற்ற வித்துவான்கள் இவரிடம் கல்வி பயின்றவர்களுள் ஒரு சிலராவர். இன்னும் பலருண்டு. திருவாவடுதுறை ஆதீன வித்துவானுக விளங்கியவர். இவரது சரித்திரம் இரு பாகங்களாக டாக்டர் ஐயரவர்களால் முன்பு வெளியிடப்பட்டது.

எ+நூல்-எந்நூல். அலகு-குற்றம். சென்னைத் தலைமை பெறு தமிழ்ப் புலமைத் தாடாளன்-சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். டாக்டர் ஐயரவர்கள் பணியாற்றினுர். அதன் அடையாளமாகக் கடலை நோக்கினுற்போல் அவருக்குச் சிலை வைக்கப்பட்டிருக்கிறது. அவர் பட்ட அரும்பெரும் பாட்டின் அடையாளமாகச் சிலப்பதிகாரக் காவியத்தலைவி கண்ணகி சிலையும் அவரைப்பார்த்தவண்ணம் அமைந்துவிட்டது. எவரிடத்தும் தயையான் மிக்கோன் - மாணவர், ஆசிரியர், புலவர், பொது மக்கள் உற்ருர் றவினர் என்ற அனைத்து வகையினரிடமும் தயையுடையவராய்

விளங்கியவராக இருந்தார். நான்கு+திசை - நாற்றிசை. மிக்கோன் - குறிப்பு வினையாலணையும் பெயர். "ஈ, தா, கொடு மூன்றும் இழிந் தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை"-(நன்னூல் சூ.407). இவரது தமிழ்த் தொண்டு எங்கும் பரவியமையால் எங்கும் தமிழைப் பற்றிப் பேசும் போது இவரது புகழ் மணம் வீசத் தொடங்கி மிகுந்த பெருமையுடையதாகியது.

[பெரும்பண்ணையூர் மிராசுதார் A. M. பெரியசாமி முத்தையா உடையாரவர்கள் 25-5-1929ல் ஐயரவர்களுக்கு, எழுதிய பாடல்]

பானுவன் றிப் பதும மலருமோ
பாலையன்றிச் சிறுர்வளர் வார்களோ
ஞானமன்றியோர் நற்கதி கூடுமோ
நாதனன் றி யுலக முதிக்குமோ
தானமன்றிச் சீர்செல்வம் தழைக்குமோ
சாமிநாத தயாநிதி நீயலால்
ஆன செந்தமிழ்ச் சங்க மணக்குமோ
அரிய நின்புகழ் பாடித் துதிப்பேனே. 268

சூரியனின்றித் தாமரை மலருமோ? இளமைப் பருவத்தில் பாலின்றிக் குழந்தை வளருமோ? ஞானமில்லாது நல்வழியமையுமா? தலைவனில்லாது உலகு நடக்குமா? தானமில்லாமல் செல்வம் செழிக்குமா? சாமிநாத! தயையின் இருப்பிடமே! நீ இல்லாமல் செந்தமிழ்ச் சங்கம் மணம் வீசுமா? அதனால் உன் புகழ் நோக்கி உன்னைப் பாடித் துதிப்பேன்.

பாலை - ஐசாரியை. பாலையென ஒரு சொல்லாய்க் கொண்டால் இளமை எனப் பொருள்.

**லயோலா காலேஜ் தமிழ் மாணவர்கள் பாடியது**

திணை — பாடாண் துறை — வாழ்த்தியல்

ஆசிரியப்பா

புலத்துறை முற்றிய நலத்துறை நாவல!
கற்றுள நூல்களுள் உற்றுள பொருள்வயின்
ஐயமும் திரிபும் அணுவும் இல்லோய்!
தோலா நூலா சிரியன் மேலோன்
அவனின் இனியன் அதனுரை யாளன்
அவனினும் இனியன் அந்நூல் பதிப்போன்
என்றுளங் கொண்டு நன்றுபல தருஉம்

இரும்பனை யேட்டு அரும்பொருள் நூல்களை
உரையுடன் உதவி உரைபெறு நும்மைக்
காண்டொறும் காண்டொறும் தூண்டுறும் எம்முளம்
அறியாச் சிறியேம் குறிக்குமா றெங்ஙன் ?
'அமிழ்தினு மினியது தமிழ்மொழி' யென்னும்
வாய்மையை விளக்கிய தூய்மை யாள !
அல்லும் பகலும் ஒல்லும் வகையால்
தாள்களிற் பயின்ற ஆள்வினை யின்றி
வியப்போர் பலரால்; நயப்போர் சிலரால்
நுந்தம் உயிர்ப்பு நுண்தமிழ் உயிர்ப்பே;
பேசுவ வெல்லாங் காசில் தமிழே.
எல்லா மாகிய இறைதிரு வருளால்
நரைதிரை மூப்பின் நலிவுநண் ணாது
மன்னுக பெரும நிலமிசை யானே. 269

அறிவு நிரம்பிய நலமிக்க புலவ! பயின்ற நூல்களுள் அமைந்துள்ள பொருள்களிடத்துச் சந்தேகம், மாறுன எண்ணம், சிறிதும் இல்லாதவரே! தோல்வியில்லாத நூலாசிரியன்; மேம்பட்டவன் அவனைவிட இனியவன் அதற்கு உரை காண்பவன். அவனினும். சிறந்தவன் அந்த நூலைப் பதிப்பிப்போன் என்று கொண்டு, நன்மைகளைத் தரவல்ல, கரிய பனையேடுகளிலுள்ள சிறந்த பொருள்களையுடைய நூல்களை உரையுடன் உலகுக்கு (அச்சிட்டுப் படிக்கும்படி உதவி, பலராலும் புகழப் பெறும் உம்மைக் காணக்காண எமது உள்ளத்தில் உற்சாகம் மேலிடுவதை அறிவால் சிறிய நாங்கள் எப்படி எடுத்துச் சொல்லுவோம். 'அமுதினும் சிறந்தது தமிழ்' என்ற உண்மையை விளங்கச் செய்த பெரியோய்! இரவுபகல் விடாமல் நூல்களில் தாங்கள் செய்துள்ள முயற்சிகளைக் கண்டு ஆச்சரியப்படுவோர் பலர்; விரும்புவோர் சிலர். உங்கள் மூச்சு நுணுக்கமான தமிழ்த் துடிப்பே. பேசும் பேச்செல்லாம் குற்றமற்ற தமிழைப் பற்றியே. எல்லா மாக விளங்கும் இறைவன் திருவருளால் நரை திரை மூப்பு இவற்றால் துன்புறாது உலகில் சிறந்து விளங்குக.

புலம் - அறிவு; பொருள் வயின் - வயின் ஏழனுருபு. தோலா - ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம். தரூஉம் - உயிரளபெடை. இரும்பனை -- கரிய பனை. காண்டொறும் காண்டொறும் - அடுக்கு. வாய்மை - உண்மை. ஆள்வினை - முயற்சி. பலர் சிலர் - முரண்

## உ., வே. சாமிநாதையர் மீது பாடியா

அறுசீர்க்கழி நெடியாசிரிய விருத்தம்

முக்குல மேத்து முதற்குல மாகி
மொழியுநான் மறைப்படி முத்தி
மிக்குல விடச்செய் வேங்கட சுப்பிர
விப்பிர குலசிரோ மணிசெய்
எக்குவ லயத்துஞ் சீர்த்திசால் சாமி
நாதசற் குருவிலக் கணத்தால்
புக்கவென் னுளத்திற் புகட்டின
தற்றோர்புட் களேபுரிந்ததொப் பாமே 270

அரசர், வணிகர், வேளாளர் என்ற முக்குலத்தாரும் போற்றும் முதன்மை வாய்ந்த குலமான அத்தணர் குலமாய். மொழிகின்ற நான்குவே தங் கூறுகின்றபடி, முத்திமிகுந்து (உலவிட) அமைய வெங்கடசுப்பன் என்ற அந்தணர்குலத் தலைமுடிமணி போல் விளங்குபவரின் மகன். எவ்வுலகத்தும் புகழ் மிகுஞ் சுவாமிநாத நற் குருவே! இலக்கணத்தினால் புகுந்த என்னுளத்தில் கற்பித்தது அன்று ஓர் பறவையைக் காத்ததற்குச் சமமாம்.

அன்று + ஓர் - எனப் பிரிக்க. சிலம்பு + அதிகாரம் - சிலப்பதிகாரம் என்றாற் போல; "மென்றொடர் மொழியுள்" எனத் தொடங்கும் நன்னூல் (சூ, 186) 'மன்னே' என்ற மிகையால் அன்று + ஓர் -அற்றோர் என வரும் என்க.

குயில் காகம் என்பன இரண்டும் பறவையினங்கள். இரண்டும் முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும் வகையின. குயிலுக்குக் குஞ்சு பொறிக்கத் தெரியாததால் காகத்தின் கூடுகளில் தன் முட்டைகளைக் கொண்டு வைத்து விடும், காகம் வேறுபாடு அறியாது குஞ்சு பொறித்து, இறக்கை முளைக்கும் வரை பாதுகாக்கும். இறக்கை முளைத்தவுடன் குயில் தனியாகப் பறந்து போய் விடும். இதனையே 'அற்றோர் புட்களே புரிந்த தொப்பாம்' என்ற தொடர் விளக்கும் என்க.

சற்குரு - ஆசாரியர்கள் பல வகைப்படுவர். ஆத்மார்த்தமாக ஆத்ம விசாரத்தைப் பற்றி விசாரிக்கச் சொல்லிக் கொடுக்கும் பெரியவர்கள் சற்குருவாவார் என்பது இங்கு உணர்க. குருவருளே ஒருவன் முன்னேற வழி என்பதை இப்பாடலாசிரியர் நன்றியறிதலோடு உணர்த்தும் முறை இன்புறத் தக்கது.

விதியே புகழ்ந்திடு விற்பன
நீயும் விழைவுகொடிப்

பதியே யெமக்கருள் பாலிக்க
வந்தனை பார்புகழ
மதியே கொளுங்கவி வல்லவ
னேதக்ஷி ணாத்தி யகலா
நிதியே சிறப்பொடு நீடூழி
வாழி நிலமி சையே 271

பிரமனே புகழும் அறிஞ! நீயும் விரும்பி இவ்வூரில் எங்களுக்கு அருள் செய்ய வந்தாய். உலகு புகழ அறிவுடைய கவியில் வல்லவனே! தாக்ஷிணாத்திய கலைச் செல்வமே! சிறப்பாய் நெடுங் காலம் இவ்வுலகில் வாழ்க.

சென்னை சூளை, வள்ளுவர் இலக்கிய வட்டத்தின் சார்பில் தமிழ்ப் புத்தாண்டின்போது மு. கவியமுதனார் தலைமையில் நிகழ்ந்த பாட்டரங்கில் தமிழ் காத்த சான்றோர் உ.வே.சா. என்ற தலைப்பில்

கவிஞர் வி. மு. உலகநாதன் பாடியது

## பண்புடையார் ஐயர்பேர் பாடு !

### கவிஞர் வி. மு. உலகநாதன்

[ நேரிசை வெண்பா ]

அன்பர் சுவாமிநாத ஐயர் அருந்தமிழ்
இன்பச் சுவடிகளை எங்கெங்கோ - சென்றேகிக்
கண்டார் பதிப்பித்தார் கண்ணும் தமிழ்நாட்டின்
பண்புயர்த்தி வைத்தார் பரிந்து ! 272

இன்பத் தமிழ்த்தாயே! ஏற்றமுற ஐயர்போல்
நன்குழைத்தார் யாருள்ளார் நானிலத்தில்-குன்றனையார்
தொண்டால் உயர்ந்தார் சுடர்அடியில் நெஞ்சுவந்து
தண்டமிழ்ப் பாமாலை சாற்று ! 273

சுவாமிநாத ஐயர்தம் தொண்டுணர்ந்தன் னாரைச்
சுவாமியென்று போற்றிநிதஞ் சொல்லி-அவாவியே
பாட்டிசைத்து நாளும் பரவுதலே செய்ந் நன்றி
காட்டுதலே யாகும் கடன் ! 274

துன்பத்தால் சோராமல் தூர நெடும்பயணம்
சென்றார் சுவடிகளைத் தேடினார் - இன்புற்றார்
கண்டார் இலக்கியக்கற் கண்டை நமக்களித்தார்
பண்புடையார் ஐயர்பேர் பாடு ! 275

ஆர்த்திசைக்கும் வண்டுகளே மலர்கள் தேடி
அவற்றிலுள்ள தேன்சுவையை மாந்திப் பின்னர்
சேர்த்துவந்து கூடுகட்டி மாந்தர் துய்க்கச்
செய்தல்போல் தமிழ்தாத்தா ஆர்வத் தாலே
ஊர்தோறும் மிகவிழைந்து சென்று மேலாம்
ஒண்டமிழ்நற் சுவடிகளைத் தேடிக் கண்டு
பேர்பெற்ற சங்கத்தின் இலக்கி யங்கள்
பெருமையுறப் பதிப்பித்தே அளித்தார் வாழி! 276

இன்பமுறச் சைவநெறி துதித்திட் டாலும்
இதயத்தால் பிறசமயம் மதிக்கும் பண்பால்
அன்புணர்வால் முதலில்மணி மேக லையை
அழகுறவே பதிப்பித்துத் தந்து மேலாம்
சொன்னயமும் பொருள்நயமும் விளங்கு மாறு
தூய்மையுற எளியவுரை எழுதி யாரும்
இன்னொருவர் துணையின்றிப் புரிந்து கொள்ள
இனிதளித்த "உ. வே. சா." சான்றோர் வாழி! 277

குன்றெடுத்தே ஆக்களினை ஆயர் தம்மைக்
கோபாலன் காத்ததைப்போல் மிகவி ழைந்தே
அன்பெழுந்த மனத்தாலே தமிழைக் காக்க
ஆர்வமுடன் பாண்டவர்க்கே தூது சென்று
நன்மைசெய் கண்ணன்போல் பாதம் நோக
நடந்துசென்று சுவடிகளை அலைந்து தேடி
இன்பமருள் முச்சங்க நூல்க ளென்றே
எழிலாகப் பதித்தளித்த நாதர் வாழி! 278

கூற்றுவன்கைப் பட்டழியா வண்ணம் ஓடிக்
கூத்தபிரான் மார்க்கண்டர் தமைக்காத் தல்போல்
ஊற்றமுடன் கரையான்வாய்ச் சிக்கி டாமல்
உயர்தமிழின் சுவடிகளைக் காத்த ஐயர்
ஆற்றலினால் பதிப்பித்த இலக்கி யங்கள்
அழகுறவே நமக்களித்த சான்றோர்! என்றும்
போற்றுதற்கே உரியவராம் தமிழ்தாத் தாவைப்
புனிதரெனத் தெய்வமெனப் பதித்து வாழ்வோம் 279

நெருப்பிலிட்டும் நீரிலிட்டும் தமிழின் மாட்சி
நிலைத்திலங்கும் மேன்மையினை விளக்கஞ் செய்து
திருஞான சம்பந்தர் போற்றி வந்த
தீந்தமிழைச் செல்லரித்து மாய்த்தி டாமல்
விரும்பியேதாம் ஊர்ஊராய்ப் பலநாள் சென்று
வீடுகளில் பரண்மீது கேட்பா ரற்றே
இருந்திட்ட சுவடிகளை இலக்கி யத்தேன்
இன்பமென நமக்களித்த ஏந்தல் வாழி ! 280

பயிர்வாடி வதங்காமல் வானின் மேகம்
பயன்மழையைப் பொழிதல்போல் நன்மை செய்ய
உயிரனைய இலக்கியமாம் சுவடி யாவும்
உதவாமல் கரையானால் அழிந்தி டாமல்
வெயிலெனக் கானலெனப் பார்த்தி டாமல்
வேதனைகண் டஞ்சாமல் சோர்வில் லாமல்
துயிலாமல் கண்டுகாத்துத் தமிழ்த்தாய் தன்னைத்
துலங்கவைத்த "உ. வே. சா." ஐயர் வாழி ! 281

அறநெறியைத் தன்னகத்தே பெற்று மிக்க
ஆற்றலினை உடையதாகி ஆழ மான
திறத்தினையும் அறிவியலின் நுட்பத்தையும்
தெளிவினையும் கொண்டிலங்கும் தமிழே என்றும்
இறவாமல் ஒளிர்வதனை அறிந்தே அந்த
இனியமொழி நலமோங்கத் தொண்டு செய்த
நிறைகுடமாம் சுவாமிநாத ஐயர் மண்ணில் 282
நிலைத்திட்டார் தமிழ்மொழிபோல் சிறந்தார் வாழி.

வளர்க ஐயரவர்கள் தொண்டு

வாழ்க சிறக்க.

# செய்யுள் முதற் குறிப்பகராதி

## செய்யுள் முதற் குறிப்பகராதி

## செய்யுள் முதற் குறிப்பகராதி

# ஐயரவர்கள் பாடல்களுக்கும் ஐயரவர்களைப் பாடிய பாடல்களுக்கும்

## செய்யுள் முதற் குறிப்பு

# அருஞ்சொல் அகராதி

